ஸ்ரீ
ஸ்ரீமதேராமாநுஜாயநம:



# உபதேசரத்தினமாலை.

ஸ்ரீசைலேஸ தயாபாத்ரம் தீபக்த்யாதி குணர்ணவம்
யெதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமா தரம்முநிம்.

தனியன்.

## கோயிற்கந்தாடையண்ணன் அருளிச்செய்தது.

கட்டளைக் கலித்துறை.

முன்னந் திருவாய் மொழிப்பிள்ளை தாமுப தேசித்தநேர்
தன்னின் படியைத் தணவாத சொல்மண வாளமுனி
தன்னன் புடன்செய் யுபதேச ரத்தின மாலைதன்னைத்
தன்னெஞ்சு தன்னில் தரிப்பவர் தாள்கள் சரணமக்கே.

பதவுரை.

முன்னம்—பூர்வத்தில், திருவாய்மொழிப்பிள்ளை தாம், உபதேசித்த - உபதேசித்தருளியதான, நேர்தன்னின் - தத்துவார்த்தங்களின், படியை - பிரகாரங்களை, தணவாத - ஒழிக்காத, (எப்போதும் அநுஸந்திக்கிற) மணவாளமாமுனி - ஸ்ரீமணவாளமாமுனிகள், தன் - தம்முடைய, அன்புடன் - லோகோஜ்ஜீவநார்த்தமான பிரீதியுடனே, செய்-அருளிச்செய்த, உபதேசரத்தினமாலையென்ற இந்நூலிற்சொல்லப்பட்டுள்ள அர்த்தவிசேஷங்களை, தம்-தம்முடைய, நெஞ்சுதன்னில் - மனத்தில், தரிப்பவர் - நிலைக்கச் செய்யு[illegible] - திருவடிகள், நமக்கு, சரண்-அடைக்கலமாகும்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# உபதேசரத்தினமாலை

## வ்யாக்யாந அவதாரிகை.

பெரியஜீயராகிறார், "பின்னானார்வணங்குஞ்சோதி" என்கிறபடியே பின்புள்ளாரு மாச்ரயிக்கும்படி, அக்கரையராய் அவற்றுத ஸஹஜ தாஸ்யரான நித்யஸூரிகளி லொருவர் வந்தவதரித்தா ரென்னும்படியான தரத்தையுடையராய்த் திருவாய்மொழிப் பிள்ளை திருவடிகளிலே யாச்ரயித்து, "தேவுமற்றறியேன்" என்னும்படி ததேகநிஷ்டராய் அவருபதேசத்தாலே திருவாய்மொழி தொடக்கமான அசேஷ திவ்யப்ரபந்தங்களினுடையவும், அதின் தாத்பர்யமான அசேஷ ரஹஸ்யங்களினுடையவும் அர்த்தத்தை யதிகரித்து க்ருதார்த்தராயிருப்பாராய், அந்தப் பிள்ளை தாமே குருபரம்பரையாகிற ஹாரத்துக்கு நடுவே நாயகரத்நமென்னும்படி ஔஜ்வல்யத்தை யுண்டாக்கும்படியான உடையவர் திருவடிகளையே உமக்கொரு துணையாகப் பெற்றிருமென்று உகப்பின்மிகுதியாலே காட்டிக்கொடுக்க, அத்தாலே அவர் திருவடிகளில் அபிப்ராவண்யத்தை யுடையராய், ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் அருளே தமக்கு விளைநீராம்படியாக வர்த்தித்துப் போருமவராய், அதனுள பராங்குச பரகால பட்டநாதாதிகளுடையவும் நாதயாமுந யதிவராதிகளுடையவும் பாவத்தைத் தமக்கோராகாரத்தாலே யுடையராம்படி யிருப்பாராய், ஸகல ஜீவலோக ஸமுஜ்ஜீவநைக தத்பரராய், தம்முடைய பரஸம்ருத்யைக ப்ரயோஜநதையாலே பரம ரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் ஸ்வப்ரபந்தங்களிலே ப்ரகாசிப்பித்தருளின பெருமையையுடையராய், "மணவாளமாமுனியை யினியொப்பார்களில்லை யுலகேழிலு மும்பருநிலும்" என்னும்படி உபய விபூதியிலும் தம்முடைய சேஷத்வாதி குணங்களுக்கு உபமாநமின்றி

யிலே யிருக்கிற உச்ச்ராயத்தையுடையரா யிருப்பாராய், ரங்கமங்கள ஸம்பத்தாய்க்கொண்டு, "திருவரங்கந்திருப்பதியே யிருப்பாக" எழுந்தருளியிருப்பாராய், அத்தாலே கோயில் மணவாள மாமுனியென்று நிரூபகமாம்படி யிருப்பாரொருவரிறே.

ஏவம்வித மாஹாத்ம்யத்தை யுடையராயிருக்கும் வரவரமுனிவர்யரான ஜீயர், தம்முடைய பரமக்ருபையாலே ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும், அவதாரங்கள் அதீதகாலமாகையாலே "தெருளுற்றவாழ்வார்கள் சீர்மையறிவாரார் அருளிச்செயலையறிவாரார்" என்னும்படி அவர்களுடைய அவதார வைபவமும் உக்த்யநுஷ்டாநங்களும் ஒருவர்க்குந் தெரியாதபடி ஸங்குசிதமாய் வருகிறபடியையும் தத்காலத்திலே சேதநருடைய ஜ்ஞாந மாந்த்யத்தையும் தர்சித்தருளி, இனி இவர்கள் விஷயமாக ஆழ்வார்களுடைய அவதார ரஹஸ்யாதிகளென்ன, தத்ஸூக்திகளென்ன, ததுபயாபிஜ்ஞரான ஆசார்யர்களுடைய உகத்யநுஷ்டாநங்களென்ன இவை தொடக்கமான அர்த்தவிசேஷங்களை யெல்லாம் ப்ரகாசமாக்கி, ததங்வயமுகத்தாலே இவர்களை உஜ்ஜீவிப்போமென் றறுதியிட்டு இவ்வர்த்தவிசேஷங்களைக் கேவலம் உபதேசமாத்ரமாக ப்ரகாசிப்பித்தால் தத்காலத்திலவர்களுக்கொழிய பிற்காலத்திலவர்களுக்கும் உபஜீவ்யமாகை யரிதென்று தத்காலத்திலவர்களோடு பிற்காலத்திலவர்களோடு வாசியற எல்லாரு மறிந்து உஜ்ஜீவிக்கும்படி ப்ரபந்தமாம்படி பண்ணவேணுமென்று திருவுள்ளம்பற்றி அதின்பின்பு ஆசார்யர்களுடைய உபதேச பரம்பரா ப்ராப்தமான அர்த்தங்களை உபதேசரத்தினமாலையாகிற இப்ப்ரபந்தமுகேந ப்ரதிபாதித்தருளுகிறார். ஆகையிறே இதற்கு உபதேசரத்தினமாலை யென்று திருநாமமாயிற்று.

இதுதான் ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் தத்ஸூக்திகளினுடையவும் வைபவத்தை ப்ரதிபாதிக்குமதாகையாலே ஸகல ப்ரபந்த விலக்ஷணமுமாயிருக்கும். இதில் ப்ரதிபாதிக்கிற அர்த்தந்தான் திருமந்த்ரத்தில் ப்ரதிபாதிக்கிற அநந்யார்ஹ சேஷத்வாத்யாகாரத்ரய யுக்தருடைய வைபவமாய்த்து. ஆகையால் இதுக்கடி திருமந்த்ரமாயிருக்கும். திருமந்த்ரார்த்த நிஷ்டருடைய படியையிறே "பயிலுஞ்சுடரொளி, நெடுமாற்

கடிமை” யிலே பரக்கவுபபாதிப்பது. அத்தை யடியொத்தினதாயிறே “கண்ணிநுண்சிறுத்தாம்பு” இருப்பது. அதின் படியிறே நூற்றந்தாதி. அவை யிரண்டின்படியையும், ப்ரதிபாதித்த ப்ரபந்தமாயிற்று ஆழ்வார்கள் வைபவத்தையும் எம்பெருமானார் வைபவத்தையும் உபபாதிக்கையாலே. ஆகையால் இது சரமத்தில் சரமமாயிருக்கும். இனி இப்ப்ரபந்தோக்தரானவர்களில், ப்ரதாநரான ஆழ்வார்கள் திருநக்ஷத்ராதிகளை ஆசரிக்கைக்கடியென்னென்னில், ஆசார்யத்வத்தை யாசைப்பட்டு ஶ்ரீகீதையும் அபயப்ரதாநமு மருளிச்செய்த ப்ரதம குருவான ஸர்வேச்வரன், ஸம்ஸாரிகள் ஸம்ரக்ஷணார்த்தமாக இதர ஸஜாதீயனாய் வந்தவதரித்த ரோஹிணீ புநர்வஸ்வாதி நக்ஷத்ரங்களென்ன, சைத்ர ப்ரோஷ்டபதாதி மாஸங்களென்ன, யமுநா ஸரயூ தீரங்களான மதுரா அயோத்யாதி நகரங்களென்ன, இவை தொடக்கமானவை இதிஹாஸாதிகளிலே ப்ரதிதமாய்ப் போருகையாலும் அவ்வோபாதி இங்கும் தத்ப்ரதிபத்தியை உக்த்யநுஷ்டாநங்களாலே உபதேசித்து உஜ்ஜீவிப்பிக்கைக்காக வந்து, ஸர்வேச்வரனுடைய ஆகஸ்மிக க்ருபையாலே அவதரித்த இவர்களுடைய திருநக்ஷத்ர மாஸங்களில், ச்ரவணாதி நக்ஷத்ரங்களென்ன, ஆச்வயுஜாதி மாஸங்களென்ன, அயோத்யா மதுராதிகளோடே ஸஹபடிதமான காஞ்ச்யாதி நகரங்களென்ன, அவற்றோடே சேர்ந்த காவேர்யாதி நதிகளென்ன, இவை யெல்லாவற்றையும் அந்த இதிஹாஸாதிகளிலே “க்ருதாதிஷு ப்ரஜா–கலௌகலு பவிஷ்யந்தி” என்றும் “க்வசித் க்வசித்–கவசித் க்வசித்” என்று மிப்படி ஸூசிப்பிக்கையாலும் அதுக்குமேலே “மயர்வற மதிநலமருள” ப்பெற்ற மாஹாத்ம்யத்தாலே பக்தி பாரவச்ய ப்ரபந்நரென்னும் பேர்பெற்றிருக்கையாலும், அவனுடைய பற்றினால் தோற்றும் பதின்மராய் பகவதவதார விசேஷமாக பக்தாத்மநா அவதரித்தவர்க ளாகையாலும் அவனுகந்து வர்த்திக்கிற அர்ச்சாஸ்தலங்களான அகில திவ்யதேசங்களிலும், தாங்களும் அதுக்கநுரூபமான அர்ச்சாரூபங்களைப் பரிக்ரஹித்து, ஸேவித்துக்கொண்டு, அல்லாதார்க்கு ஸேவ்யராய்த் தங்களோடை ஸம்பந்தத்தாலே ஸர்வாத்மாக்களையும் உஜ்ஜீவிப்பிக்க வல்லராயிருக்கையாலும் இவர்கள் திருநக்ஷத்ராதிகளும் அவற்றோபாதி யாதரித்து உபலாலிக்கக் குறைவில்லை. இனி “ஆழ்

வார் திருமகளாராண்டாள்” தொடக்கமான மற்றை மூவரும் இவர்களுக்குப் பாதந்த்ராராய்ப் போருகையாலும், அவர்களி லதிசயிதமான வைபவத்தை யுடையராகையாலும், அவர்க ளவ தார கணனையில் இவர்க ளவதாராதி க்ரமங்களும், ஸஹபடிதமாய்த்து. இவர்களுடையவும் ஏற்றத்தையும் அறிந்து ஆதரித் துப்போரு மவர்களாகையாலே ஆசார்யர்களும் ஆதரணீயரா னார்கள்.

இனி “வேறாகவேத்தியிருப்பா” ரான ப்ரதமபர்வ நிஷ்ட ருடைய வைபவத்தையும், “மற்றவரைச்சாற்றி யிருப்பா” ரான சரமபர்வ நிஷ்டருடைய வைபவத்தையும் தத்ஸூக்திகளினு டைய வைபவத்தையும் ததுபயஸாரார்த்த ஸங்க்ரஹமான ரஹ ஸ்யத்தினுடைய க்ருத்யத்தையும் தத்ப்ரதிபாத்யாநுஷ்டாந சரம பர்வ நிஷ்டாக்ரமங்களையுமே தத்ப்ரபந்தாந்வய முடையவர்களு க்கு, ப்ரபந்நஜந கூடஸ்த ப்ரஸாதமடியாக ப்ராப்யஸித்தி யுண் டாம்படியையுஞ் சொல்லித் தலைக்கட்டுவதான அர்த்தவிசேஷங் களை ஸ்வநிஷ்டா கதநரூபேணவும், பரோபதேச ரூபேணவும் அருளிச்செய்யாநின்றுகொண்டு இந்தக் குருபரம்பரா வைபவ கதந முகத்தாலே குருகுலதுர்யரான தாம் ஸர்வர்க்கும் குருபரம் பராந்வய முண்டாய் உஜ்ஜீவிக்கும்படி பண்ணி யுபகரித்தருளு கிறார்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:
ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# உபதேசரத்தினமாலை வ்யாக்யாநம்.

முதல் பாட்டு.

எந்தைதிருவாய் மொழிப்பிள்ளையின்னருளால்
வந்தவுபதேச மார்க்கத்தைச்-சிந்தைசெய்து
பின்னவருங்கற்க வுபதேசமாய்ப்பேசுகின்றேன்
மன்னியசீர்வெண்பாவில் வைத்து.

பதவுரை.

எந்தை-எமது ஸ்வாமியான, திருவாய்மொழிப்பிள்ளை- திருவாய்மொழிப்பிள்ளையினுடைய, இன்-இனிமையான, அருளால்-விசேஷகடாக்ஷத்தாலே, வந்த-எனக்குக் கிடைத்த, உபதேசமார்க்கத்தை-உபதேச வரலாற்றை, சிந்தைசெய்து-சிந்தித்து, பின்னவரும்-எனக்குப் பிற்பட்டவர்களும், கற்க-அப்யஸிக்கும்படி, மன்னிய-நிலைபெற்ற, சீர்-சிறப்பையுடைய, வெண்பாவில்-வெண்பா என்னும் பாட்டில், வைத்து-அமைத்து, உபதேசமாய்-உபதேசமாக, பேசுகின்றேன்-சொல்லுகின்றேன்.

வ்யாக்யாநம்.

இதில் முதற்பாட்டு.—தமக்காசார்யரான பிள்ளையுடைய ப்ரஸாதத்தாலே க்ரமாகதமாய்வந்த அர்த்தவிசேஷங்களைப் பின்புள்ளாருமறிந்து, உஜ்ஜீவிக்கும்படி ப்ரபந்தரூபேண உபதேசித்து, ப்ரகாசிப்பிக்கிறோமென்று ச்ரோத்ரு புத்தி ஸமாதாநார்த்தமாக ப்ரதிஜ்ஞை பண்ணியருளுகிறார்.

(எந்தைதிருவாய் மொழிப்பிள்ளை) என்று தொடங்கி. அதாவது திருமலையாழ்வாரென்று திருநாமமான இவர்க்குத் திருவாய்மொழியிலுண்டான அத்யந்தாபிநிவேசமடியாகத் திருவாய்மொழிப்பிள்ளையென்று தேசந்திகழும்படியான திருநாமமாய்த் தன்கை. அது தோன்றத் "திருமலையாழ்வார் திருவாய்மொழிப் பிள்ளை" யென்று தாமே திருவுள்ளம்பற்றியருளினாரிறே. இவரருளிச்செய்யும் அர்த்தங்களுக்கெல்லாம் ஆப்திபிருக்கிறபடி.

(இன்னருளால்) என்னுடைய உஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணிக் கொண்டு போரும்படியான பந்தவிசேஷத்தை யுடையரான பிள்ளை தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே. (வந்தவுபதேச மார்க்கத்தை) உபதேசிககவந்த அந்த உபதேசத்தினுடைய வரலாற்றை, உபதேசமாய்ப் பேசுகின்றேனென்று மேலே க்ரியை. இத்தால் "தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி, இது சுத்தஉபதேசபர வார்த்தை யென்பர்" என்றதுக் கெதிர்த்தட்டான சுத்த ஸம்ப்ரதாயமிருக்கிறபடி. ஆக, கீழ்ச்சொன்ன பதத்ரயத்தாலும் தம்மை விஷயீகரிக்கைக் கடியான ஸம்பந்தமும், ஜ்ஞாநபூர்த்தியும், தயாபூர்த்தியும் தமக்குத் தஞ்சமாயிருக்கிறபடி. (எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால் வந்த) "தாயாய்த்தந்தையாய், அன்னையாயத்தனாய்" என்னுமாபோலே எனக்கு அன்னையு மத்தனுமாகியிருக்கிறவர். எந்தையான முறையாலே முலைக் கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப்போலேயிறே எனக்கின்னருள்சுரந்தது. "எயிற்றிடை மண்கொண்ட வெந்தை யிராப்பகலோதுவித் தென்னை" யென்னுமாபோலே இப்படி தமக்கு நிருபாதிக பிதாவான பிள்ளையுடைய ப்ரஸாதத்தாலே கரமாகதமாய் வந்த வழியை ப்ரதிபத்திபண்ணியாய்த்து இவருபதேசித்தருளுவது. அதாவது "వివస్వాన్ మనవే ప్రాహమను రిక్ష్వాకవేబ్రవీత్ ఏవం పరంపరాప్రాప్తం-விவஸ்வாந்மநவே ப்ராஹமநு ரிக்ஷ்வாகவேப்ரவீத் ஏவம் பரம்பராப்ராப்த" என்கிறபடியே பரம்பரையாய் வந்த அந்தப் பரிசுத்த ஜ்ஞாந மார்க்கத்தை மநநம்பண்ணியென்கை. (மார்க்கத்தைச் சிந்தைசெய்து) மார்க்கத்தைச் சிந்தைபண்ணி, (பின்னவருங்கற்க) தன்வழியைப் பின்சென்று பிழைக்க இருக்கிற பின்னவர்களும், ஸந்மார்க்கவர்த்திகளாம்படி யப்யஸிக்க, *முன்னோர்மொழிந்த முறைதப்பாமற்கேட்டுப் பின்னோர்ந்து, பின்னவருங் கற்க வுபதேசமாய்ப் பேசுகிறபடி. அதாவது "நெறி யுள்ளியுரைத்த" என்னுமாபோலே, ஸர்வஜ்ஞரான தாமருளிச்செய்ததெல்லாம், "சொல்லுமவிடுசுருதியாம்" என்கிறபடியே ப்ரமாணதமமாயிருக்கப் பின்புள்ளார்க்கு ப்ரதிபத்திஹேதுவாய் அப்யஸிக்கைக்குடலாக ஆராய்ந்தருளிச்செய்தபடி யென்கை. (உபதேசமாய்ப்பேசுகின்றேன்) இவ்வர்த்தத்தின் சீர்மையிருக்கிறபடி. இதுதான் ப்ரபத்திநிஷ்டர் வைபவந்தொடங்கி, ஆசார்யாபிமாந நிஷ்டர் வைபவமிறுதியாக வுண்டான அர்த்த

விசேஷங்களையிறே உபதேசமாய்ப் பேசுகிறது. இப்படி கௌரவமான அர்த்தவிசேஷங்களைப் பின்னவருக்கும் வுபதேசமாய்ப் பேசுகின்றேனென்று உபதேசிக்குமிடத்தில், தமக்குப் பிள்ளை ரஹஸ்யமாக ஓராண்வழியா யுபதேசித்தாற்போலின்றிக்கே, அகில சேதநரும் அப்யஸித்தறிந்து, உஜ்ஜீவிக்கும்படி ப்ரபந்தமுகேந ப்ரகாசிப்பிக்கிறேனென்கிறார். (சிந்தை செய்து பேசுகின்றேன்) இவருடைய "యద్ధిమనసా ధ్యాయతి తద్వాచా వదతి— யத்திமநஸா த்யாயதி தத்வாசாவததி" இது வாய்த்து. (பேசுகின்றேன் மன்னியசீர் வெண்பாவில் வைத்து) அதுசெய்யுமிடத்து வெண்பாவிலே வைத்தாய்த்து இவரருளிச்செய்தது. அதாவது தமிழுக்கு வெண்பா கலித்துறை என்னுமாபோலே அநேகம் பாக்களுண்டிறே. அதில் கலித்துறையாலே ப்ரவ்ருத்தமாய்த்து *சரமப்ரபந்தமான நூற்றந்தாதி. அதிலும் அப்யஸிக்க எளிதாயிருக்கிற வெண்பா என்கிற சந்தஸ்ஸிலே வைத்தாய்த்து "சதிருடைதமிழ்விரக" ரான தாம் அருளிச்செய்தது. கற்கவிறே தாமுபதேசிக்கிறது. "வெண்பாவிருகாலிற் கல்லானை" யென்றிறே இதின் எளிமையிருப்பது. அதுக்கு சீர்மன்னுகையாவது, முச்சீர் நாற்சீரென்று சொல்லப்படுகிற சீரோடே பொருந்தியிருக்கை. அன்றிக்கே, "புகழ்மலிந்தபா" என்னுமாபோலே இதுவும் சீர் மன்னியிருக்கிற தென்னவுமாம். "எண்ணருஞ்சீர் பொய்கைமுன்னோ"ருடையசீரிறே யிதில் பொருந்தியிருக்கிறது. அதுக்கநுகுணமாக மன்னியசீர் வெண்பாவில் வைத்தென்று யோஜிக்கக்கடவது. (பேசுகின்றேன்) "பேசுமளவன்றிது" என்னும் அர்த்தத்தை எல்லாருடையவும் துர்க்கதிகண்டு பொறுக்கமாட்டாமல் ஸுவ்யக்தமாம்படி முக்தகண்டமாகச் சொல்லாநின்றேன்; நீங்கள் கேட்கிலுமாம் தவிரிலுமாம்; நான் சொல்லியல்லது தரியேன்; உபஸந்நரானவர்களுக்கு "ప్రోవాచతాం తత్త్వతో బ్రహ్మవిద్యామ్— ப்ரோவாசதாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம்" என்று சொல்லக்கடவ அர்த்தத்தைப் பேசுகின்றேனென்று அபேக்ஷாநிரபேக்ஷமாக உபதேசிக்கை க்ருபாதிக்யமிறே. இத்தால் ஆழ்வாரொருவர்க்கு ஸர்வேச்வரன், மயர்வறமதிநல மருளத் தாம் ஊரும் நாடும் உலகமும் தம்மைப் போல்வா ராகும்படி மயர்வறமதிநலமருளி வாழ்வித்தாற்போலே, இவரும் தமக்குப் பின்னையவருக்கெல்லாம் அந்த அர்த்தத்தையுடைய உபதேசித்தருளி வாழ்வித்தருளுகிறாராய்த்து.

உ-ம்-பாட்டு.

கற்ரோர்கள் தாமுகப்பர் கல்விதன்னி லாசையுள்ளோர்
பெற்ரோமெனவுகந்து பின்புகற்பர்—மற்ரோர்கள்
மாச்சரியத்தாலிகழில் வந்ததென்னெஞ்சே யிகழ்கை
ஆச்சரியமோதானவர்க்கு.

பதவுரை.

கற்ரோர்கள்தாம்-கல்வியறிவுடையார் தாங்கள், உகப்பர்-சந்தோஷிப்பார்கள், கல்விதன்னில்-கல்வியைப்பயிலுவதில், ஆசையுள்ளோர்-பிரீதியுடையவர்கள், பெற்ரோம் என-இதைலபிக்கப்பெற்ரோமேயென்று, உகந்து-சந்தோஷித்து, பின்பு-பிற்பாடு, கற்பர்-அப்யஸிப்பார்கள், மற்ரோர்கள்-அன்னியர்கள், மாச்சரியத்தால்-பொருமையாலே, இகழில்-தோஷஞ் சொல்லுவார்களானல், வந்தது-வந்தகுறைதான், என்-யாதூகும். தானவர்க்கு-ஆஸுரப்ரக்ருதிகளுக்கு, இகழ்கை-மற்ருென்றில் தோஷஞ் சொல்லுவது, ஆச்சரியமோ-ஆச்சரியமாகுமோ.

இரண்டாம்பாட்டு— "பின்னவருங் கற்க வுபதேசமாய்ப் பேசுகின்றேன் மன்னியசீர் வெண்பாவில்வைத்து" என்றருளிச் செய்யாநின்றீர், மத்ஸரக்ரஸ்தரானவர்கள் இத்தை யிகழார்களோ வென்று தம்திருவுள்ளத்துக்குக்கருத்தாக, அத்தாலே வருவதோ ரவத்யமில்லை, அது அவர்கள்விஷயத்தில் ஆச்சர்யமுமன்றென்று தம் திருவுள்ளத்தைத் தேற்றியருளுகிருர்.

வ்யாக்யாநம்.

(கற்ரோர்கள்தாமுகப்பர்) "அறியக்கற்றுவல்லாரா" யிருக்கிற ஆசார்யர்கள் தாங்கள், நாம் உபதேசிக்கவேண்டும் அர்த்தங்களை, இவர் இப்படி ப்ரபந்தமுகேந உபதேசித்துப்போருவதே யென்று உகப்பர்கள். அன்றிக்கே ஆசார்யோச்சாரணமுகத்தாலே இந்த ப்ரபந்தத்தை அப்யஸித்தவர்களாகவுமாம். இப்படி ஜ்ஞாதாக்களன்றிக்கே, ஜ்ஞாஸுபுத்ஸையுடையராயிருக்குமவர்கள் படி சொல்லுகிறது. (கல்விதன்னிலாசையுள்ளோர் பெற்ரோமெனவுகந்து பின்புகற்பர்) அறிவுடையராய் இப்படி கற்றவர்களிடங்களிலே கேட்கவேண்டுமென்கிற ச்ரத்தையையுடையவர்கள் பெருவருத்தத்தோடே பெறவேண்டும் அர்த்தத்தை இப்படி ப்ரபந்தஸ்தமாக்குவதேயென்று நிதிபெற்ருற்போலே இத்தைப் பெற்று ஹர்ஷயுக்தராய்க்கொண்டு கற்றவர்களிடங்களி

லே கற்று,கேட்டு,க்ருதார்த்தராவர்கள். (மற்றோர்களித்யாதி) ஏததுபய வ்யதிரிக்தராயிருக்கிற (மற்றோர்கள்) அவர்களாகிறார் "அறிந்தவர்பால் சென்று சேருதல்செய்யாத நிமனத்தர்" போல்வார். அவர்கள் (மாச்சரியத்தாலிகழில்) மாச்சரியமாவது, "பிறர்மினுக்கம் பொறாமை" அநுஷ்டாநபர்யந்தமாக்குகை. அதாவது பிறருடைய உச்ச்ராயத்தைக்கண்டால் அஸஹிஷ்ணுக்களாய் அதுக்கோ ரவத்யத்தை யாரோபித்து இகழ்வராகி லென்றபடி, (வந்ததென்னெஞ்சே) எல்லாப்பெருமையும் பெற்றுடையவனோடு ஏகஹ்ருதயமாயிருக்கிற மநஸ்ஸே அத்தால்வந்ததென்? "மனக்குற்றமாந்த" ரானவர்கள் "பழிக்கில்புக" ழாயன்றோ அதிருப்பது. ஆனாலும் இகழ்வர்களாகில் தவிர்ந்தாலோ வென்ன, (இகழுகை யாச்சரியமோதானவர்க்கு) பழிக்கில்பணிப்பர்களாயிருக்கு மவர்களுக்கு இகழுகைதா னாச்சரியமுமன்றென்கை. ஆகையால் அது அவர்களுக்கு ஸஹஜமாயிறே யிருப்பது. இத்தால் அநுகூல ப்ரதிகூலருடைய ஆதர அநாதரங்கள் ப்ரபந்தத்துக்கு அதிசயாவஹ மென்றதாய்த்து.

### ௩-ம் பாட்டு.

ஆழ்வார்கள்வாழி யருளிச்செயல்வாழி
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்யவவர்க ளுரைத்தவைகள்தாம்வாழி
செய்யமறைதன்னுடனே சேர்ந்து.

பதவுரை.

ஆழ்வார்கள்-பதின்மரான ஆழ்வார்கள், வாழி-வாழ்வார்களாக, அருளிச்செயல்-அவர்களருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள், வாழி-வாழ்வனவாக, ஆது தாழ்வும்-எந்தத்தாழ்வும், இல்-இல்லாத, குரவர்தாம்-பூர்வாசார்யர்கள், வாழி-வாழ்வார்களாக, ஏழ்பாரும்-ஏழுலகங்களிலுள்ளவர்களும், உய்ய-உஜ்ஜீவிக்கும்படியாக, அவர்கள்-அந்தப்பூர்வாசார்யர்கள், உரைத்தவைகள்தாம்-அருளிச்செய்த வ்யாக்யாந ரஹஸ்யங்கள், செய்ய-செவ்வையான, மறைதன்னுடனே-வேதத்துடனே, சேர்ந்து-கூடியிருந்து, வாழி-வாழ்வனவாக.

வ்யாக்யாநம்.

மூன்றாம்பாட்டு.—கீழில் பாட்டிலே மற்றோர்களுடைய இகழுகைதானே புகழுகையென்று ஸமாஹிதராய் ப்ரபந்த நிர்மா

ணத்திலே ப்ரவ்ருத்தரானவர், ப்ரபந்த ப்ரதிபாத்யரானவர்களுக்கும், தத் ப்ரணீதங்களான ப்ரபந்தங்களுக்கும் ப்ரதிகூல ரடியாக வரும் அமங்களங்கள் போம்படி அநுகூலரான தாம் மங்களாசாஸநம் பண்ணியருளுகிறார் (ஆழ்வார்கள்வாழி) யென்று தொடங்கி. இப்பாட்டுத்தான் ப்ரபந்த ப்ரதிபாத்யார்த்தங்களுக்கெல்லாம் ஸங்க்ரஹமாயிறே யிருக்கிறது. அதாவது : ஆழ்வார்களேற்றத்தையும், அருளிச்செயலினுடைய ஏற்றத்தையும் அத்தை வளர்த்துப்போந்த ஆசார்யர்கள் வைபவத்தையும் அருளிச்செயல்களுக்கு அவர்களால் அருளிச்செய்யப்பட்ட வ்யாக்யாந விசேஷங்களையுமிறே இப்ப்ரபந்தத்தாலே ப்ரதிபாதிக்கிறது. இப்படி "உள்ளதுக்கெல்லாஞ் சுருக்" கான இது ஸர்வ ஸங்க்ரஹமாகக் குறையில்லை.

(ஆழ்வார்கள்வாழி) அவர்களாகிறார் "மயவறமதிநலமருளப்" பெறுகையாலே "தெருளுற்றவாழ்வார்கள்" என்னும் படியான ஏற்றத்தை யுடையரான பராங்குச பரகாலாதிகள். ஏவம்விதமான இவர்களுக்கு இருள்தருமாஞாலத்தில் தோஷம் தட்டாதே எப்போதும் வாழ்ந்தருள வேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். மங்களாசாஸநபரர்க்கு மங்களாசாஸநம் பண்ணுகை மஹாமுநிகளுக்குப் பணியிறே. மணவாளமாமுநியிறே யிவர்தாம். "வாழிசடகோபன், வாழிபரகாலன்" என்றிறே இவர்கள் விஷயத்தில் பரிவராயிருப்பார் பாசுரமிருக்கும்படி. (அருளிச்செயல்வாழி) அருளிச்செயல்களாவன : ஸர்வேச்வரன் அருளடியாகத் தங்களருளாலே செய்யப்பட்டதாகையாலே அதுவே நிரூபகமாம்படி, யிருப்பதாயிருக்கிற த்ராவிட வேத சதுஷ்டய அங்கோபாங்கங்களான திவ்யப்ரபந்தங்கள். இப்படி விலக்ஷணமான இப்ப்ரபந்தங்களுக்கு தேசகாலாதிகாரி தோஷங்களால் வரும் ஸங்கோசமின்றிக்கே, நித்யமாக வர்த்தித்துச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். "வாழி சடகோப னிட்டதமிழ்ப்பாவிசை" என்றும் "வாழி பரகாலனெண்ணில் தமிழ்ப்பாவிசை" என்றும் சொல்லக்கடவதிறே. (தாழ்வாது மில்குரவர் தாம் வாழி) அநந்தரம் இதுக்கு அர்த்த நிரூபணம் பண்ணும் ஆசார்யர்களும் அவர்களோபாதி ஆசாஸ்யராகையாலே அவர்களுக்கும் மங்களாசாஸநம்பண்ணி யருளுகி

ருர். அவர்களாகிறுர், "அருள்பெற்ற நாதமுனி" முதலான நந்தேசிகரான நாத யாமுந யதிவராதிகள் தொடக்கமான ஆசார்யர்கள். இனி இவர்களுக்கு (தாழ்வாதுமில்லா)மை யாவது: ததேகபரராயிருக்கை. தாழ்வாவது: பகவத் கதா கந்த ரஹிதமான காவ்யாலாபாதிகளிலே காலக்ஷேபம் பண்ணுகை. அதில்லாமையாவது: பகவத் கதாயுக்தமான புராணுதிகளிலே போது போக்குகை. ஆதுமில்லாமையாவது: "ஹிதிலந்தாதி" என்கிறபடியே, கதாந்தர ப்ரஸ்தாவமில்லாதபடி பகவதேகபரமான அருளிச்செயலிலே ஸ்வயம் ப்ரயோஜநமாகக் காலக்ஷேபம் பண்ணுகை. "போதுபோக்கும் அருளிச்செயலிலேயாய், பிள்ளையைப்போலே யிருப்பாரொருவன்" என்றிறே அருளிச்செய்தது. ஏவம்விதமான நிஷ்டையை யுடையவர்கள், வைபவத்தைக்கண்டு, "இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே இந்த விபூதியிலே இவர்களும் சிலரே" என்னும் ஏற்றமறிந்து ஆதரித்துப்போவாரொருவரிறே, இவர்தாம். "வாழி எதிராசன்" என்றும் "வாழி உலகாசிரியன்" என்றுமிறே இவருடைய வாக்வ்ருத்தியிருப்பது. (ஏழ்பாருமுய்ய வவர்களுரைத்தவைகள் தாம்வாழி) அதாவது: ஸப்த த்வீபவதியான பூமியிலுண்டானவர்களெல்லாரும் "உலகுய்ய வும்பர்களுங் கேட்டுய்ய" என்கிறபடியே ஸர்வ லோகங்களும் உஜ்ஜீவிக்கும்படியிறே இவர்கள் வ்யாக்யாநம் செய்தருளிற்று. அது செய்யுமிடத்து, (செய்யமறை தன்னுடனே சேர்ந்து) ஸகல சாஸ்த்ர நிபுணரான தாங்கள் ஸகல வேதாந்த ஸாரார்த்தங்களையும் அருளிச்செயல்களின் அர்த்தமானது அடியொத்திருக்கும்படியிறே இதுக்கு வ்யாக்யாநம் செய்தருளிற்று. அன்றிக்கே, அரிய அருளிச்செயல்களின் வ்யாக்யாநங்களை வேத தாத்பர்யங்கள் பின்செல்லும்படியுமிறே இவர்கள் வ்யாக்யாநத்தின் வைபவமிருப்பது. "విధయశ్చ వైదికా స్త్వదీయగమ్భీర మనోనుసారిణః విதயச்ச வைதிகா ஸ்த்வதீயகம்பீர மநோநுஸாரிண:" என்னக்கடவதிறே. (செய்யமறைதன்னுடனேசேர்ந்து அவர்களுரைத்தவைகள் தாம்வாழி) என்று தத்விஷய மங்களாசாஸந மிருக்கும்படி. (செய்யமறை) அநுகூலர்க்கு ஸ்வார்த்தத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டு ப்ரதிகூலர்க்கு ப்ரகாசிப்பியாதிருக்கை. அவர்களுரைத்தவைகள் தன்னுடனே சேருகையாவேயிறே செய்யமறை

யாய்த்து. அதாவது: "அல்பச்ருதர் கலக்கின ச்ருதி நன்ஞானத் துறைசேர்ந்து, தெளிவுற்று, ஆழ்பொருளை யறிவித்தது" என்கிறபடியே, அதி நிர்மலமான அருளிச்செயல்களின் வ்யாக்யாந முகேநவாய்த்து அதி கஹநமான வேதங்களின் அர்த்த தர்சநம் பண்ணலாவது. ஆக இத்தால் விலக்ஷண ப்ரமாண ப்ரமாதாக்களுக்குக் கலிதோஷம் தட்டாதபடி நித்ய நிரவத்யத்வாத் யாகாரங்களோடே செல்லவேணுமென்று, மங்களாசாஸநம் பண்ணியருளினாராய்த்து. "ప్రమాణంచ ప్రమేయంచప్రమాతారశ్చ సాత్త్వికాః జయన్తుక్షపితారిష్టం సదా సర్వత్ర సర్వదా—பரமாணஞ்ச ப்ரமேயஞ்ச ப்ரமாதாரச்சஸாத்விகா: ஜயந்துக்ஷபிதாரிஷ்டம் ஸதாஸர்வத்ரஸர்வதா" என்னக்கடவதிறே.

ச-ம் பாட்டு.

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐய னருள்மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதனன்பர் தாட்டூளி நற்பாணன் நற்கலியன்
ஈதிவர் தோற்றத்தடைவா மிங்கு.

பதவுரை.

பொய்கையார்-பொய்கையாழ்வார், பூதத்தார்-பூதத்தாழ்வார், பேயார்-பேயாழ்வார், புகழ்-கீர்த்தியையுடைய, மழிசைஐயன்-திருமழிசையாழ்வார், அருள்-அருளையுடைய, மாறன்-நம்மாழ்வார், சேரலர்கோன்-குலசேகராழ்வார், துய்ய-பரிசுத்தரான, பட்டநாதன்-பெரியாழ்வார், அன்பர்தாள்தூளி-தொண்டரடிப் பொடியாழ்வார், நல்-நன்மையையுடைய, பாணன்-திருப்பாணாழ்வார், நல-நல்ல, கலியன்-திருமங்கையாழ்வார், ஈது-இப்படி சொன்ன இது, இங்கு-இவ்வுலகத்தில், இவர்-இவ்வாழ்வார்களுடைய, தோற்றத்து-அவதாரங்களின், அடைவுஆம்-கிரமமாகும்.

வ்யாக்யாநம்.

நாலாம் பாட்டு.—ஆழ்வார்கள் வாழியென்று தொடங்கியருளிச்செய்த ப்ரபந்த ப்ரதிபாத்யார்த்தங்களை, ஒரொன்றாக உபபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, அதில் பூர்வோர்க்தரான ஆழ்வார்களுடைய அவதரணக்ரமத்தை யருளிச்செய்கிறார், பொய்கையாரென்று தொடங்கி. அதாவது ஸரோஜாதராகையாலே அதுவே நிரூபகமாம்படி யிருப்பாராய், "வருத்தும் புறவிருள் மாற்றும்" எம் பொய்கையார், "மாதவன் பூதம்" என்னும்படியான

மாஹாத்ம்யத்தை யுடையராய் "ஞானச்சுடர்விளக்கு" ஏற்றிய பூதத்தார். பகவதநுபவைகபரராய், லோகயாத்ரையில் கண்வையாதே "யானுமோர் பேயன்" என்னும்படி பெயர்கூறுவதுவே நிரூபகமாய் "கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்தலைவ" ரான பேயார். (புகழ்மழிசையையன்) "இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன்" என்கிறபடியே மஹீஸார க்ஷேத்ரமென்கிற ப்ரதையையுடைய திருமழிசைக்கு நிர்வாஹகரான திருமழிசைப்பிரான். (அருள்மாறன்) "பாடினனருள்கண்டீ ரிவ்வுலகினில்மிக்கதே" என்கிறபடியே க்ருபாதிக்யத்தை யுடையராகையாலே அதுவே நிரூபகமாம்படியான நம்மாழ்வார். (சேரலர்கோன்) "சேரன்குலசேகரன்" என்னும்படி சேரகுலசேகரராய், திர்யக் ஸ்தாவர ஜந்மங்களை யாசைப்பட்ட பெருமாள். (துய்யபட்டநாதன்) ஸர்வகாலத்திலும் ஸர்வேச்வரனை மங்களாஸாசநம் பண்ணுகையும் கோபஜந்மத்தை யாஸ்தாநம் பண்ணுகையும் தொடக்கமான தூய்மையை யுடையராய், "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தன" என்கிறபடியே பரத்வஸ்தாபகராகையாலே பட்டநாதரென்றதுவே நிரூபகமான பெரியாழ்வார். (அன்பர்தாள்தூளி) "துளவத்தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி" என்னும்படி அஹங்கார யுக்தமான அக்ரஜந்மத்தை அநர்த்தாவஹமென் றெண்ணி தத்ரஹித ஜந்மாக்களான பாகவதர்களுடைய ஸ்ரீபாதரேணுவென்றதுவே நிரூபகமாம்படியான ஸ்ரீதொண்டரடிப்பொடியார். (நற்பாணன்) "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்" என்று ததீய தாஸ்யத்துக் கநுகுணமான ஜந்மஸித்தமான நைச்யத்தை நன்மையாகவுடையராய் "காயகஸார்வபௌம" ரான பாண்பெருமாள். (நற்கலியன்) "நின்திருவெட் டெழுத்துங்கற்று நானுற்றது முன்னடியார்க் கடிமை" என்னும்படி, "அடியவர்கள் தம்மடியான்" என்றுஞ் சொல்லுகிறபடியே எல்லையான ததீய சேஷத்வத்திலே யூன்றி, மற்றை ஆழ்வார்கள் திருவடிகளில் சேஷத்வமே தமக்கு நிரூபகமாம்படியாக எண்ணியிருக்கிற நன்மையையுடையராய், அருகாழியுள்பட அபஹரிக்கையாலே "கலியன்" என்று நிரூபிக்கும்படியான திருமங்கையாழ்வார். ஏவம்வித வைலக்ஷண்யத்தை யுடையரான இவர்

கள் இவ்விபூதியிலே ஆவிர்ப்பவித்தருளின க்ரமமிதுவாய்த்து. "காண்பெருந் தோற்றம்" என்றும், "ஸமுத்பூதம்—ஆவிர்ப்பூதம்" என்றும் சொல்லுமாபோலே.

ரு-ம் பாட்டு.

அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்
இந்தவுலகில் இருள்நீங்க—வந்துதித்த
மாதங்கள் நாள்கள்தம்மை மண்ணுலகோர் தாமறிய
ஈதென்று சொல்லுவோம் யாம்.

பதவுரை.

அம்-அழகிய, தமிழால்-தமிழ்ப்பாஷையால், நல்-நல்ல, கலைகள்-வேதங்களை, ஆய்ந்து-ஆராய்ந்து, உரைத்த-அருளிச்செய்த, ஆழ்வார்கள்—, இந்த உலகில்-இந்த உலகத்திலுள்ள, இருள்-அஜ்ஞாநாந்தகாரம், நீங்க-ஒழியும்படி, வந்து உதித்த-வந்து அவதரித்தருளின, மாதங்கள்-மாஸங்களையும், நாள்கள் தம்மை-திருநக்ஷத்ரங்களையும், மண் உலகோர்தாம்-இந்த பூலோகத்திலுள்ளார் தாங்கள், அறிய-அறிந்துகொள்ளும்படி, ஈது என்று-இது என்று, யாம்-நாம், சொல்லுவோம்-சொல்லக்கடவோம்.

வ்யாக்யாநம்.

அஞ்சாம்பாட்டு.—அநந்தரம் இப்படி ஆழ்வார்கள் அவதரித்தருளின மாஸங்களையும், திருநக்ஷத்ரங்களையும், ஸர்வரும் அறியும்படி, இன்னதென்று அருளிச்செய்கிறோமென்கிறார். (அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்) வேதம்போலே ஸம்ஸ்க்ருதரூபமாய், அதிக்ருதாதிகாரமுமாய் வருந்தி, கர்மப்ரஹ்மதயா அர்த்த நிர்ணயத்தில் அருமைதட்டியிருக்கை யன்றிக்கே, செந்தமிழான செம்மையையுடைத்தாகையாலே ஸர்வஸுலபமுமாய் ச்லாக்யமுமான த்ராவிடபாஷையாலே யாய்த்து ஸர்வ வேதாந்த ஸாரார்த்தங்களை ஸங்க்ரஹித்து இவர்கள் "பண்ணிய தமிழ்" என்னும்படி பண்ணியருளிற்று. நற்கலையாகிறது நிர்த்தோஷ ப்ரமாண வேதம். அத்தை ஆராய்ந்தாய்த்து இவர்கள் தமிழாலே அருளிச்செய்தது. ஆகையால், இதுதான், "திருமாலவன்கவி" என்றதாகையால் இப்படியே ஸ்ரீய:பதியான பரப்ரஹ்மைக ப்ரதிபாதகமுமாயிருக்கும். அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தரான இவர்கள் இந்த விபூதியிலே அவதரித்தருளினது

இன்ன ப்ரயோஜனத்தைப்பற்ற வென்கிறார். (இந்த உலகிலிருள் நீங்கவந்துதித்த) இந்த உலகிலேயிறே இருளுள்ளது. இதுதான் "இருள்தருமாஞால" மிறே. அந்த உலகு "అర్కానలదీప్తం—அர்க்கானலதீப்த"மாய், "சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி" என்னும்படி, "தெளிவிசும்" பாயிறே இருப்பது. ஆகையாலே அவ்விபூதியிலுள்ளார், "సూర్యకోటి ప్రతీకాశాః—ஸூர்யகோடி ப்ரதீகாசா:" என்கிறபடியே, "ஒளிக்கொண்ட சோதி" யையுடையராய், "సర్వం హ పశ్యః పశ్యతి—ஸர்வம்ஹபச்ய: பச்யதி" என்கிறபடியே ஜ்ஞாநவிகாஸத்தை யுடையரா யிருப்பார்கள். ஆகையால் அவ்விபூதியில் அஜ்ஞாநாந்தகார ப்ரஸங்கமில்லை. "ஒன்றிவ்வுலகினில் பேரிருள்" என்னும்படி, இவ்விபூதி, தமச்சப்த வாச்யமான ப்ரக்ருதிகார்யமாயிறே யிருப்பது. ஆகையால் இங்குள்ளார் பகவத்ஸ்வரூப திரோதாநகரியான அழுக்குடம்பைப் பரிக்ரஹித்து, "அறிவிலா மனிசர்" என்னும்படி அஜ்ஞராயிருப்பர்கள். இவர்களுக்கேயிறே வெளிச்செறிப்பு வேண்டியிருப்பது. அந்தகாராபிபூதர்க்கிறே ஆதித்யாதி தேஜஸ்ஸுக்கள் அபேக்ஷிதமாயிருக்கும். அத்தாலே, இந்தவுலகி லிருள் நீங்க வந்துதித்த என்கிறார். இந்த உலகிருளைப்போக்கும்போது இவ்வாதித்யாதிகள் வேண்டாவோ "వన్దే పరాంకుశాదిత్యం—வந்தே பராங்குசாதித்யம்" என்றும் "కలయామి కలిధ్వంసం కవిలోక దివాకరం—கலயாமி கலித்வம்ஸம் கவிலோக திவாகரம்" என்றும் "రామానుజ దివాకరః—ராமாநுஜதிவாகர:" என்றும் சொல்லப்படுகிற பராங்குச பரகால யதிவராதிகளுடைய உதயத்திலே யாய்த்து அஜ்ஞாநத்வாந்த நாசநமும், அவித்யா தமஸ்ஸு நிஹதமானதும், பாபத்வாந்தக்ஷயம் பிறந்ததும்: விஷ்ணுபக்தார்க்க ஸந்நிதியிலேயிறே, எங்கும் வ்யாபித்திருக்கிற இருளானதுபோவது. இது மற்றையாழ்வார்களுக்கும் உபலக்ஷணம். (வந்துதித்த மாதங்கள் நாள்கள் தன்னை, மண்ணுலகோர் தாமறிய ஈதென்று சொல்லுவோம்யாம்) அதாவது த்வாதசாதித்யர்களும் சைத்ராதி மாஸங்களிலேயிறே ஒருத்தராக ஸஞ்சரிப்பது. இவர்களுமப்படியே ஐப்பசிமாஸந்தொடங்கி, அடைவே அவதரித்தார்கள். (வந்துதித்த) என்கையாலே விண்ணின் தலைநின்றும் மண்ணின்தலத்துதித்தது தோற்றியிருக்கிறது. மாதங்களாவன: ஐப்பசிமாஸந்

தொடங்கி, ஆனி முடிவாக வுண்டான ஏழுமாஸமும் நாள்களா வன: திருநக்ஷத்ரங்கள். "அத்தத்தின்பத்தாநாள்" "திருநாள் திருவோணம்" என்னக்கடவதிறே. அதுதான் திருவோணந் தொடங்கி, கேட்டையீறாக வவதரித்த நடுவுண்டான பத்து நக்ஷத் ரமும். இப்படி அதிசயாவஹங்களான இவற்றை யறிந்தாலிறே சேதநர்க் குஜ்ஜீவந முள்ளது. "ஜந்மர்க்ஷ்ச்ரவணேபிவா—ஜந்மர்க்ஷச்ரவ ணேபிவா" என்றிறே விதித்தது. இவர்கள் தாம் பகவதவதார விசேஷங்களாகையாலே ரோஹிணீ புநர்வஸ்வாதிகளோபாதி இத் திருநக்ஷத்ரங்களும் பூஜ்யங்களுமாய் ஆதரணீயமுமாயிருக்கும். (மண்ணுலகோர் தாமறிய) "அகல்ஞாலத்தவரறிய" என்னுமா போலே விண்ணோர்க்கு இப்படி உபதேசிக்க வேண்டாவிறே. "மண்ணிற்பிறந்தெண்ண மொன்றின்றி யிருக்குமேழை மனிசர்" க்கிறே இப்படி உபதேசிக்கவேண்டுவது. (மண்ணுலகோர் தா மறிய) பூமியிலுண்டான அஜ்ஞான சேதநர் அறிந்து உபலா லித்து, உஜ்ஜீவிக்கும்படி இன்னதென்று இதில் அபேக்ஷயற் றிருக்கிறவர்களுக்கு அபேக்ஷாநிரபேக்ஷமாக இதில் அபேக்ஷ யுடைய நாம் இத்தைச் சொல்லக் கடவோம். இவருடைய ப்ரதி ஜ்ஞையிருக்கிறபடி. இத்தால் அஜ்ஞாத ஜ்ஞாபநம் பண்ணுகை ஆசார்ய க்ருத்யமென்றதாய்த்து.

கூ-ம் பாட்டு.

ஐப்பசியி லோண மவிட்டஞ் சதயமிவை
ஒப்பிலவா நாள்க ளுலகத்தீர்—எப்புவியும்
பேசுபுகழ் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனே தோன்று பிறப்பால்.

பதவுரை.

உலகத்தீர்-உலகத்திலுள்ளவர்களே, எப்புவியும்-எந்த லோகமும், பேசு-சொல்லப்பட்ட, புகழ்-வைபவத்தையுடைய, பொய்கையார்-பொய்கையாழ்வாரும், பூதத்தார்-பூதத்தாழ்வாரும், பேயாழ்வார்-பேயாழ்வாரும், தேசுடனே-தேஜஸ்ஸுடனே, தோன்று-இவ்வுலகில் தோன்றிய, பிறப்பால்-திருவவதாரங்களாலே, ஐப்பசியில்-ஐப்பசிமாதத்தில், ஓணம்-திருவோணமும், அவிட்டம்-அவிட்டமும், சதயம்-சதயமுமாகிய, இவை-இந்த நக்ஷத்ரங்கள், ஒப்பு இல ஆம்-சமானமில்லாதனவாகிய, நாள்கள்-திருநக்ஷத்ரங்களாகும்.

வ்யாக்யாநம்.

ஆரும்பாட்டு—கீழ்ப்பண்ணின, ப்ரதிஜ்ஞாநுரூபமாக அடைவே உபபாதிப்பதாகக் கோலி, அதில் முதலாழ்வார்களுடைய அவதார க்ரமத்தை மூந்றூ அருளிச்செய்கிறார். (ஐப்பசியிலோணம்) என்று தொடங்கி. அதாவது: ஆச்வயுஜ மாஸத்தில் விஷ்ணு நக்ஷத்ரமான ச்ரவணாதி நக்ஷத்ர த்ரயமும் அஸத்ருசமானதாயிருக்கும். வைதிக மர்யாதையை யறியாமல் லோகயாத்ரையிலே கண்வைத்திருக்கிறவர்களே! நான் சொல்லுகிற ஒப்பிலவா நாள்களை உபலாலித்து உஜ்ஜீவியுங்கோள். அப்படி உபமாநராஹித்யத்துக்கு அடியேதென்ன, (எப்புவியும்) இத்யாதி, ஸர்வலோகத்திலுண்டானவர்களும் அதுஅது என்று வாய் புலத்தும்படியான புஷ்பயோகிஜத்வத்தால் வந்த ஜந்ம வைபவத்தையும், ஜ்ஞாந தீப ப்ரகாசத்தாலே பகவத் ஸாக்ஷாத்காரம் பண்ணின ஜ்ஞாந வைபவத்தையும் "நாட்டாரோ டியல்வொழிந்து" க்ரமைக ராத்ரராய் வ்யாபரித்துத் திரிந்த வ்ருத்த வைபவத்தையும் அதுக்குமேலே "தூவட்டவில் பார்மகள் பூமங்கையோடு" இத்யாதிப்படியே ஸ்ரீயப்பதியான ஸர்வேச்வரன், இவர்களுடைய அங்க ஸங்கத்தை யபேக்ஷித்து, "புலவர் நெருக்க உகந்த பெருமாள்" என்னும்படி தங்களுடைய ஸம்மர்த்தத்தாலே அவனை உகப்பிக்கும்படி பண்ண வல்லராயிருக்கிற உத்கர்ஷத்தையும் உலகத்தார் புகழும்படியாயிறே யிருப்பது. அவர்களாரென்னில், (பொய்கையார்-பூதத்தார்-பேயாழ்வார்) ஸரோ பூத மஹதாஹ்வயர்கள். இவர்கள் (தேசுடனே தோன்றுகை) யாவது, பகவத் ப்ரஸாதத்தினாலே ஸஹஜ தாஸ்யத்தால் வந்த ஔஜ்வல்யத்தோடே யாய்த்து வந்தவதரித்தது. அதடியாக வந்த ஸம்பத்தை யுடைத்தாகையாலே (ஒப்பிலவாநாள்களா) யிருக்கும். "ஆழியங்கைப் பேராயர்க்காளாம்பிறப்பு" விண்ணாட்டுத் தேசிறே. "கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்" என்றும், "கருக்கோட்டியுட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்" என்றும் "கருவிருந்த நாள்முதலாக் காப்பு" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸஹஜ தாஸ்யத்தை யுடையராயிறே யிருப்பது. ஆகையால் அத்யந்த விலக்ஷணரானவர்கள், திருநக்ஷத்ரங்களை நன்றாக ஆதரித்து அவர்கள் அபிமாநாந்தர்ப்பூதராகையாலே வந்த அதிசயத்தை யுடையராங்கோள். அதுக்கு மேலே ஆச்வயுஜமாஸத்தில்,

அந்த ச்ரவணநக்ஷத்ரந்தான் விஷ்ணு நக்ஷத்ரமாய் வைஷ்ணவோத்தமரான, க்ருஷ்ணபாதஸூநுவான லோகாசார்யருடைய அவதாரமுமாகையாலே இத்தை வரவரமுநிவர்யரான ஜீயரும் அத்யந்த ஆதரம்பண்ணிப் பரிபாலித்துக்கொண்டு போந்தருளுவரென்று ப்ரஸித்தமிறே. இந்தத் திருநக்ஷத்ரமும் முப்புரியூட்டினதாயிருக்கும். "క్రియాధికారే అష్టాదశాధ్యాయే—க்ரியாதிகாரே அஷ்டாதசாத்யாயே" "శ్రవణంచాశ్వయుజమాసే సర్వపాపహరంపరం మత్స్యకూర్మవరాహాణా మావిర్భావదినం స్మృతమ్—ச்ரவணம்சாச்வயுஜமாஸே ஸர்வபாபஹரம்பரம் மத்ஸ்யகூர்மவராஹாணா மாவிர்ப்பாவதிநம் ஸ்ம்ருதம்" హారితః "మాసే భాద్రపదే శుక్లే ద్వాదశ్యాం విష్ణుదైవతే ఆదిత్యాముదయాద్విష్ణు రుపేంద్రో వామనోఽవ్యయః—ஹாரித:—மாஸே பாத்ரபதே சுக்லே த்வாதச்யாம் விஷ்ணுதேவதே ஆதித்யா முதயாத்விஷ்ணு ருபேந்த்ரோ வாமநோவ்யய:" என்னக்கடவதிறே.

எ-ம் பாட்டு.

மற்றுள்ள ஆழ்வார்க ளுக்குமுன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த—பெற்றிமையோர்
என்றுமுத லாழ்வார்க ளென்னும் பெயரிவர்க்கு
நின்ற துலகத்தே நிகழ்ந்து.

பதவுரை.

மற்றுள்ள-மற்ற எழுவராயுள்ள, ஆழ்வார்களுக்குமுன்னே—, வந்து பூமியில்வந்து, உதித்து-அவதரித்து, நல்-நல்ல, தமிழால்-தமிழ்ப்பாஷையாலே, நூல்-முதல் திருவந்தாதி-இரண்டாந் திருவந்தாதி, மூன்றாந் திருவந்தாதி என்னும் திவ்யப்ரபந்தங்களை, செய்து-அருளிச்செய்து, நாட்டை-நாட்டிலுள்ளவர்களை, உய்த்த-உஜ்ஜீவிக்கும்படி செய்த, பெற்றிமையோர் என்று-பெருமையுடையவர்களென்று, முதலாழ்வார்கள் என்னும்-முதலாழ்வார்களென்று சொல்லப்படும், பெயர்-திருநாமமானது, இவர்க்கு-இவர்களுக்கு, உலகத்து-உலகத்தில், நிகழ்ந்து-வழங்கப்பட்டு, நின்றது-நிலைபெற்றது.

வ்யாக்யானம்.

ஏழாம்பாட்டு.—இவர்களுக்கு முதலாழ்வார்களென்று திருநாமமாகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (மற்றுள்ள ஆழ்வார்கள்) என்று தொடங்கி. ஆழ்வார்கள் பதின்மரில் வைத்துக்கொண்டு தாங்கள் மூவரும் மற்றை எழுவர்க்கும் முன்னேயா

ய்த்து ஆவிர்ப்பவித்தது. இவர்கள் மூவரும் ப்ரணவம்போலே யாய்த்து ப்ரதானராயிருப்பது. இவர்கள்தான் த்வாபராந்தத்துக்கும் கலியுகாதிக்கும் நடுவுண்டான ஸந்தியிலே யாய்த்து அவதீர்ணரானது. அத்தைப்பற்ற (முன்னே) யென்று ப்ரதமஜராகப்பேசுகிறது. திருமழிசைப்பிரானும் அவர்களுக்குத் தோள்தீண்டியான காலத்திலேயாய்த்து அவதரித்தருளினது. மற்றுண்டானவர்கள் கலியுகாதியே தொடங்கி அடைவிலே யவதரித்தார்கள். இனி (நற்றமிழால் நூல்செய்கை) யாவது: விலக்ஷணமான த்ராவிட பாஷையாலே மற்றுண்டான ப்ரபந்தங்களுக்கும் விலக்ஷணமாம்படி, த்ராவிட சாஸ்த்ரரூபமான திவ்யப்ரபந்தங்களை நிர்மித்தது, அவை தான், "வையந்தகளி" "அன்பேதகளி" "திருக்கண்டேன்" என்கிற திருவந்தாதிகளென்றபடி. "செஞ்சொற்கவிகாள்" என்றும், "செந்தமிழ்பாடுவார்" என்றும், "இன்கவிபாடும் பரமகவிகளால்" என்றும் கொண்டாடும்படியிறே இதின் நன்மையிருப்பது. "பெருந்தமிழனல்லேன் பெரிது" என்று தாங்களும் இத்தை ஆதரித்தார்களிறே. இப்படி ஸ்வபர விபாகமறக் கொண்டாடும்படி யாய்த்து இவர்கள் ஸூக்திகளின் ஏற்றமிருப்பது இப்படி அதிசயாவஹமான ஸூக்தி விசேஷங்களாலே ஜகத்திலுண்டான அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கி, உஜ்ஜீவிப்பித்த ப்ரபாவத்தை யுடையவர்களென்னுமத்தாலே முதலாழ்வார்களென்கிற திருநாமமானது லோகத்திலே வர்த்தியாநின்றது. பெற்றிமை-பெருமை. இத்தால் இவர்களுடைய "జన్మనావిద్యయాచ-ஜந்மநா வித்யயாச" என்கிறதான ப்ராதம்யமானது ப்ரகாசிப்பிக்கப்பட்டதாய்த்து

அ-ம் பாட்டு.

பேதைநெஞ்சே யின்றைப் பெருமை யறிந்திலையோ
ஏதுபெருமை யின்றைக் கென்றியேல்—ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ் மங்கையர்கோன் மாநிலத்தில் வந்துதித்த
கார்த்திகையிற் கார்த்திகைநாள் காண்.

பதவுரை.

**பேதை-அறிவில்லாத, நெஞ்சே-மனமே, இன்றை-இந்தத்தினத்தின், பெருமை-வைபவத்தை, அறிந்திலையோ-நீ அறியவில்லையோ? இன்றைக்கு-இந்தத்தினத்துக்கு, ஏதுபெருமை-என்னவைபவம், என்றியேல்-என்றுகேட்**

பாயாகில், ஓதுகின்றேன்-அதை உனக்குச்சொல்லுகின்றேன், அதாவது, வாய்த்த-பொருந்திய, புகழ்-வைபவத்தையுடைய, மங்கையர்கோன்-திரு மங்கையாழ்வார், மாநிலத்தில்-இந்தப்பெரிய உலகத்தில், வந்து உதித்த-வந்து அவதரித்தருளின, கார்த்திகையில்-கார்த்திகை மாஸத்தில், கார்த்திகை நாள்-கிருத்திகா நக்ஷத்திரமாகும், காண்-இதை நீ தெரிந்துகொள்.

வ்யாக்யாநம்.

எட்டாம்பாட்டு.—அநந்தரம் திருமங்கையாழ்வார் அவதரித்தருளின திருக்கார்த்திகை திருநக்ஷத்ரத்தினுடைய வைபவத்தைத் தம் திருவுள்ளத்தைக் குறித்து ப்ரச்நோத்தர ரூபேண அருளிச் செய்கிறார். (பேதைநெஞ்சே) யென்று தொடங்கி. கீழே "ஈதிவர் தோற்றத்தடைவாம்" என்று அருளிச்செய்த அடைவன்றிக்கே இனிமேல் மாஸங்களினுடைய சேர்த்திக்காக வந்த க்ரமத்திலே அருளிச்செய்கிறார். சேதநர்க்கு இதுவும் ஒரு புத்த்யாரோஹண க்ரமமிருக்கும்படி. மாஸங்களை அடைவே சொல்லிக்கொண்டு போகலாவதொரு ஸௌகர்யமுண்டிறே. (பேதை நெஞ்சே யின்றைப் பெருமை யறிந்திலையோ) அல்லாத நக்ஷத்ரங்களோடு இத்தையும் ஒன்றாக எண்ணுகிற அறிவிலியான நெஞ்சே! உஜ்ஜீவிக்கைக்கு ஹேதுவான இற்றைத் திவஸத்தின் மஹத்தையும் மநநம்பண்ணுகைக்குப் பரிகரமான நீ அப்படி அறியமாட்டிற்றில்லையோ? (ஏது பெருமை யின்றைக் கென்றியேல்) அல்லாத திவஸங்களைக்காட்டில் இத்திவஸத்துக் குண்டான பெருமை தானேது? அத்தையறிந்த நீர் அருளிச்செய்யலாகாதோவென்று நீ சொன்னையாகில், (ஓதுகின்றேன்) அப்படியே அறிந்த நான் அறியாத உனக்கு உபதேசிக்கிறேன். (வாய்த்தபுகழ்) இத்யாதி, "மன்றில் மலிபுகழ் மங்கைமன்னன்" என்கிறபடியே தன் ஸ்வரூபத்துக்கு அநுரூபமாகவே சேர்ந்திருப்பதான புகழையுடையராய், திருமங்கைக்கு மன்னரான இவர், மஹாப்ருதிவியிலே வந்தவதரித்தது, கார்த்திகை மாஸத்தில் கார்த்திகை நக்ஷத்ரங்காணென்று ஓதுகின்றேன். இவர்க்குப் புகழ் வாய்க்கையாவது: "மாயோனை வாள்வலியால் மந்திரங்கொண்ட" இதுவாய்த்து, "மந்திரங்கொள் மங்கையர்கோன்" என்னக்கடவதிறே. திருமந்த்ர லாபமிறே இவருடைய யசஸ்ஸுக்கடி. வாய்க்கை-கிட்டுகை. அதுதானும் "வாய்த்த திருமந்திர" மிறே. அன்றிக்கே இவரவதாரத்தாலே வாய்த்த புகழையுடைய மங்கை யென்னவுமாம்.

(மங்கையர்கோன் மாநிலத்தில் வந்துதித்த கார்த்திகையில் கார்த்தி கைநாள் காண்) இப்படியான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ் வார் "இருள்தருமா ஞால" த்தில் அவித்யையான தமஸ்ஸைப் போக்கும்படி அவதரித்தருளினது, கார்த்திகைமாஸத்தில் க்ருத் திகா நக்ஷத்ரத்திலேகாண். "కలయామి కలిధ్వంసం కవిలోక దివాకరం- கலயாமி கலித்வம்ஸம் கவிலோக திவாகரம்" என்றும் இவரை ஆதித்யனாகச் சொல்லுகையாலே (வந்துதித்த) என்கிறார். இப் படி இவர் ஆவிர்ப்பவித்தருளின வைபவத்தை யறிந்து நான் ஓது விக்க அறியாத நீ இத்தை அதிகரித்து ஆதரிப்பாயாக. இவர்தாம் "நெஞ்சுக்கிருள்கடி தீப" மான "தெய்வநன்மாலை" யாகிற திவ்ய ப்ரபந்தத்தை யுண்டாக்கும்படி அவதரித்தருளினவராகையாலே அதுதான் தீபாராதந திவஸமுமாய்வந்து நேர்பட்டதிறே. "కుర్వాణః కార్త్తికేమాసి విష్ణోర్దీపంహి మన్దిరే-குர்வாண: கார்த்திகேமாஸி விஷ்ணோர்தீபம்ஹி மந்திரே" என்றும் "విష్ణ్వాలయేతు కార్త్తిక్యాం దీపదానం కరోతియః-விஷ்ண்வாலயேது கார்த்திக்யாம் தீபதாநம் கரோதிய:" என்றுஞ் சொல்லக்கடவதிறே. இதுதான் (இன் றைப்பெருமை) என்கிற மஹத்தைக்கீடாக மஹாநக்ஷத்ரமுமாயி றே யிருப்பது.

கூ-ம் பாட்டு.

மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன்
ஆறங்கங் கூற அவதரித்த—வீறுடைய
கார்த்திகையிற் கார்த்திகைநாள் இன்றென்று காதலிப்பார்
வாய்த்தமலர்த் தாள்கள்நெஞ்சே வாழ்த்து.

பதவுரை.

மாறன்-நம்மாழ்வார், பணித்த-அருளிச்செய்த, தமிழ்மறைக்கு-திரா விடவேதங்களான, திருவிருத்தம்-பெரியதிருவந்தாதி-திருவாசிரியம்-திருவா ய்மொழி என்னும் நாலுப்ரபந்தங்களுக்கும், மங்கையர்கோன்-திருமங்கையா ழ்வார், ஆறு அங்கம்-ஆறு அங்கங்களான, பெரியதிருமொழி-திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம்-திருவெழுகூற்றிருக்கை-சிறியதிருமடல்- பெரியதிருமடல் என்னும் ஆறு பிரபந்தங்களை, கூற-அருளிச்செய்ய, அவ தரித்த-திருவவதாரஞ்செய்த, வீறுஉடைய-பெருமையுடைய, கார்த்திகை யில்-கார்த்கை மாதத்தில், கார்த்திகைநாள்-கிருத்திகா நக்ஷத்திரம், இன்று என்று-இன்றையதினமென்று, காதலிப்பார்-விரும்புமவர்களுடைய, வாய்

த்த-பொருந்திய, மலர்-தாமரைமலர்போன்ற, தாள்கள்-திருவடிகளை, நெஞ்சே-மனமே, வாழ்த்த-வாழ்த்துவாயாக.

வ்யாக்யாநம்.

ஒன்பதாம் பாட்டு.—“శఠకోపవాఙ్మయం—சடகோப வாங்மய” மான சதுர்வேதத்துக்கும் ஷடங்கங்களை யருளிச்செய்யும்படி திருமங்கையாழ்வார் அவதரித்தருளின திருக்கார்த்திகைத் திருநக்ஷத்ரத்தைப் பலகாலும் ஆதரிக்குமவர்களை மங்களாசாஸநம் பண்ணென்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார். (மாறன்பணித்த தமிழ்மறைக்கு) ஸம்ஸ்க்ருத வேதம்போலே தான்றோன்றியாய் அடியொத்திருக்கை யன்றிக்கே ஆழ்வாரிடத்திலே யவதரித்த ஏற்றமுண்டிறே திருவாய்மொழிக்கு. “వేదః ప్రాచేతస సాదాసీత్—வேத: ப்ராசேதஸாதாஸீத்” என்னுமாபோலே. (தமிழ்மறை) யென்கையாலே த்ராவிடரூபமான வேதமென்கை. తగ్ం హర్షిం గిరిరూపా నవిజ్ఞాతా నదర్శయాంచకార తేషాగ్ం హృదైకస్మా స్మష్టిమాదదే సహోవాచ భరద్వాజేత్ర్యా మంత్ర్యవేదావాఏతే అనంతా వై వేదాః—నమోవాచేయాచోదితా యాచానుదితా తస్యైవాచే నమోవాచే స్వసంస్కృత ద్రావిడ వేదసూక్తిః, ద్రావిడీం బ్రహ్మసంహితాం—தங் ஹர்ஷிங் கிரிரூபா நவிஜ்ஞாதா நதர்சயாம்சகார தேஷாங் ஹ்ருதயேகைகஸ்மாங் முஷ்டிமாததே ஸஹோவாச பரத்வாஜேத்ர்யா மந்த்ர்யவேதாவாஏதே அநந்தாவைவேதா—நமோவாசேயாசோதிதா யாசாநுதிதா தஸ்யைவாசே நமோவாசே—ஸ்வஸம்ஸ்க்ருத த்ராவிட வேதஸூக்தி:, த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்” என்றும் அருளிச்செய்தாரிறே பட்டர். ஆழ்வாரைக்கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பித்ததே ஹேதுவாக இவராலே ப்ரணீதமானதாகச் சொல்லக்கடவது. (மங்கையர்கோன் ஆறங்கங்கூற அவதரித்த) இப்படி இவராலே யுண்டான த்ராவிட வேத சதுஷ்டயத்துக்கும் ஸ்வஸூக்திகளான ஷட்ப்ரபந்தங்களை அருளிச்செய்யும்படி அவதரித்தருளினாரிறே, திருமங்கையாழ்வார். திருவிருத்தம் முதலான நம்மாழ்வார் ப்ரபந்தங்கள் நாலுக்கும் திருமொழி முதலான திருமங்கையாழ்வார் ப்ரபந்தங்கள் ஆறும் அங்கங்களாயிறே யிருப்பது. அது த்ராவிடவேதமானால் இதுவும் த்ராவிட ரூபமான அங்கங்களென்னக் குறையில்லை. திருவாய்மொழியினுடைய வேதத்வத்தையும் இதினுடைய அங்கத்வத்தையும் ஆசார்யஹ்ருதயத்திலே

பாக்க உபபாதித்தருளினாரிறே. (வீறுடைய கார்த்திகையில் கார்த்திகைநாள்) இப்படியான ஏற்றத்தையுடைத்தான வேத வேதாங்க தத்வஜ்ஞரான இவர் அவதரிக்கையாலே அல்லாத திருநக்ஷத்ரங்களிற் காட்டிலும் வீறுடையதாய்த்து கார்த்திகையில் கார்த்திகைதானிருப்பது. இவர்தாம் பராங்குச பரகாலாதிக ளென்னும்படியிறே ப்ரஸித்தராய்ப் போருகிறது. தாமும் "உம்மடியாரோடொக்க எண்ணியிருத்தீ ரடியேனை" என்றிறே அருளிச்செய்தது. அதுபோலேயாய்த்து, திருநக்ஷத்ரம். அதுக்குமேலே, "தானுகந்த வூரெல்லாந் தன்றாள் பாடும்" தன்னேற்றமுண்டே யிவர்க்கு. இப்படி இவரடியாக வுண்டான அதிசயத்தையுடைய (கார்த்திகையில் கார்த்திகைநா ளின்றென்று காதலிப்பார்) இந்நாள்களினிடையிலே இதுவுமொரு "மதிநிறைந்த நன்னாள்" உண்டாவதே யென்று இதின் வைபவத்தை இடைவிடாமல் அநுஸந்தித்து, இதிலே அத்யபிநிவேசத்தைப் பண்ணிப் போந்தருளுவர்கள். அவர்களாகிறார்,"குறையல் பிரானடிக்கீழ் விள்ளாத வன்ப னிராமாநுசன்" போல்வார். அவர்கள், (வாய்த்த மலர்த்தாள்கள் நெஞ்சே வாழ்த்து) அவர்கள் நமக்குச் சேஷிகளாகையாலே ஸ்வரூப ப்ராப்தமாய் நிரதிசய போக்யமான திருவடிகளை, "போந்ததென்னெஞ்சு" என்னும்படி அதிலே அதிப்ரவணமாய்ப் போருகிற மநஸ்ஸே அச்செவ்வி மாறாமல் நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணி உன் ஸ்வரூபம் பெறப்பார். "இன்புறுந் தொண்டர் செவ்வடி யேத்தி வாழ்த்துமென் னெஞ்சமே" என்னக்கடவதிறே. வாய்க்கை-பொருந்துகை. (மலர்த்தாள்கள்) மலர்போன்ற திருவடிகள். இத்தால் ஆசார்யபரதந்த்ரர்க்கு அநுகூல வ்ருத்தி செய்து போருகை ஸ்வரூபமென்றதாய்த்து. இந்தத் திருமங்கையாழ்வார் திருநக்ஷத்ரத்தைத் திருக்கலிகன்றிதாஸரென்று திருநாமத்தை யுடையராய், சதிருடைய தமிழ்விரகராய், அருளிச்செயல் நாலாயிரம் பாட்டுக்கும் அர்த்தோபதேசம் பண்ணுமவராய்ப் போருகிற லோகாசார்யரான நம்பிள்ளையும் தத்வம்ச்யரும் மிகவும் பரிபாலித்துப் போருவர்களென்று, பெரியோர்கள் அருளிச்செய்துபோருவர்கள். பிள்ளை ஆதரிக்கிறது ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யத்தாலே. தத்வம்ச்யர் ஆதரிக்கிறது. பிள்ளையுடைய திருநக்ஷத்ரமும் அதுவென்றாகவேணும்.

௧௦-ம் பாட்டு.

கார்த்திகையில் ரோகிணிநாள் காண்மினின்று காசினியீர்
வாய்த்த புகழ்ப்பாணர் வந்துதிப்பால்—ஆத்தியர்கள்
அன்புடனேதா னமலனாதிபிரான் கற்றதற்பின்
நன்குடனே கொண்டாடும் நாள்.

பதவுரை.

காசினியீர்-பூமியிலுள்ளவர்களே, வாய்த்த-தகுந்த, புகழ்-வைபவத்தையுடைய, பாணர்-திருப்பாணாழ்வார், வந்துஉதிப்பால்-வந்து அவதரித்ததனாலே, ஆத்தியர்கள்-ஆர்த்தியுடையவர்கள், அன்புடனே-பிரீதியுடன், அமலனாதிபிரான்-அமலனாதிப்பிரான் என்னும் ப்ரபந்தத்தை, கற்று-அப்யஸித்து, அதற்பின்-அதன்பிற்பாடு, நன்குடனே-நன்மையுடன், கொண்டாடும்-கொண்டாடக்கூடிய, நாள்-நாளாகிய, இன்று-இன்றையதினம், கார்த்திகையில்-கார்த்திகைமாதத்தில், கார்த்திகைநாள்-கிருத்திகா நக்ஷத்ரமென்று, காண்மின்-கண்டுகொள்ளுங்கள்.

வ்யாக்யாநம்.

பத்தாம்பாட்டு.—இனி, கார்த்திகை நக்ஷத்ரத்துக்கு அநந்தரம் ரோஹிணிநக்ஷத்ரமாகையாலும், மாஸமும் அதுவாகையாலும் அந்தச் சேர்த்திக்காகக் கார்த்திகையில் ரோஹிணிநாளானது திருப்பாணாழ்வார் திருவவதரிக்கையாலே ஆஸ்திகராலே ஆதரணீயமாய் உபலாலிக்கப்படுமதான நாளென்கிறார், (கார்த்திகையில் ரோகிணிநாள் காண்மினின்று காசினியீர்) கீழ்ப்பாட்டில் தம் திருவுள்ளத்தைக் குறித்து, உபதேசித்தவர் மீளவும் இப்பாட்டில் லௌகிகரைக் குறித்து உபதேசிக்கிறார், தம்மோடு அவர்கள் ஏகமாவார்களாக வேணுமென்கிற திருவுள்ளக்கருத்தாலே. (ரோகிணிநாள்) என்கிற இதுதான், க்ருஷ்ணனவதரித்த திருநக்ஷத்ரமாயிருக்கும். இவர்க்கு, "கோவலனாய் வெண்ணெயுண்ட வாய னென்னுள்ளங் கவர்ந்தானை" என்றிறே அவ்விஷயத்தில் பாவபந்த மிருப்பது. ஆகையாலே திருநக்ஷத்ரமும் அதுவாய்த்து. அவ்வளவு மன்றிக்கே, சரமச்லோகார்த்த ப்ரகாசகரான திருக்கோட்டியூர் நம்பியும் வையாசி ரோஹிணிநாள் "உறியில் வெண்ணெயோ டியலுண்ட ஒருவனைப்போல் அவதரித்தார்" என்கையாலே இது முப்புரியூட்டியிருப்பது. இப்படி மும்மடங்கான ஏற்றத்தையுடைத்தான இதுதான் என்றென்ன, (இன்று காண்மின்) அது இன்றுகாணுங்கோள். காலாந்தரே யன்றிக்கே

"ஐயம்மாஸ:-அயம்மாஸ:" என்கிறபடியே அது இன்றுவதே! இவர்க்குஅதில் ஆதராதிசயம் அதீதகாலமா யிருக்கச்செய்தே யும் ஸமகாலமாயிருக்கிறபடி. நிதிகாட்டுவாரைப்போலே காணுங் கோளென்று ப்ரத்யக்ஷிப்பிக்கிறார். (காசினியீர்) என்று ஒருவர் இருவரன்றிக்கே, "யதிகச்சிந் முமுக்ஷுஸ்யாத்-யதிகச்சிந் முமுக்ஷுஸ்யாத்" என்கிறபடியே தம் கசையாலே ஒருநாடாக உபதேசிக்கிறார். இதின் ஏற்றந்தான் இன்னத்தாலே யென்று எங்களுக்கு அறிவித்தா லாகாதோவென்ன, (வாய்த்த புகழ்ப்பாணர் வந்துதிப்பால்) என்கிறார். வாய்த்தபுகழாவது: தன் ஸ்வரூபத்துக்குச் சேர்ந்த புகழ். அதாவது: ஸஹஜ தாஸ்யத்துக்கு அநுகுணமான நைச்யத்தை ஜந்மஸித்தமாக உடையராகையாலே ஸ்ரீலோக ஸாரங்க முனிகளுடைய சிரஸாவாஹ்யராம்படி பண்ணி, அங்கிகரித்தருளின புகழ். "பாரியலும் புகழ்ப் பாண்பெருமாள்" என்னக்கடவதிறே. (பாணர் வந்துதிப்பால்) "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே-ஏதத்ஸாமகாயந்காஸ்தே" என்கிற முக்தர் வ்ருத்தியை இங்கே பெரியபெருமாள் விஷயத்திலே வாக்வ்ருத்தியான அடிமைசெய்து போருகையால் அதுவே தமக்கு நிரூபகமாயிருக்குமவர் (வந்துதிப்பால்) "அண்டர்கோனணியரங்கன்" ஆகையால், அவரைப் பாடுகைக்காக அங்குள்ளாரிலே ஒருவர் இங்கே அவதரித்தார் என்னும்படி அவதரிக்கையால், (ஆத்தியர்கள் கொண்டாடு நாள்) என்கிறது. அவர்களாகிறார் லோகஸாரங்க மஹாமுநிகளைப் போலே ப்ரமேயபூதரான அர்ச்சாரூபியான பெரியபெருமாள் விஷயத்திலும் தத் ப்ரதிபாதகதயா வந்த ப்ரமாண ச்ரேஷ்டமான "அமலனுதிப்பிரான்" என்கிற செந்தமிழான இவர் ப்ரபந்தத்தினிடத்திலும், தத் ப்ரமாதாக்களாய், நிகர்ஷத்வாநுஸந்தாந யுக்தரான இவ்வாழ்வார் விஷயத்திலும், மேலெழுந்த ஆகாரங்களைப் பாராதே, நிரவதிக விஸ்ரம்ப யுக்தராய் "பாட்டினால் கண்டுவாழும் பாணர்தாள் பரவு" மவராய், இருக்குமவர்கள். (அன்புடனேதா னமலனுதிபிரான் கற்றதற்பின்) "சீரிய நான்மறைச் செம்பொருளைச் செந்தமிழா லளித்த" என்கிறபடியே ஸகல வேத ஸங்க்ரஹமாய் அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்தை அகார உகார மகாரங்களாலே முதலிட்டு மூன்று பாட்டினுடைய அடியிலே அருளிச்செய்த படியையும் அந்த ப்ரணவ ப்ரதிபாத்யமான வஸ்து

லை ப்ரணவாகாரமான விமாந மத்யத்தில் அடியேதொடங்கி, முடி யளவும் அநுபவித்த ப்ரபந்தமென்கிற ஆதரத்துடன் ஆசார் யோச்சாரணாநுச்சாரண க்ரமத்தாலே அப்யஸித்த பின்பு, (நன் குடனே கொண்டாடும் நாள்) தத் பலமான ப்ரமாணங்களின் விஷ யத்திலே விச்வாஸத்தை யுடையராய் ஆஸ்திகராயிருக்குமவர்கள், விதிப்ரேரிதராய் இத்தைத் தங்களுக்கு ச்ரேயஸ்ஸாக எண்ணி, உபலாலிக்கப்படுமதான நாளென்கை. ஆகையாலே நீங்களும் ஆஸ்திகராய் நான் சொல்லுகிறத்தை விச்வஸித்து புத்திபண்ணு ங்கோளென்று கருத்து.

கக-ம் பாட்டு.

மன்னியசீர் மார்கழியில் கேட்டையின்று மாநிலத்தீர்
என்னிதனுக் கேற்ற மெனிலுரைக்கேன்—துன்னுபுகழ்
மாமறையோன் தொண்டரடிப்பொடியாழ்வார் பிறப்பால்
நான்மறையோர் கொண்டாடும் நாள்.

பதவுரை.

மாநிலத்தீர்-பெரிய இவ்வுலகத்திலுள்ளவர்களே! இன்று-இன்றைய தினம், மன்னிய-நிலைபெற்ற, சீர்-வைபவத்தையுடைய, மார்கழியில்-மார் கழிமாதத்தில், கேட்டை-கேட்டைநக்ஷத்திரமாகும், இதனுக்கு-இந்த நா ளுக்கு, ஏற்றம்-பெருமை, என் எனில்-என்னவென்று கேட்பீர்களானல், உரைக்கேன்-சொல்லுகிறேன், அது, துன்னு-பொருந்திய, புகழ்-சிறப்பை யுடைய, மா-பெருமை பொருந்திய, மறையோன்-பிராமணோத்தமரான, தொண்டரடிப்பொடியாழ்வார்—, பிறப்பால்-அவதாரத்தாலே, நான்மறை யோர்-நான்கான வேதங்களையறிந்தவர்கள், கொண்டாடும்-கொண்டாடக் கூடிய, நாள்-நாளாகும்.

வ்யாக்யாநம்.

பதினொன்றும்பாட்டு— ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார், அவதரித்தருளின மார்கழியில் கேட்டையானது, பரம வைதிக ராலே பரிபாலிக்கப்படுமதான நாளென்று பரோபதேசம் பண் ணுகிறார். (மன்னியசீர்) இத்யாதி. மார்கழிக்கு சீர்மன்னுகை யாவது: "మాసానాం మార్గశీర్షోహం—மாஸாநாம் மார்கசீர்ஷோஹம்" என்னும்படி வைஷ்ணவ மாஸமாகையாலும், "மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாள்" என்று ஆண்டாள் ஆதரித்துப் போரும் படியான அதிசயத்தை உடைத்தாகையாலும் திருவத்யயநம்

தொடங்கும் காலமாகையாலும் வந்த சீர்மையையுடைத்தாகை. அதுக்கு மேலே "திருப்பள்ளியெழுச்சி" என்கிற ப்ரபந்த முகேந பெரியபெருமாளைத் திருப்பள்ளி யுணர்த்துமவரான, இவர் அவதாரணத்துக்குப் பாங்காக நேர்பட்ட ஏற்றமுமுண்டிறே. அன்றிக்கே (மன்னியசீர்) என்கிற இது கேட்டைக்கு விசேஷணமாய் அது மாஸங்களில் ச்ரேஷ்டமானாற்போலே இதுவும் நக்ஷத்ரங்களில், ஜ்யேஷ்டையாயிருக்கை. "విప్రాణాం జ్ఞానతో జ్యేష్ఠ్యమ్—விப்ராணாம் ஜ்ஞாநதோ ச்ரேஷ்டம்" என்கிறபடியே ஜ்ஞாநாதிக்யத்தை யுடைய இவர் அவதரித்தருளின ஆதிக்யமுண்டிறே இதுக்கு: இவர், "மன்னியசீர் தொண்டரடிப்பொடி" யாகையாலே அவர் அவதரித்தருளின திருநக்ஷத்ரமும் சீர்மைமன்னி யிருக்குமிறே. இப்படி பகவத்பாகவத ஸம்பந்தங்கள், மாறாதே போரும்படியான ஏற்றங்களை யுடைத்தான நன்னாளானது இன்றுவதே. (மாநிலத்தீர்) ததீய சேஷத்வமே நிரூபகமாம்படியான மாஹாத்ம்யத்தை யுடைய இவர் அவதரித்தருளுகையாலே தத் ஸம்பந்தயுக்தமான மஹாப்ருதிவியில் உள்ளவர்களே, (என்னிதனுக் கேற்றமெனி லுரைக்கேன்) இம்மாஸத்தில் மற்றை நக்ஷத்ரங்களும் உண்டாயிருக்க, இதுக்கு ஏற்றம் என் என்கிறீகோளாகில், இதின் ஏற்றம் அறிந்த நான் சொல்லக் கேளுங்கோள் (துன்னுபுகழ்) இத்யாதி. அதாவது: "துளபத்தொண்டாய தொல்சீரை" யும் "கற்றினம் மேய்த்த எந்தை கழலிணைக்கீழ்- உற்ற திருமாலை பாடுஞ்சீரை" யும் உடையராகையாலே வந்த குணவத்தா ப்ரதையை யுடையராயிருக்கை. இவர்தாம், "மிக்கசீர்த் தொண்ட" ரிறே. "செய்யும் பசுந்துளபத் தொழில் மாலையும் செந்தமிழில், பெய்யும் மறைத்தமிழ் மாலையு" மிறே. இவர் செய்துகொண்டு போருவது. இவருடைய "అహం సర్వం కరిష్యామి—அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" யிருக்கிறபடி. இதிறே இவர்க்கு ஸம்ருத்தமான யசஸ்ஸு. "மலிபுகழ் வானவ" ரென்னுமாபோலே. (மாமறையோர்) இதுக்கெல்லாமடி வேதார்த்த விசாரம் பண்ணும் விப்ரச்ரேஷ்டராகை யென்கை. "வைதிகரே, மெய்ப்படியாலுன் திருவடி சூடும் தகைமையினார்" என்னும்படி பரம வைதிகராகையாலே நித்ய கைங்கர்ய நிரதராயிருக்கை. அதிறே இவர்க்கு நிலைநின்ற புகழ். (மாமறையோன், தொண்டரடிப்பொடியாழ்வார்) "மிக்க

வேதியர் வேதத்தி னுட்பொரு'' ளான ததீய தாஸ்யத்திலே நிலை நின்று போருமவராகையாலே இவர்க்கு இவ்வபிதானமாய்த்து. "நம்பிக்கன்பர் தலைமீதடிப்பொடி" என்றிறே ததீய பரதந்த்ரருடைய ஏற்றமிருப்பது. (ஆழ்வார் பிறப்பால்) ஆழ்வார் பிறப்பே பிறப்பாவது. அல்லாதார் பிறப்பு தாழ்வாம் பிறப்பிறே. "என் செய்வான் தோன்றினேனே'' என்று இவர்தம்மை வ்யர்த்த ஜந்மாவாக அநுஸந்தித்தாரே யாகிலும் இவர் ஆழ்வார் பிறப்பென்னும் அதிசயமாக அருளிச்செய்கிறார். "స్పష్టస్త్వం వకవాసాయ-ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய" போலே (நான்மறையோர் கொண்டாடும் நாள்) இப்படி இவர் அவதரிக்கையாலே அவரைப்போலே வேத தாத்பர்யம் கைப்பட்டவர்கள், "கோது குல" மாகக் கொண்டாடும் நாளாயிறே யிருப்பது. (மாமறையோர்) பிறப்புக்கு அநுகுணமாக நான்மறையோர் கொண்டாடுகை ப்ராப்தமிறே. ஆகையாலே (மாநிலத்தீர்) ஆன நீங்களும் இதின் ஏற்றத்தை யறிந்து இத்தைப் பரிபாலித்து உஜ்ஜீவியுங்கோளென்று கருத்து. அதுக்குமேலே பெரிய கோயிலையும் பெரியபெருமாளையும், பேணிக்கொண்டு போருமவராய் லோககுருவுக்கும் குருவான கௌரவ்யதையை யுடையரான பெரியநம்பி அவதரித்தருளின ச்ரேஷ்டதையு முண்டிறே, மார்கழியில் கேட்டைக்கு.

கஉ-ம் பாட்டு.

தையில் மகமின்று தாரணியீ ரேற்றமிந்தத்
தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன்—துய்யமதி
பெற்ற மழிசைப் பிரான்பிறந்த நாளென்று
நற்றவர்கள் கொண்டாடும் நாள்.

பதவுரை.

தாரணியீர்-பூமியிலுள்ளவர்களே! இன்று-இன்றைத்தினம், தையில் மகம்-தைமாதத்தில் மகநக்ஷத்திரமாகும், இந்தத்தையில் மகத்துக்கு-இந்தத் தைமாதத்து மகநக்ஷத்திரத்துக்கு, ஏற்றம்-வைபவத்தை, சாற்றுகின்றேன்-சொல்லுகின்றேன், அதாவது, துய்ய-பரிசுத்தமான, மதி-ஞானத்தை, பெற்ற-உடைத்தான, மழிசைப்பிரான்-திருமழிசையாழ்வார், பிறந்த-அவதரித்தருளின, நாள் என்று-தினமென்று, நல்தவர்கள்-நல்ல தவத்தை யுடையவர்கள், கொண்டாடும்-புகழ்ந்து சொல்லும், நாள்-நாளாகும்.

வ்யாக்யாநம்.

பன்னிரண்டாம்பாட்டு— திருமழிசைப்பிரான் அவதரித்த தையில் மகத்தின் ஏற்றத்தைத் தாரணியி லுண்டானவர்களெல்லாம் அறியும்படி அருளிச்செய்கிறார். (தையில் மகமின்று தாரணியீர்) "தையொரு திங்களும்" என்னும்படியான தரத்தை யுடைய புஷ்யமாஸத்தில் மகம் இன்று. தாரணியிலுண்டானவர்களே! "ஏகாம் தரணி மாச்ரிதா" "—ஏகாம் தரணி மாச்ரிதா" என்கிறபடியே திருமழிசைப்பிரான் வந்தவதரித்த இஜ்ஜகத்திலே ஜந்மமாம்படியான பாக்யத்தை யுடையவர்களே! (ஏற்ற மிந்தத் தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன்) என்? மாசிமகமன்றோ மஹாநக்ஷத்ரமாக வழங்குகிறது. இதுக்கேற்ற மென்னென்றால், இதுக்குண்டான அதிசயத்தை ஸர்வலோக ப்ரஸித்தமாக நான் சொல்லக் கேளுங்கோள். இதுக்குண்டான ஏற்றந்தான் இன்னதென்கிறது. (துய்ய மதி பெற்ற) இத்யாதியால். அதாவது: பரிசுத்தமான ஜ்ஞாநத்தை ஸர்வேச்வரன் ப்ரஸாதத்தாலே "மயர்வற மதிநலமருள" ப்பெற்றவராய், திருமழிசைக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அவதரித்தருளின திருநக்ஷத்ர மென்று நல்ல தபஸ்ஸை யுடையவர்களாலே கொண்டாடப்படும் நாளாகையாலே யென்கை. (துய்யமதி) "என்மதிக்கு விண்ணெல்லா முண்டோ விலை" என்று தாமும் ஆதரித்துப் பேசும்படியாயிறே யிருப்பது. மதிக்குத் தூய்மையாவது: தேவதாந்தரங்கள் பக்கல் பரத்வ புத்தி யாகிற மாலிந்ய மற்றிருக்கை. "மனனக மலமறக்கழுவி" என்று தேவதாந்தர பரத்வ புத்தியிறே மஹாமாலிந்யமாக அருளிச்செய்தது. இவர்தாம், "தாதுலாவு கொன்றைமாலை துன்னு செஞ்சடைச் சிவன் நீதியால் வணங்கு பாத" என்றும் "போதில்மங்கை பூதலக்கிழத்தி தேவி" என்றுதொடங்கி, "வேதநூ லோதுகின்ற துண்மை யல்ல தில்லை மற்றுரைக்கிலே" என்றும், "உள்ள நோய்கள் தீர்மருந்து வானவர்க் களித்த எம் வள்ளலாரை யன்றி மற்றோர் தெய்வம் நான் மதிப்பனே" என்றும், "பார்மிகுத்த" இத்யாதி. "சீர்மிகுத்த நின்னலாலொர் தெய்வம் நான் மதிப்பனே" என்றும், "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனுந் தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்று தொடங்கி "பிறிது மனமில்லேன் பிஞ்ஞகன் றன்னோடெதிர்வன்வ

னெனக்கு நேரான்" என்றும், "கல்லாதவ ரிலங்கை கட்டழித்த காகுத்த னல்லா லொருதெய்வம் யானிலேன்" என்றும், "இனி யறிந்தே னீசற்கும் நான்முகற்குந் தெய்வம் இனியறிந்தே னெம் பெருமா னுன்னை" என்றும் இப்படி ஸ்வப்ரபந்தங்களில் ஆதிமத் யாவஸாநங்கள் எல்லாவற்றிலும் "உறையிடை விடாதவ" ரென் னும்படி அப்ரதிஹதமான தம்முடைய பராபர தத்வஜ்ஞாநத்தை ப்ரகாசிப்பித்தருளினாரிறே. (மழிசைப்பிரான் பிறந்தநாளென்று) இப்படி திவ்ய ஜ்ஞாநத்தையுடைய இவர் ஒருபிறவியிலே இரு பிறவியாகப் பிறந்தநாளென்று, (நற்றவர்கள் கொண்டாடும் நாள்). இவர்தாம் ருஷி புத்ரராக அவதரிக்கையாலே (நற்றவர்கள் கொண் டாடும் நாள்) என்கிறது (பிறந்தநாள்) என்று. அல்லாதார் பிறவி "அன்று நான் பிறந்திலேன்" என்னும்படி அஸத் கல்பமாயிறே யிருப்பது. "பிறந்தபின் மறந்திலேன்" என்று பகவத் ஸம்பந்த ஜ்ஞாநமுடைய ஜந்மத்தையிறே இவர் ஜந்மமாக அருளிச்செய் தது (பிறந்தநாள்) என்று. இப்படி அவதரித்தருளின விசேஷ மான திருநக்ஷத்ரமென்று விசேஷஜ்ஞரானவர்களால் அந்த ப்ரதி பத்தியோடே பரிபாலிக்கப்படுமதாயிருக்கும். தவமாகிறது-ப்ர பத்தி. "తస్మాన్న్యాసమేషాం తపసా మతిరిక్తమాహుః-தஸ்மாந்ந்யாஸமே ஷாம் தபஸா மதிரிக்தமாஹு:" என்றும் "சார்வே தவநெறி" என்றும் சொல்லக்கடவதிறே. ஆகையால் அடைக்கலம் புகுந்து "வேறாக வேத்தி யிருக்கு மிவரது தபச்சப்தவாச்யையான ப்ர பத்தி. நற்றவமாகிறது: ஆசார்யாபிமாந நிஷ்டை, "மற்ற வரைச் சாத்தியிருப்பார் தவம்" என்னக்கடவதிறே. அத்தை யுடையவர்களாகிறார் கணிகண்ணர், பெரும்புலியூரடிகள் போல் வார். இத்தால் ஆசார்யாபிமாந நிஷ்டர்க்கு இது அவச்யம் ஆத ரணீயமென்றதாய்த்து.

கரு-ம் பாட்டு.

மாசிப் புனர்பூசங் காண்மினின்று மண்ணுலகீர்
தேசித் திவசத்துக் கேதென்னில்—பேசுகின்றேன்
கொல்லி நகர்க்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்.

பதவுரை.

மண்ணுலகீர்-பூலோகத்திலுள்ளவர்களே! இன்று-இன்றையதினம், மாசி-மாசிமாதத்தில், புனர்பூசம்-புனர்பூச நக்ஷத்ரமென்று, காண்மின்-கண்டுகொள்ளுங்கள், இத்திவசத்துக்கு-இந்தத்தினத்துக்கு, தேசு-பெருமதிப்பு, எது என்னில்-என்னவென்றால், பேசுகின்றேன்-அதை உங்களுக்குச்சொல்லுகின்றேன், அதாவது: கொல்லிநகர்க்கோன்-கொல்லி என்னும் நகரத்துக்குத் தலைவரான, குலசேகரன்-குலசேகராழ்வாருடைய, பிறப்பால்-அவதாரத்தாலே, நல்லவர்கள்-பெரியோர்கள், கொண்டாடும்-கொண்டாடக்கூடிய, நாள்-நாளாகும்.

வ்யாக்யானம்.

பதின்மூன்றாம்பாட்டு.—ஸ்ரீகுலசேகரப்பெருமாள் அவதரித்தருளின மாசிப்புனர்பூசத்தின் அதிசயத்தை மந்தமதிகளுக்கும் அறியும்படி ப்ரகாசிப்பித்தருளுகிறார். (மாசிப் புனர்பூசங் காண்மினின்று மண்ணுலகீர்) "மாசி முன்னாள்" என்னும்படி விலக்ஷண பரிக்ரஹமான மாசிமாஸத்தில் புநர்வஸு நக்ஷத்ரங் காணுங்கோள். பூதலத்திலவர்களா யுள்ளவர்களே! அதுதானும் இன்றுவதே உங்களுக்கு. (இன்று) என்று பூத பவிஷ்யத்தா யுள்ளது வர்த்தமானம்போலே தோற்றுகிறது தம்முடைய ஆதராதிசயத்தாலே. (மாசிப் புனர்பூசம்) சைத்ரமாஸத்தில் புநர்வஸு நக்ஷத்ரத்திலேயாய்த்து, சக்ரவர்த்தித் திருமகன் அவதரித்தருளினது. "எல்லையில் சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்றது முதலாத் தன்னுலகம் புக்கதிறு" என்று தத்வைபவத்தை ப்ரதிபாதிக்குமவராகையாலே இவர்க்கு நக்ஷத்ரமும், அதுவாய்த்து. ராஜகுலங்களிலே அவதரிப்பார்க்கு நக்ஷத்ரமும் அதுவாகவேணும்போலேகாணும். இப்படி பகவத் ஸம்பந்தமுடைய திருநக்ஷத்ரமாய்த்து இவர் அவதரித்தது. (மண்ணுலகீர்) பூலோகத்திலுண்டான போக்ய போகோபகரணங்களை விரும்பி பகவத் பாகவதவிமுகராய்ப் போருகிற லௌகிகராயுள்ளவர்களே! அந்த வைமுக்யத்தைத் தவிர்ந்து, நான் சொல்லுகிற அர்த்தத்தை புத்திபண்ணுங்கோள். விண்ணாட்டிலுண்டானவர்கள் விசேஷஜ்ஞரிறே. அவிசேஷஜ்ஞராய் "உண்டியே உடையே உகந்து" "மாரனார் வரிவெஞ்சிலைக் காட்செய்து" போருகிற உங்களுக்கிறே நான் உபதேசிக்கவேண்டுவது. இப்படி எங்களுக்கு உபதேசிக்கைக்கடியான இத்திவஸத்தினுடைய பெருமதிப்புத்தா னேதென்ன, (பேசுகின்

றேன்) இத்யாதி, "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்று இவர் அருளிச்செய்தபடியே கொல்லி என்கிற நகரத்துக்கு நாதராய், சேரகுலத்துக்கு சேகரரான ஆழ்வார் அவதரிக்கையாலே வந்த ஔஜ்வல்யத்தை யுடைத்தாய் அத்தாலே ஸத்பரிக்ராஹ்யமாயிருக்கை. குலசேகரன் பிறப்பென்றால் உடல்பிறவி யன்றிக்கே, உயிர்ப்பிறவியாயிறே யிருப்பது. "ஊனேறு செல்வத் துடற்பிறவி யான்வேண்டேன்" என்னுமித்யாதியாலும் அத்தை அடியொத்தினவர், ராஜாவான குலசேகரப் பெருமாள் திருமலையிலே திர்யக் ஸ்தாவர ஜந்மங்களை ஆசைப்பட்டாரென்றும் அருளிச்செய்யும்படியிறே இவருடைய உபேக்ஷையும் ஆகாங்க்ஷையு மிருக்கும்படி. தாஸ்யாநுகுணமான ஜந்மமிறே ஜந்மமாவது. "ஆழியங்கைப் பேராயர்க்காளாம் பிறப்பு விண்ணாட்டுத்தேசு" என்றாரிறே. இப்படி சேஷத்வாநுகுணமான ஜந்மத்தை அபேக்ஷிக்கும்படியான இவர் அவதரித்த இத்தால் தேசித்திவசத்திற்குண்டாய்த்து. ஆகையால் இத்திவஸம் (நல்லவர்கள் கொண்டாடும் நாள்) அவர்களாகிறார் "கொல்லி காவலன் சொல் பதிக்குங் கலைக்கவி பாடும் பெரியவ"ரென்கை. நல்லவர்கள்-ஸத்துக்கள். தங்களோபாதி பிறர்க்கும் நன்மையை ஸம்பாதிக்குமவர்கள். கொண்டாடும் நாளாவது: அவர்களாலே உபலாலிக்கப்படுமதான நாளென்கை. இவர்தாம் "எல்லையி லடிமைத்திறத்தினில் என்றும் மேவுமனத்தனாம்" என்னும்படி எல்லையான ததீய சேஷத்வத்திலே ஊன்றிப்போரும் நன்மையையுடையராய் அத்தாலே அவர்களுக்காகத் தாம் குடப்பாம்பில் கையிட்டுப் போரும் குணதிகருமா யிருக்கையாலே அக்குணங்களிலே தோற்று அவர் திருவடிகளுக்கு நல்லராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களாலே ஆதரிக்கப்படுமதான நாளாயிருக்குமிறே. ஸ்ரீகுலசேகரப்பெருமாள் "இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்" என்றும் "உருப்பசிதன் அம்பொற்கலையல்குல் பெற்றாலுமாதரியேன்" என்றும் "நல்பதத்தையும் வேண்டேன்" என்றும் திருமலையில் திர்யக் ஸ்தாவர ஜந்மங்களை ஆசைப்பட்டுப் போருமவராகையாலே திருமலையில் ஜந்மத்தை ஆதரித்து அடிமைசெய்துபோருவர். ஸ்ரீகோவிந்தப்பெருமாளும் "த்ருணீக்ருதவிரிஞ்ச்யாதி நிரங்குசவிபூதய:-த்ருணீக்ருதவிரிஞ்ச்யாதி நிரங்

குசவிபூதய:" என்னும்படி எல்லாவற்றையும் த்ருணீகரித்துப் போருமவராய், "హృదినారాయణంపశ్య న్నాప్యగచక్రహస్సదా యస్స్వదార రతేశ్చాపి గోవిందంతముపాస్మహే-ஹ்ருதிநாராயணம்பச்யந் நாப்யகசத்ர ஹஸ்ஸதா யஸ்ஸ்வதாராரதேச்சாபி கோவிந்தம்தமுபாஸ்மஹே" என்றும் இதரவிஷயாநுபவத்துக்கு இருளும் ஏகாந்தமும் இல்லையென்றிருக்குமவ ராகையாலும் இவர்க்கும் அந்தத் திருப்புநர்பூசமே திருவவதாரத்துக்கு அநுகுணமான திருநக்ஷத்ரமாய்த்து. "அரசமர்ந்தானடிசூடு" மவரென்னும்படி ராமபாதாச்ரயருமா யிருக்குமாபோலே இவரும் ராமாநுஜ பதச்சாயயா யிருப்பர். தேவதாந்தர வைராக்யத்தில் வந்தால் திருமழிசைப்பிரானேடொப்பர். இவரும் ஒரு பிறவியிலே இருபிறவியானவரிறே, இவையெல்லாவற்ருலும் இத்திருநக்ஷத்ரம் முப்புரியூட்டினதாயிருக்குமென்கிற வைபவஞ் சொல்லிற்று.

கச-ம் பாட்டு.

ஏரார் வைகாசி விசாகத்தி னேற்றத்தைப்
பாரோ ரறியப் பகர்கின்றேன்—சீராரும்
வேதந் தமிழ்செய்த மெய்ய னெழில்குருகை
நாத னவதரித்த நாள்.

பதவுரை.

ஏர்-அழகு, ஆர்-பொருந்திய, வைகாசி-வைகாசிமாதத்தில், விசாகத்தின்-விசாகநக்ஷத்ரத்தின், ஏற்றத்தை-வைபவத்தை, பாரோர்-பூமியிலுள்ளவர்கள், அறிய-அறிந்துகொள்ளும்படி, பகர்கின்றேன்-சொல்லுகின்றேன், அதாவது: சீர்-வைபவம், ஆரும்-நிறைந்திருக்கிற, வேதம்-வேதங்களை, தமிழ்-தமிழ்ப்பாஷையில், செய்த-அருளிச்செய்த, மெய்யன்-மெய்ம்மையுடையவரான, எழில்-அழகிய, குருகை-திருக்குருகூருக்கு, நாதன்-நாயகரான நம்மாழ்வார், அவதரித்த-திருவவதாரஞ்செய்தருளின, நாள்-நாளாகும்.

வ்யாக்யாநம்.

பதினாலாம்பாட்டு.—அல்லாத ஆழ்வார்களையெல்லாம் அவயவபூதராக உடையராய், வேதாந்தார்த்தங்களையெல்லாம் திருவாய்மொழி முகேந ப்ரகாசிப்பித்தருளி, திருநகரிக்கு நாதராயிருந்துள்ள நம்மாழ்வார் அவதரித்தருளின திருவிசாக திருநக்ஷத்ரத்தின் வைபவத்தை பூமியிலுண்டானவர்கள் எல்லாரும் அறியும்படி ப்ரஸித்தமாக அருளிச்செய்கிருரு மென்கிருர் (ஏரார்) இத்

யாதியால். கீழ் அடங்கலும் மாஸங்கள் விச்சேதியாமல் அடை வே அருளிச்செய்து போந்தவர் இப்போது பங்குனி மாஸத் திலே ஆழ்வார்கள் அவதரண மில்லாமையாலும், சித்திரை மா ஸத்திலே மதுரகவி யாழ்வாருடையவும் எம்பெருமானாருடைய வும் அவதாரம் உண்டேயாகிலும் ஆழ்வார்கள் பதின்மருடைய அவதார க்ரமத்தை அருளிச்செய்யப் புகுமவராகையாலும் அவற் றை விட்டுவைத்து (ஏரார் வைகாசி) என்று தொடங்கி அருளிச் செய்கிறார். வைகாசி, ஏரார்ந்திருக்கையாவது: மாதவ மாஸமா கையாலே புஷ்பஸமயமான அழகையுடைத்தாகை. அவதரித்த ருளின தேசம் கொத்தலர் பொழிலையும், குயில் நின்றார் பொழிலையும் உடைத்தாயிருக்குமாபோலேயாய்த்து (ஏரார் வைகாசி விசாகம்) என்று. ஏராருகை விசாகத்திற்கு விசேஷண மாக்கவுமாம். அப்போது திருவிசாகத் திருநாள் என்னும்படி யிறே இதின் அலங்காராதிசய மிருப்பது. உகந்தருளின நிலங் கள் எல்லாவற்றிலும் பாலும் பழமுமாக அமுதுசெய்து பரிபால நீயமான திவஸமாயிருக்கை. அதாவது: பால்மாங்காய் அமுது செய்யப் பண்ணுகை. இப்படியான இதினுடைய ஏற்றத்தை (பாரோரறியப்பகர்கின்றேன்) இருந்ததே குடியாக எல்லாரும் இவருடைய ஜந்மமான வைகாசி விசாகத்தை யறிந்து உஜ்ஜீவிக் கும்படி சொல்லாநின்றேன். இத்தை ஒருவர் அபேக்ஷித்திருப் பார் இல்லாதிருக்கவும் இவருடைய அபிநிவேசாதிசயம் பேசு விக்கப் பேசுகிறபடி. இனி, இதுக்கெல்லாம் அடி இன்னதென் கிறது. (சீராரும்) இத்யாதி. வேதத்துக்குச் சீரார்ந்திருக்கை யாவது: அபௌருஷேயத்வாதிகளால் வந்த ப்ராமாண்ய ஸ்ரீயை யுடைத்தாகை. "சுடர்மிகு சுருதி" என்றிறே ஆழ்வார் அருளிச் செய்தது. அன்றிக்கே ஸ்ரீயப்பதியாய் பரப்ரஹ்ம வாச்யனான ஸர்வேச்வரனுடைய ஸ்வரூப ரூப குணங்களை உபபாதிப்பதான உத்தரபாகத்தை யாகவுமாம். "[illegible]— யச்ருதே ருத்தரம்பாகம் சக்ரே த்ராவிடபாஷயா" என்னக்கடவ திறே. (வேதந்தமிழ்செய்த) வேதந்தமிழ்செய்கையாவது: "எய் தற் கரிய மறைகளை ஆயிரமின்றமிழால் செய்தற் குலகில் வருஞ் சடகோபனை" என்கிறபடியே வேதமானல் அதிக்ருதாதிகாரமா யிருக்கு மாகையால் அகிலசேதநர்க்கும் அப்யஸித்து உஜ்ஜீவிக்

கை அரிதென்று, ஸர்வாதிகாரமாய் ஸர்வோபஜீவ்யமா யிருக்கும்படி. த்ராவிட பாஷாரூப ஸந்தர்ப்பத்தாலே வேதார்த்தத்தை விசதிகரித்து அருளிச்செய்தாரென்கை. "வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன்" என்றும் அருமறைகள் அந்தாதி செய்தான் என்றுஞ் சொல்லக்கடவதிறே. (மெய்யன்) அருளிச்செய்த தெல்லாம் வேதார்த்தமென்கைக் கடியான ஆப்தியிருக்கும்படி. (எழில் குருகை நாதன்) "குருகூர்ச் சடகோபன்" என்னுமாபோலே இதுக்கெல்லாம் அடி அவ்வூரில் பிறப்பாய்த்து. அவ்வூரிலே "ஆதிப்பிரான்" ஆன ஆதிநாதனும் உண்டாயிருக்கவும் இவருடைய நாதத்வமாய்த்து நடந்துசெல்லுகிறது. உபய ப்ரதாநமான ஆகாரம் உண்டாயிருக்கவும் இவருடைய நாதத்வத்தையாய்த்து அவன் நடத்தினபடி. "நலனிடை யூர்திபண்ணி வீடும்பெறுத்தித் தன் மூவுலகுந் தருமொரு நாயகம்" என்று தாமே அருளிச்செய்தாரிறே. (எழில் குருகை) நகராலங்காரங்களை யுடைத்தாயிருக்கை. அதாவது: குன்றம்போல் மணிமாடங்களையும் மாடலர் பொழில்களையும் சேர்த்தடங்களையும், ஏர்வளங்களையும் உடைத்தாயிருக்குமென்கை. "கட்டெழில் தென்குருகூர்" என்னக்கடவதிறே. அன்றிக்கே, ஜகதாபரணரான வகுளாபரணர் அவதரிக்கையாலே வந்த அழகாகவுமாம். அன்றிக்கே, (எழில்) ஆழ்வார்க்குவிசேஷணமாய், ஜ்ஞாந பக்த்யாதிகளாகிற வைஷ்ணவாலங்காரங்களால் வந்த அழகைச் சொல்லிற்றாகவுமாம். (எழில்குருகை நாதன் அவதரித்த நாள்) ஊரும் நாடும் உலகமும் தம்மைப்போலேயாக்க வல்லவர் அவதரித்தநாள். ஸம்ஸாரத்தினிடையிலே ததுத்தாரகரான ஆழ்வார் அவதரித்தாற்போலே யாய்த்து இந்நாள்களினிடையிலே இந்நாள் நமக்கு நேர்பட்டதும். ஆகையால் இந்தப்பரம ரஹஸ்யத்தை (பாரோரறியப் பகர்கின்றேன்) என்று தம்முடைய பரம க்ருபையாலே வெளியிட்டருளினாராய்த்து.

கடு-ம் பாட்டு.

**உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்**
**உண்டோ சடகோபர்க் கொப்பொருவர்—உண்டோ**
**திருவாய்மொழிக்கொப்பு தென்குருகைக் குண்டோ**
**ஒருபார் தனிலொக்கு மூர்.**

பதவுரை.

வைகாசிவிசாகத்துக்கு-வைகாசிமாதத்துவிசாகநக்ஷத்ரத்துக்கு, ஒப்பு-சமானமாக, ஒருநாள்-ஒருதினமானது, உண்டோ—, சடகோபர்க்கு-நம்மாழ்வாருக்கு, ஒப்பு-சமானமாக, ஒருவர்-யாதாமொருவர், உண்டோ—திருவாய்மொழிக்கு-திருவாய்மொழி ப்ரபந்தத்துக்கு, ஒப்பு-சமானமான ப்ரபந்தம், உண்டோ—, பார்தனில்-பூமியில், தென்குருகைக்கு-தெற்குத் திசையிலிருக்கும் ஆழ்வார் திருநகரிக்கு, ஒக்கும்-சமானமாகும், ஒருவூர்-யாதானும் ஒரு ஊர். உண்டோ—, இல்லையென்றபடி.

வ்யாக்யாநம்.

பதினஞ்சாம்பாட்டு—கீழ் ப்ரஸ்துதமான ஆழ்வாருடையவும் அவதரித்தருளின தேச காலங்களுடையவும் அவர் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களினுடையவும் அப்ரதிம வைபவத்தை ஸ்வகதமாய்ப்பேசி அநுபவிக்கிறார். (உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்) ஸர்வேச்வரனும் அவன் விபூதியும் ஸம்ருத்தமாம்படி மங்களாசாஸநம் பண்ணப் பிறந்த திருவிசாகத் திருநாளுக்கு ஒப்பாவதொருநாள் உண்டோ? "நீ பிறந்த திருநன்னாள்" என்னும்படியான அந்நாளும் "க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வ" ஜந்மமான இவர் அவதரித்த இந்நாளுக்கு ஒப்பாகவற்றோ? அங்கு அவன் பிறவியில் அக்ரூராதிகளான நால்வரிருவரிறே அநுகூலராய்த் திருந்தினது. இங்கு. "తానహం ద్విషతః క్రూరాన్-தாநஹம் த்விஷத: க்ரூராந்" என்று தொடங்கி, "క్షిపామి-க்ஷிபாமி" என்று அவன் கைவிட்டவர்களையும் "நின்கண் வேட்கை யெழுவிப்பனே" என்னும்படி இவர்களுக்கு அபிநிவேசத்தை யுண்டாக்கும்படி அவதரித்த திவஸமிறே இது. (உண்டோ சடகோபர்க் கொப்பொருவர்) அவதாரமே தொடங்கி, "శఠానాం బుద్ధిదూషక-சடாநாம் புத்திதூஷக" ராய் "సుజ్ఞాన ఘనపూర్ణ-ஸுஜ்ஞாந கநபூர்ணராய் இருக்கிற இவருடைய ஜ்ஞாந வைபவத்துக்கு ஸத்ருசராமவர்களை ஸர்வ லோகத்திலும் தேடிப்பார்த்தாலும் ஒரொருவரைக் கேட்டோமோ? அந்ந பாநாதிகளென்ன, பக்வபலாதிகளென்ன, "அப்பால் முதலாய்நின்ற அளப்பரிய ஆரமுது" என்ன, இவற்றாலே தாரகாதிகளாம்படி யிருக்கிற ஸம்ஸாரிகள், தொடக்கமானார் "நாட்டாரோ டியல்வொழிந்து நாரணனை நண்ணி" "எல்லாம் கண்ணன்" என்று "விண்ணுளாரிலுஞ் சீரிய"

ராயிருக்கிற இவர்க்கு ஒப்பாகமாட்டார்களிறே. "நித்யஸூரிகளை யொழிந்த மற்றையார்க்கு பலஸாதந தேவதாந்தரங்களில் இவர்கள் நினைவு பேச்சிலே தோன்றும்படியா யிருக்கும்." என்று ஆசார்ய ஹ்ருதயத்திலே நைநார் அருளிச்செய்தாரிறே. அங்ஙனன்றிக்கே நித்யஸூரிகளுக்கு "தெளிவிசும்பு திருநாடு" என்னும்படி பகவதநுபவத்துக்குப் பாங்காயிறே அத்தேசமிருப்பது. இது "விண்ணுளார் பெருமாற் கடிமைசெய்வாரையும் செறுமைமப்புல னிவை" என்னும்படி "இருள்தரு மாஞாலம்" ஆகையாலே பகவதநுபவத்துக்கு மேட்டுமடையாயிறே யிருப்பது. இப்படி யிருக்கிற இஸ்ஸம்ஸாரத்திலே பகவதநுபவமே யாத்ரையாயிருப்பார் இவர் ஒருவருமேயிறே யுள்ளது. ஆகையிறே ஸுதுர்லபமாய்த்து. "மாறுளதோ இம்மண்ணின்மிசை" என்றும் "இனியாவர் நிகர் அகல்வானத்தே" என்றும், உபய விபூதியிலும் தமக்கு ஒப்பாவாரில்லாமையைத் தம் திருவாயாலே அருளிச்செய்தாரிறே. இப்படி சடகோப னென்றால் எல்லார்க்கும் தலைமேலாராய் நாடடங்கக் கையெடுக்கும்படி மஹாத்மாவான இவர் அவதரித்த இம்மஹாநக்ஷத்ரத்துக்கும் இவர்க்கும் ஒப்பில்லாவிட்டால் இவருடைய வாங்மயமான திருவாய்மொழிக்கும் இவர் அவதரித்த தேசத்துக்கும் ஒப்புத்தானுண்டோவென்ன, அதுவும் இல்லையென்கிறார். (உண்டோ திருவாய்மொழிக் கொப்பு தென்குருகைக் குண்டோ ஒருபார் தனிலொக்கு மூர்" என்று. (உண்டோ திருவாய்மொழிக்கொப்பு) "திருமாலரலருளப்பெற்ற" வராய், "திருமாலவன் கவி" யான இவர் "சூழ்பட்டோடும்" என்னும்படி அநுபவ பரீவாஹத்தாலே "அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும்" என்னவேண்டும்படி இவருடைய பக்தி பலாத்காரத்தாலே அவதரித்த திருவாய்மொழிக்கு தர்ம வீர்ய ஜ்ஞாநாதிகளடியாக வுண்டான ஹர்ஷ வசநங்களில் அருளிச்செயலில் ஸாரமாயிருக்கிற இதுக் கொப்பாகவற்றோ? இத்தை யொழிந்தவையெல்லாம் கடலோசையோபாதி யென்னக்கடவதிறே. ஆகையாலே "அருள்கொண்டாயிர மின்றமிழ் பாடினன்" என்னும்படி இவரருளாலே அவதரித்த இது அஸத்ருசமாயிருக்குமென்றபடி. (தென்குருகைக்குண்டோ ஒருபார் தனிலொக்கு மூர்) ஆழ்வார்க்கு ஒப்பு ஒருவரும் உபயவிபூதி

லும் இல்லாதாற்போலே இவ்வூர்க்கு ஒப்பாவது ஒருருமில்லை யென்கை. பதினெண் பூமியிலும் தேடிப் பார்த்தாலும் குருகை வளம்பதிக்கு ஒப்பாவதோ ரூருண்டோ? உண்டாகில் "திருநாடு வாழி தென்குருகை வாழி" என்று அவன் நாட்டை ஒப்புச்சொல்லுமித்தனை. "திருநகரிக் கொப்பாரியுண்டோ வுலகில்" என்னக்கடவதிறே. "ஆற்றில் துறையில் ஊரில் உள்ள வைஷம்யம் வாசாமகோசரம்" என்றிறே அருளிச்செய்தது. (தென்குருகை) ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான வூர் "நல்லார் பலர் வாழுங் குருகூர்" என்றும் "சயப்புகழார் பலர்வாழுந் தடங்குருகூர்" என்றும் சொல்லும்படி "பெரிய வண்குருகூ" ரான ஸ்ரீநகரியிறே. அன்றிக்கே தெற்குத்திக்கிலே யுண்டான தென்னவுமாம். இத்தால் திருநக்ஷத்ரத்தினுடையவும் திருவவதரித்த ஆழ்வாருடையவும் திருவாய்மொழியினுடையவும், திருநகரியினுடையவும் உபமான ராஹித்யத்தால் வந்த ஆதிக்யத்தை உபபாதித்தருளினாராய்த்து. இந்த விசாகநக்ஷத்ரந்தான் ராஜர்ஷிகளான இக்ஷ்வாகுக்களுடைய ருக்ஷமென்று இக்ஷ்வாகுவம்ச ப்ரபாவஜ்ஞராலே விவக்ஷிதமாகையாலும் "ஐக்ஷ்வாகம் ருக்ஷம் ஜுஷாமஹே" என்னும்படி இவ்வாழ்வார்க்கும் அதுவே ஜந்மர்க்ஷமாய்த்து.

கரு-ம் பாட்டு.

இன்றைப் பெருமை யறிந்திலையோ ஏழைநெஞ்சே
இன்றைக் கென்னேற்ற மெனிலுரைக்கேன்—நன்றிபுனை
பல்லாண்டு பாடியநம் பட்டர்பிரான் வந்துதித்த
நல்லானியிற் சோதி நாள்.

பதவுரை.

ஏழை-அறிவிலியான, நெஞ்சே-மனமே, இன்றை-இன்றைத்தினத்தின், பெருமை-வைபவத்தை, அறிந்திலையோ-நீ அறியவில்லையோ, இன்றைக்கு-இன்றைத்தினத்துக்கு, ஏற்றம் என்-வைபவமென்ன, எனில்-என்று கேட்பாயானால், உரைக்கேன்-சொல்லுகிறேன், நன்றி-நன்மையை, புனை-கொண்டிருக்கிற, பல்லாண்டு-திருப்பல்லாண்டை, பாடிய-பாடியருளிய, நம்-நம்முடைய, பட்டர்பிரான்-பெரியாழ்வார், வந்து உதித்த-வந்து அவதரித்ததான, நல்-நன்மையான, ஆனிதனில்-ஆனிமாதத்தில், சோதிநாள் சுவாதிநக்ஷத்ரமாகும்.

வ்யாக்யாநம்.

பதினாறும்பாட்டு—இனிமேல் ஆழ்வார்கள் எல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார் என்னும்படியான ப்ரபாவத்தை யுடையரான, பெரியாழ்வார் வைபவத்தைப் பெருக்க அஞ்சுபாட்டாலே அருளிச்செய்வதாகக் கோலி, அதில் இப்பாட்டிலே திருப்பல்லாண்டு முகத்தாலே ஜகத்தை உஜ்ஜீவிப்பித்தருளின இவர் அவதரித்தருளின ஆனிதனில் சோதியினுடைய அதிசயத்தைத் தம் திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார். (இன்றைப் பெருமை யறிந்திலையோ ஏழைநெஞ்சே) கீழ்ச்சொன்ன திருநக்ஷத்ரங்களுக்கும், இந்தத் திருநக்ஷத்ரத்துக்கும் வாசி அறியாமல் அவற்றிலே சாபலம் பண்ணுகிற மநஸ்ஸே! அவர்களில் இவர்க்கு, "பர்வத பரமாணுவோட்டை வாசி" யுண்டானால், நாளின் பெருமையையும் அவ்வோபாதி வாசியுண்டென்று அறிய வேண்டாவோ? அறியாமைக்கு ஹேது உன் ஏழைத்தனமிறே. ஆகில் இன்றைக்கேற்றம் என்னென்பாயாகில், இதின் நெடுவாசி அறிந்திருக்கிற நான் சொல்லக்கேள். (நன்றிபுனை) இத்யாதி. அதாவது: அகாலகால்யமான தேசத்தில் அஸ்தாநே பயசங்கிகளான "அயர்வறுமமரர்க"ளாலே அநவரத மங்களாசாஸநம் பண்ணப்படுகிற வஸ்து, கலி ஸாம்ராஜ்யம் பண்ணுகிற ஸம்ஸாரத்திலே எதிரம்பு கோப்பாரா யிருக்கிற ப்ரதிகூலர் நடுவே அதி ஸுகுமாரமான திவ்யமங்கள விக்ரஹத்துடனே சக்ஷுர் விஷயமாகத் தோன்றியருளுவதே என்று வயிறுபிடித்து, ஆனைமேல் கிடந்த மணிகளைத் தாளமாகக் கொண்டு, அத்தலைக்கு அதிசயமாம்படி திருப்பல்லாண்டு பாடின நம்முடைய நாதரான பட்டநாதர் வந்து அவதரித்த விலக்ஷணமான ஜ்யேஷ்டமாஸத்தில் ஸ்வாதி நக்ஷத்ரமாய்த்து. ஆகையால் ஸர்வாதிசயமான இதின் வைபவத்தை அறிந்து ஆதரிப்பாயாக. (நன்றிபுனை) என்று நன்றியைப் புனைந்திருக்கிற பல்லாண்டென்னுதல், நன்றியை அவனுக்குப் புனைகிற பல்லாண்டென்னுதல். "தான்மங்கலமாதலால்" என்றும், "பல்லாண்டென்று காப்பிடும்" என்றும், சொல்லக்கடவதிறே. புனைதல்-பந்தித்தல். (பட்டர்பிரான்) என்கையாலே பரஸ்வரூபத்தை இதரநிரஸந பூர்வகமாக ஸ்தாபித்தபடி சொல்லிற்று. (பல்லாண்டு பாடிய) என்கையாலே திவ்யமங்கள விக்ரஹத்தைப் பரிந்து நோக்

கினபடி சொல்லிற்று. இத்தால் ஈச்வரனுடைய ஸ்வரூபாதிக ளெல்லாம் ஆழ்வாராதீநமென்றதாய்த்து.

கஎ-ம் பாட்டு.

மாநிலத்தில் முன்னம் பெரியாழ்வார் வந்துதித்த
ஆனிதன்னில் சோதியென்றால் ஆதரிக்கும்—ஞானியருக்
கொப்பொருவ ரில்லையிவ் வுலகுதனி லென்றுநெஞ்சே
எப்பொழுதுஞ் சிந்தித் திரு.

பதவுரை.

மாநிலத்தில்-பெரியபூமியிலே, முன்-முற்காலத்தில், நம்-நம்முடைய, பெரியாழ்வார்—, வந்து உதித்த-வந்து அவதரித்தருளின, ஆனிதன்னில்-ஆனிமாதத்தில், சோதி என்றால்-சுவாதி நக்ஷத்திரமென்று சொன்னால், ஆதரிக்கும்-பிரீதிபண்ணும், ஞானியருக்கு-ஞானவான்களுக்கு, இவ்வுலகு தனில்-இவ்வுலகத்தில், ஒப்பு-சமானமாக, ஒருவர் இல்லை என்று-ஒருவருங் கிடையாது என்று, நெஞ்சே-மனமே, எப்பொழுதும்-எந்தக்காலத்திலும், சிந்தித்து-மனனம் பண்ணி, இரு-இருப்பாயாக.

வ்யாக்யானம்.

பதினேழாம்பாட்டு.—இனி இத்திருநக்ஷத்ரமென்றால் இதின் ஏற்றமறிந்து ஆதரிக்கும் ஜ்ஞாதாக்களினுடைய அந்த உபமாநரா ஹித்ய முகத்தாலே இதின் வைபவத்தை அருளிச்செய்கிறார். (மாநிலத்தில் முன்னம் பெரியாழ்வார் வந்துதித்த) இம் மஹாப்ரு திவியிலே நம்முடைய ஸத்தாதிகளுக்குக் காரணமாம்படி பூர்வஜ ராய் வந்து அவதரித்த. அவதரிக்குமவருடைய பெருமைக்கு ஈடாம்படியாய்த்து, (நம்பெரியாழ்வார்) என்றும் (நம்பட்டர் பிரான்) என்றும் இவர்க்கு இவ்விஷயத்திலுண்டான பாவபந்த மிருக்கிறபடி. (வந்துதித்த) தம்முடைய ஸத்தாதிகளே யன் றிக்கே நம்முடைய ஸத்தாதிகளும் மங்களாசாஸநத்தாலே யாம் படி அத்தைத் திருப்பல்லாண்டு முகேந வெளியிட்டு, தம்முடைய யாத்ரையே நமக்கு எல்லார்க்கும் யாத்ரையாக்கி, நடத்திப்போரு மவர் வந்தவதரித்த. (ஆனிதன்னில் சோதியென்று லாதரிக்கும்) இப்படி மங்களாசாஸந பரரான இவர் அவதரிக்கையாய்த்து இத்தை ஆதரிக்கைக்கடி. அல்லாத திருநக்ஷத்ரங்களில் வைத்துக் கொண்டு, ச்ரேஷ்டரான இவர் அவதரித்த ஜ்யேஷ்ட மாஸத்தில், ஸ்வாதியாகிற திருநக்ஷத்ரமென்றால், மேல்விழுந்து ஆதரிக்கும்

ஜ்ஞாதாக்களுக்கு ஸத்ருசராவாரில்லை. (ஆதரிக்கும் ஞானியர்க்கு) ஆதரியாத அஜ்ஞரொப்பாகவல்லர்களோ? ஜ்ஞாதாக்கள் வைபவமறிந்து ஆதரிக்கையிறே ஜ்ஞாநபலம். (ஒப்பொருவரில்லை யிவ்வுலகுதனில்) பரந்த உலகமான இஜ்ஜகத்தெல்லாம் தேடிப்பார்த்தாலும் மங்களாசாஸநபரர், மாஹாத்ம்யம் அறிந்து ஆதரித்துப் போரும் மஹாத்மாக்களுக்கு உபமாநமாவார் ஒருவருமில்லை. உண்டாகில் அவ்வுலகிலேயாய்த்துள்ளது. அவர்கள்தான் திவ்யஜ்ஞாநோபபந்நராயிறே யிருப்பது. ஆகையால் மங்களாசாஸநபரர் வாசி அறியுமவர்களை அறிந்து ஆதரித்துப்போருவார் அவர்களிறே. இப்படியாகையால் இங்கு இவர்களுக்கு ஸமாநரில்லை. (என்று நெஞ்சே எப்பொழுதும் சிந்தித்திரு) ததீய வைபவாபிஜ்ஞமான நெஞ்சே! எப்போதும் நான் சொன்ன அர்த்தம் கேட்டு இது ஒன்றென்று ஸர்வகாலத்திலும் புத்திபண்ணிப்பார். கிட்டாததொன்று கிட்டுமென்று ப்ரமிக்கவேண்டா. இத்தால் ஆழ்வார்க்கு ஒப்பில்லாதாப்போலேயாய்த்து இவர்களுக்கும் ஒப்பில்லாதபடி. இவ்வாழ்வார்தான் "ஞானச்சுடர்" விஷயத்திலே நீராட்டி, பூச்சூட்டி, காப்பிட்டாற்போலே, பெரியதிருமலை நம்பியும், "சுமந்து மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு" என்னும்படி "எழில்கொள்சோதி" விஷயத்திலே "ஒழிவில்கால"த்திலபடியே, அடிமைசெய்து போருகையால் அவருடைய சோதியே இவர் அவதாரத்துக்கு அநுரூபமான சோதியாய்த்து. அவ்வளவுமன்றிக்கே, "தூண்தன்னூடரியாய் வந்து தோன்றி, "ஜ்வலந்தம்—ஜ்வலந்த" மென்னும்படியாய், அவர் திருவாராதநமாய்ப் போருமவர்க்கும் சோதியிறே. ஸ்வாதி நக்ஷத்ரந்தான் தேவகணமாய் ஜ்யோதிரூபமாயிறே யிருப்பது. "త్రేతాయా మాదికల్పే కిలకమలయుగే మాధవే మాశిపక్షే శుక్లే సాధ్యేచ యోగే వణిజసుకరణే భూతతిథ్యాం మరుత్భే మన్దే వారే ప్రదోషే కనకకశిపు సంహరేహేతో ర్జనిత్వా—த்ரேதாயா மாதிகல்பே கிலகமலயுகே மாதவே மாஸிபக்ஷே சுக்லே ஸாத்யேச யோகே வணிஜஸு—கரணே பூததித்யாம் மருத்பே மந்தேவாரே ப்ரதோஷே கநககசிபு ஸம்ஹாரஹேதோர் ஜநித்வா" என்னக்கடவதிறே. இதுவும் மூப்புகிழூட்டின திருநக்ஷத்ரமாயிருக்கும்.

௧௮-ம் பாட்டு.

மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்க ளார்வத்தளவு தானன்றி,—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வாரென்னும் பெயர்.

பதவுரை.

மங்களாசாசனத்தில்-மங்களாசாஸநம் பண்ணுவதில், மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள்-மற்றுள்ளவர்களான ஆழ்வார்களுடைய, ஆர்வத்து அளவு தான் அன்றி-ப்ரீதியின் அளவேயன்றி, பொங்கும்-அதிகரித்த, பரிவாலே-ப்ரேமத்தாலே, வில்லிபுத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவரான, பட்டர்பிரான்-பட்டர்பிரானென்பவர், பெரியாழ்வார் என்னும் பெயர்-பெரியாழ்வார் என்று சொல்லப்படும் திருநாமத்தை, பெற்றார்-பெற்றனர்.

வ்யாக்யாநம்.

பதினெட்டாம்பாட்டு.—மங்களாசாஸநத்தில் மற்றுண்டான ஆழ்வார்களுக்கும் இவர்க்கும் உண்டான வெடுவாசியாலே பெரியாழ்வாரென்னும் திருநாமம் இவர்க்கு உண்டாய்த்தென்று தங்முகேந வுண்டான வைபவத்தை அருளிச்செய்கிறார். (மங்களாசாசனத்தில்) என்று தொடங்கி. அதாவது: மங்களாசாஸநத்தில் வந்தால் இவரையொழிந்த மற்றை ஆழ்வார்கள் தங்கள் பக்தியினளவன்றிக்கே ஸம்ருத்தமான பகவத் ஸ்நேஹத்தாலே ஸ்ரீவில்லிபுத்தூரைத் தமக்கு நிரூபகமாகவுடைய பட்டநாதரான இவர் பெரியாழ்வாரென்னும் திருநாமத்தை லபித்தாரென்கை. இப்படியிறே இவர் பெற்றது. மங்களாசாஸநமாவது: அத்தலையில் ஸௌகுமார்யமடியாகத் தன்னை அழியமாறியும் அங்குத்தைக்கு அதிசயங்களை ஆசாஸிக்கை. "[illegible]—பரகதாதிசயா தாயகத்வ" மிறே ஸ்வரூபம். "சேஷிக் கதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும் ப்ராப்யமும்" என்றிறே அருளிச்செய்தது. "மயர்வற மதிநல மருள" ப்பெற்றது முதலான இவ்வாகாரங்கள் ஒத்திருந்தாலும் ஸ்வரூபாநுரூபமான மங்களாசாஸநம் பண்ணுகையில் வந்தால் இவர் அதிசயித்திறேயிருப்பது. (ஆழ்வார்கள் தங்களார்வம்) "அதனில் பெரிய என்னவா" என்று, தத்வத்ரயத்தையும் விளாக்கொலை கொள்ளும்படி ஆசை பெரிதாயிறே யிருப்பது. அந்த அவா அறும்படியான அநுபவத்தை

யிறே இவர்கள் அபேக்ஷித்தது. "அபிநிவேசம்போவது அநுபவத்தாலே, ஸத்தா ஸம்ருத்திகள் தர்சநாநுபவ கைங்கர்யங்களாலே" என்னும்படியிறே அவர்கள் தங்கள் ஆர்வமிருப்பது. ஆகையால் அவர்களுக்கு அது காதாசித்கமாயிறே இருப்பது. இப்படி ஸ்வ ஸம்ருத்தியை அபேக்ஷித்துப் போருகிறவர்கள், பக்தியின் அளவன்றிக்கே இவையெல்லாம் இவர்க்கு மங்களாசாஸநத்தாலே யென்னும்படி பரஸம்ருத்யைக பரமாயிறே இவருடைய பக்திப்ர கர்ஷமிருக்கும்படி. (பொங்கும் பரிவாலே) மேல்மேலெனப் பெருகிவருகிற ஸ்நேஹத்தாலே. அதாவது: "அன்பே பெருகும்" என்றும், "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்றும் "ஸ்நேஹோ மே பரம:—ஸ்நேஹோமே பரம:" என்றும் சொல்லுகிறபடியே ஆச்ரயத்தளவன்றிக்கே கரைபுரண்டாய்த்து இவருடைய காதல்தானிருக்கும்படி. "சோராத காதல் பெருஞ் சுழிப்பால் தொல்லை மாலை யொன்றும் பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன் றாள்" என்னக்கடவதிறே. மாலுக்கு நேரான மாலிறே இவரது. ஸர்வாதிகனுக்கு ஸத்ருசமான ப்ரேமாதிக்யமென்றபடி. இனி ப்ரேமாதிக்யத்தாலே வந்த நாமாதிக்யத்தைச் சொல்லுகிறது. (வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வாரென்னும் பெயர்) இவர்க்கு இவ்வபிதாந வ்யபதேசத்துக்கு எல்லாம் அடி இவ்வூரில் பிறப்பாய்த்து. "ஆராத காதல் குருகூர்ச் சடகோபன்" என்னுமாபோலே. (வில்லிபுத்தூர் பட்டர்பிரான்) இவருடைய க்ராம குலாதிகள் இருக்கிறபடி. "வில்லிபுத்தூருடையான்" என்றிறே இவர்க்கு நிரூபகம். "விஷ்ணுசித்தன்" என்றும், "கோயிலில் வாழும் வயிட்டணவன்" என்றும் சொல்லுகிறபடியான இவர்க்கு "விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்ய:—விஷ்ணுநாவ்யபதேஷ்டவ்ய:" என்கிறபடியே எல்லாம் அதுவேயாயிருக்கை. (பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வா ரென்னும் பெயர்) ஸர்வேச்வரனுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தை ஸாதித்து, பேர்பெற்றதற்குமேல் அவனுடைய ஸௌகுமார்யத்துக்குக் கலங்கி மங்களாசாஸநம் பண்ணுகையாலே பேர்பெற்றது இதுவே யாய்த்து. இவர்க்கு மங்களாசாஸநம் நித்யமாகையாலே நிலை நின்ற திருநாமம் இதுவாய்த்திறே.

கசூ-ம் பாட்டு.

கோதிலவா மாழ்வார்கள் கூறு கலைக்கெல்லாம்
ஆதி திருப்பல்லாண் டானதுவும்—வேதத்துக்கு
ஓமென்னுமதுபோ லுள்ளதுக் கெல்லாஞ் சுருக்காய்த்
தான்மங்கல மாதலால்.

பதவுரை.

ஆழ்வார்கள்கூறு-ஆழ்வார்கள் அருளிச்செய்த, கோது இலவாம்-குற்றமில்லாதனவாகிய, கலைக்கு எல்லாம்-ப்ரபந்தங்களுக்கெல்லாம், ஆதி-முதன்மையாக, திருப்பல்லாண்டு—, ஆனதுவும்-ஆயிருப்பதும், வேதத்துக்கு-வேதங்களுக்கு, ஓம் என்னுமதுபோல்-ஓம் என்று உச்சரிக்கும் ப்ரணவம் போலே, உள்ளதுக்கு எல்லாம்-மற்றுள்ள ப்ரபந்தங்களுக் கெல்லாம், சுருக்கு ஆய்-சங்கிரகமாக, தான்-அத்திருப்பல்லாண்டு, மங்கலம் ஆதலால்-மங்களகரமான மங்களாசாஸநமா யிருத்தலாலேயாம்.

வ்யாக்யாநம்.

பத்தொன்பதாம்பாட்டு.—இனி இவருடைய திவ்ய ஸூக்தியான திருப்பல்லாண்டினுடைய ஸகல திவ்யப்ரபந்த ப்ராதம்ய நிதாந கதந முகத்தாலே இதினுடைய வைபவத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார். (கோதிலவாம்) என்று தொடங்கி. கலைக்குக் கோதாவது : கதாந்தர ப்ரஸ்தாபம். அதில்லையாய்த்து. “இதிலந்தாதி” யான இவர்கள் திவ்யஸூக்திகளுக்கு “ராமாயணம், நாராயண கதை” யென்று தொடங்கி, அவற்றினுடைய தோஷ ஸாஹித்யத்தையும் இவற்றினுடைய தோஷ ராஹித்யத்தையும் ஆசார்ய ஹ்ருதயத்திலே உபபாதித்தருளினாரிறே. அன்றிக்கே, கோதில்லாமை ஆழ்வார்களுக்கு விசேஷணமானபோது, அவனுடைய க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பான ஸ்வயத்ந ரூப உபாயாந்தர கந்தமாதல், ப்ராப்ய த்வரையில் கண்ணழிவாதல் இல்லாதவர்களென்றபடி. கண்ணழிவுண்டாகில் காணமாட்டார்களிறே. கோதில்லாத காதலையுடையவர்களிறே இவர்கள்தான். (ஆழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்) இப்படி நிர்த்தோஷ ப்ரமாணமாய், “பேசிற்றே பேசும்” ஏககண்டரான ஆழ்வார்கள் அருளிச்செய்த “ஞானக்கலைகள்” என்றும், “அத்யாத்ம வித்யை” என்னும் சொல்லும்படியான திவ்ய ப்ரபந்தங்களுக்கெல்லாம், (ஆதி திருப்பல்லாண்டானதுவும்) அல்லாத திவ்ய ப்ரபந்தங்களிற்காட்

டில், இது ஆதியானதுவும் என்போலவென்னில், (வேதத்துக்கு) இத்யாதி. "ప్రణవాద్యా స్తథావేదాః ఓంకార ప్రభవా వేదాః— వాఙ్మయం ప్రణవం సర్వం-ப்ரணவாத்யா ஸ்ததாவேதா:—ஓங்கார ப்ரபவாவேதா: வாங்மயம் ப்ரணவம் ஸர்வம்" என்றும் சொல்லுகிறபடியே ப்ரணவம் ஸர்வ வேத ஸங்க்ரஹமாய் "ఓంకారశ్చాథ శబ్దశ్చ—ஓங்காரச்சாத சப்தச்ச" என்று தொடங்கி, "తస్మాన్మాఙ్గళికావుభౌ—தஸ்மாங்மாங்களிகாவுபௌ" என்றும், "అఇతి భగవతో నారాయణస్య ప్రథమాభి ధానస్య కిన్నామమంగళం నకృతం—அஇதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநம் கிந்நாமமங்களம் நக்ருதம்" என்று ஆதியிலே சொல்லப்படுகிற மங்களாசரணத்தையும் உடைத்தாயிருக்கையாலும் "యద్వేదాదౌ స్వరః ప్రోక్తః—யத்வேதாதௌ ஸ்வர: ப்ரோக்த:" என்று வேதத்துக்கு ப்ரணவம் ஆதியாயிருக்குமாபோலே, இதுவும், "ప్రాప్యస్య బ్రహ్మణోరూపం—ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம்" இத்யாதியில் ப்ரதிபாதிக்கிற அகில ப்ரபந்த தாத்பர்யமான அர்த்தபஞ்சகத்தை இப்ப்ரபந்தத்திலே அருளிச்செய்கையாலும் "பல்லாண்டு பல்லாண்டு" என்று தொடங்கி, "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்று எங்கும் மங்களாசாஸநமா யிருக்கையாலும், இப்படி ஸங்க்ரஹத்வ மங்களத்வங்களாலே இதுவும் அருளிச்செயல்களுக்கெல்லாம் ஆதியாயிருக்கக் குறையில்லை. இன்னமும் ப்ரணவாதியான திருமந்த்ரம் ப்ராப்யப்ரதாநமா யிருக்குமாபோலே தத்விவரணமான இதுவும் பராப்ய ப்ரதாநமாயிருக்கும். அவ்வளவுமன்றிக்கே, தத் வைபவ ப்ரதிபாதகமான அருளிச்செயல்களுக்கும் ஆத்யந்தாநுஸந்தாந க்ரமத்தாலே ரக்ஷகமுமா யிருக்கும். "బ్రహ్మణః ప్రణవం కుర్యా దాదావన్తేచ సర్వదా స్రవత్యనోఙ్కృతం పూర్వం పరస్తాచ్చ విశిష్యతే—ப்ரஹ்மண: ப்ரணவம் குர்யா தாதாவந்தேச ஸர்வதா ஸ்ரவத்யநோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாச்ச விசிஷ்யதே" என்னுமாபோலே. இத்தால் இவர் ஆழ்வார்களில் ப்ரதாநரா யிருக்குமாபோலே இவர் ப்ரபந்தமும் அருளிச்செயலில் ப்ரதாநமாயிருக்குமென்றதாய்த்து.

உ௦-ம் பாட்டு.

**உண்டோ** திருப்பல்லாண்டுக் கொப்பதோர் கலைதான்
**உண்டோ** பெரியாழ்வார்க் கொப்பொருவர்—தண்டமிழ்நூல்

செய்தருளு மாழ்வார்கள் தம்மிலவர் செய்கலையில்
பைதல்நெஞ்சே நீயுணர்ந்து பார்.

பதவுரை.

திருப்பல்லாண்டுக்கு—, ஒப்பது-சமானமானதாகிய, ஓர் கலைதான்-ஒரு ப்ரபந்தந்தான், உண்டோ—, பெரியாழ்வார்க்கு—, ஒப்பு-சமானமாக, ஒருவர்—, உண்டோ—, இவற்றை, தண்தமிழ்-ஈரத்தமிழாலே, நூல்-ப்ரபந்தங்களை, செய்தருளும்-அருளிச்செய்த, ஆழ்வார்கள் தம்மில்-ஆழ்வார்களிடத்திலும், அவர்-அவ்வாழ்வார்கள், செய்-அருளிச்செய்த, கலையில்-ப்ரபந்தங்களிலும், பைதல்-சிறுபிள்ளைத்தனமுடைய, நெஞ்சே-மனமே, நீ—, உணர்ந்து-தெரிந்து, பார்-பார்ப்பாயாக.

வ்யாக்யானம்.

இருபதாம்பாட்டு— இன்னமும் இவருடைய ப்ரபந்தத்துக்கும் இவர்க்கும் அப்ரதிமத்வத்தால் வந்த ஆதிக்யத்தை அருளிச்செய்கிறார். (உண்டோ திருப்பல்லாண்டுக்கு) என்று தொடங்கி. மங்களாசாஸநைகபரமான திருப்பல்லாண்டுக்கு அநுபவைக பரதையாலே ஆழங்கால் படுத்தவற்றுன அல்லாத திவ்ய ப்ரபந்தங்களில் உபமாநமாயிருப்பதொரு ப்ரபந்தமுண்டோ? "பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்றும், "ஆயிரத்து ளிவையுமோர் பத்தும் வல்லா ரூற்றின்கண் நுண்மணல்போ லுருகாநிற்பர் நீராயே" என்றும், "ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகுமே" என்றும் சொல்லுகிறபடியேயிறே இவற்றின் வாசியிருப்பது. (உண்டோ பெரியாழ்வார்க்கொப்பொருவர்) பகவத் ஸௌந்தர்யாதிகளுக்கு மங்களாசாஸநம்பண்ணி, அத்தாலே தரித்திருக்கிற மஹத்தையுடையரான இவர்க்கு பகவத் ஸௌந்தர்யாதிகளிலே மக்நராயிருக்குமவர்களில் ஸத்ருசராவார் ஒருவருண்டோ? "அடியோமோடும்" என்று தொடங்கி "அப்பாஞ்சசந்நியமும் பல்லாண்டே" என்னுமவர்க்கு "அடியே னின்னுந் தளர்வேனே, சிந்தை கலங்கித் திருமாலென் றழைப்பன், சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்தகண்ணீர்ததும்ப" என்றும் புக்கபுக்க துறைகளெல்லாவற்றிலும் அழுந்தும்படியான இவர்கள் ஒப்பாகமாட்டார்களிறே. இது மற்றையாழ்வார்க்கும் ஒக்கும். (தண்டமிழ்நூல் செய்தருளு மாழ்வார்கள் தம்மிலுண்டோ பெரியாழ்வார்க் கொப்பொருவர்) அழகி

தான த்ராவிட சாஸ்த்ரரூப திவ்யப்ரபந்தத்தை ஸர்வேச்வரன் க்ருபையாலே செய்தார்களென்றும் இவ்வாழ்வார்களில் மங்களாசாஸநம் பண்ணியல்லது தரியாத தன்மையை யுடையராயிருக்கிற இவர்க்கு அவர்கள் ஸத்ருசராக வல்லர்களோ? (அவர் செய் கலையில் திருப்பல்லாண்டுக் கொப்பதோர் கலைதானுண்டோ) அத்தலையாலே ஸ்வஸத்தா ஸம்ருத்திகளை அபேக்ஷித்தவர்கள் ப்ரபந்தங்களில் பரஸம்ருத்தியை ஆசாஸிக்கும் திருப்பல்லாண்டுக்கு ஸத்ருசமாயிருப்பதொரு ப்ரபந்த மூண்டோ? கலையாவது த்ராவிட வித்யை. இவர்கள் கலை த்ராவிட ப்ரஹ்மவித்யையிறே. இப்படியான அவற்றில் இதின் ஆதிக்யத்தை (பைதல்நெஞ்சே நீயுணர்ந்துபார்) உன் மௌக்த்யத்தைவிட்டு விவேக பரிகரமான உன் ஸ்வபாவத்தாலே இதின் வாசியை விவேகித்துப்பார். "மயர்வற மதிநல மருள" ப்பெற்றமையும் அத்தாலே ப்ரபந்த நிர்மாணம் பண்ணியருளினமையும் ஸர்வஸம மாகையால் அத்தையிட்டு அவர்களோடும் அவர்கள் ப்ரபந்தங்களோடும் இதர விலக்ஷணரான இவரையும் இவர் ப்ரபந்தத்தையும் ஸமாந புத்திபண்ணியிருக்கிற அறிவிலியான நெஞ்சே! இனியாகிலும் இவற்றின் நெடுவாசியை யறிகைக்குப் பரிகரமான நீ அப்படியே புத்திபண்ணி, விவேகித்துப்பார். அப்போதாயிற்று இவற்றின் நெடுவாசி அறியலாவது.

உக-ம் பாட்டு.

ஆழ்வார் திருமகளா ராண்டாள் மதுரகவி
வாழ்வார் எதிராச ராமிவர்கள்—வாழ்வாக
வந்துதித்த மாதங்கள் நாள்கள்தம்மின் வாசியையும்
இந்தவுலகோர்க் குரைப்போம் யாம்.

பதவுரை.

ஆழ்வார்-பெரியாழ்வாருடைய, திருமகளார்-திருமகளாரான, ஆண்டாள்-சூடிக்கொடுத்த நாய்ச்சியாரும், மதுரகவியாழ்வார்-மதுகவியாழ்வாரும், எதிராசர்-ஸ்ரீபாஷ்யகாரரும், ஆம்-ஆகிய, இவர்கள்-இம்மூவரும், வாழ்வு ஆக-இவ்வுலகத்திலுள்ளவர்களுக்கு வாழ்வு உண்டாம்படியாக, வந்து உதித்த-வந்து அவதரித்தருளின, மாதங்கள்-மாசங்களினுடையவும், நாள்கள் தம்மின்-திருநக்ஷத்ரங்களினுடையவும், வாசியையும்-வைபவத்தையும், இந்த உலகோர்க்கு-இவ்வுலகத்திலுள்ளவர்களுக்கு, யாம்-நாம், உரைப்போம்-சொல்லக்கடவோம்.

வ்யாக்யாநம்.

இருபத்தொன்றும்பாட்டு—ஆக, கீழ் அஞ்சுபாட்டாலும் இவர் திருநக்ஷத்ர வைபவ கதந முகத்தாலே இவர் வைபவங்களை யெல்லாவற்றையும் அருளிச்செய்தாராய் நின்றவர், இப்ப்ரபந்தாதியிலே "அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்" என்று தொடங்கி, "வந்துதித்த மாதங்கள் நாள்கள்தம்மை மண்ணுலகோர் தாமறிய ஈதென்று சொல்லுவோம் யாம்" என்று உத்தேசித்த க்ரமத்தாலே ஆழ்வார்களுடைய அவதரண மாஸாதி க்ரமங்களை அதி ஸ்புடமாக அருளிச்செய்த அநந்தரம் ஆண்டாளுடையவும் மதுரகவியாழ்வார் எதிராசரா மிவர்களுடையவும் அவதரண மாஸாதி க்ரமங்கள் இன்னதென்று சொல்லக்கடவோமென்று ப்ரதிஜ்ஞை பண்ணியருளுகிறார். (ஆழ்வார் திருமகளார்) இத்யாதி. இவர்கள் மூவரும் ஆசார்யாபிமாந நிஷ்டராகையாலும் பிராட்டி திருவடி திருவநந்தாழ்வானுடைய அவதாரமாகையாலும் வருவதொரு சேர்த்தியுமுண்டிறே. "விஷ்ணுசித்தர் தங்கள் தேவரை" என்றும் "தேவுமற்றறியேன்" என்றுமிறே "அடிபணிந்துய்ந்த" வது. "అనన్తః ప్రథమం నామ—அநந்த:ப்ரதமம் நாம" இத்யாதியாலும் "అహీనామీశ్వరశ్శ్రీమా నాసీద్రామానుజోమునిః—அஹீநாமீச்வரச்ரீமா நாஸீத்ராமாநுஜோமுநி:" என்றும் இவர் வைபவஞ் சொல்லிற்றிறே. மற்றை இருவருடைய வைபவமும் குருபரம்பரா ப்ரபாவத்திலே ஸ்பஷ்டம். ஆகையால் இவர்கள் மூவருடைய அவதாரணத்தையும் அருளிச்செய்கிறார். (ஆழ்வார் திருமகளாராண்டாள்) ஸ்ரீபூமிப்பிராட்டியாரான ஆண்டாள் ஆழ்வார் திருமகளாக அவதரித்தருளினபடி. பிராட்டி, ஸ்ரீஜநகராஜன் திருமகளாய் அவதரித்தாற்போலே. இவர்கள்தான் வேந்தர்குலத்திலும் வேயர்குலத்திலும் அயோநிஜராயிறே அவதரித்துப் போந்தது. (மதுரகவியாழ்வார்) "தென்குருகூர் நம்பிக்கன்பனாய மதுரகவி" கள், "படைத்தான்கவி" யைப்போலே. வாய்வந்தபடி சொல்லுகையன்றிக்கே, "குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித்திரி" கிற வாங்மாதுர்ய முண்டிறே யிவர்க்கு. "நம்பியென்றக்கால் அண்ணிக்கும்அமுதூறும் என் நாவுக்கே" என்னக்கடவதிறே. (எதிராசராமிவர்கள்) யதிகளுக்கு நாதரான எம்பெருமானார். இப்படி ஏற்றத்தை யுடையரான இவர்கள் மூவரும் (வாழ்

வாக வந்துதித்த) ஜகத்துக்கெல்லாம் ஸம்பத்தாகத் தோற்றின. ஸர்வேச்வரனுக்கு ஸம்பத்தாயிருப்பாரும் ஸாத்விகஜந ஸம்பத்தாயிருப்பாருமாயிறே இவர்களிருப்பது. "[illegible]—வகுளாபரணாங்க்ரியுக்மம்" என்றும் "மேவினேனவன் பொன்னடி" என்றும் "மாறனடி பணிந்துய்ந்தவன்" என்றும் இவர்கள்தான் ஆழ்வார்க்குச் சரணபூதராயிருப்பார்களிறே. அவ்வளவுமன்றிக்கே, பொன்னடியை மேவி யேந்தினிய பாதுகமாயிருக்கிற இவர்களைப் பாதரேகா ஸமராகவும் பாதரக்ஷா ஸமராகவுமிறே பரிவர் சொல்லிப்போருவது. ஆகையாலே "பொன்னடியே நந்தமக்குப் பொன்" என்றருளிச்செய்தார். பொன்னடியாகவிறே வாழ்வுண்டாவது. இப்படி மூவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பத்தாய் வைஷ்ணவ ஸ்ரீயை வர்த்திப்பிக்கைக்காகவாய்த்து அவதரித்தது. ஏவம்விதரான இவர்களுடைய (மாதங்கள் நாள்கள்தம்மின் வாசியையும்) இப்படி ஜகத்துக்கெல்லாம் வாழ்வாகிற ஸத்தையுண்டாம்படி அவதரித்த இவர்களுடைய மாஸங்களினுடையவும் நக்ஷத்ரங்களினுடையவும் வைலக்ஷண்யத்தை. (இந்த உலகோர்க்குரைப்போம் யாம்) இந்த ஜகத்திலுண்டான மந்தமதிகளும் மதியாரும், ஆண்டாள் தொடக்கமானார் அவதரித்தருளின இந்நாள்களின் ஏற்றத்தை அறியும்படி இதின் வாசியறிந்த நாம் அவர்கள் அபேக்ஷா நிரபேக்ஷமாகச் சொல்லக்கடவோம். சேதநருடைய விதேயதையைக் கண்டு இடைவிடாமல் "அறியாதன அறிவிக்கை" ஆசார்ய க்ருத்யமிறே.

உஉ-ம் பாட்டு.

இன்றோ திருவாடிப்பூர மெமக்காக
அன்றோவிங் காண்டா ளவதரித்தாள்—குன்றாத
வாழ்வாக வைகுந்த வான்போகந் தன்னையிகழ்ந்து
ஆழ்வார் திருமகளாராய்.

பதவுரை.

திரு ஆடிப்பூரம்-அழகிய ஆடிமாதத்துப் பூரநக்ஷத்ரம், இன்றோ-இன்றுதானோ, எமக்காக அன்றோ-எங்களுக்காக அல்லவோ, குன்றாத-குறைவுபடாத, வாழ்வு ஆக-வாழ்வு உண்டாம்படியாக, வைகுந்தம்-ஸ்ரீவைகுண்டத்திலுள்ள, வான்-உயர்ந்த, போகம்தன்னை-அநுபவத்தை, இகழ்ந்து-விட்டு, ஆழ்வார் திருமகளாராய்-பெரியாழ்வாருக்குத் திருமகளாக, இங்கு-இவ்வுலகத்தில், ஆண்டாள்-சூடிக்கொடுத்த நாச்சியார், அவதரித்தாள்-அவதரித்தருளினாள்.

வ்யாக்யாநம்.

இருபத்திரண்டாம்பாட்டு.—கீழ்ச்சொன்ன மூவரிலும் வைத்துக்கொண்டு, அவர்களிலும் அதிகையான ஆண்டாளுடைய வைபவத்தை மூன்றுபாட்டாலே அருளிச்செய்வாராக ஆரம்பித்து, அதில் இப்பாட்டில் ஸ்வரூபவத்தை நெகிழ்ந்து அஸ்மத் உஜ்ஜீவநார்த்தமாக ஆண்டாள் அவதரித்தருளின திருவாடிப்பூரம் இன்றோவென்று அதிசயித்து அதிலே ஈடுபட்டருளுகிறார். (இன்றோ திருவாடிப்பூரம்) திருவாடிப்பூரமென்று ப்ரஸித்தமான திருநக்ஷத்ரமின்றோ? இப்படியிருப்பதொரு நாள் நமக்கு லப்யமாயிற்றது இன்றோ? அலப்யமானது லபித்தால் அதுதான் ஈடுபாட்டுக்கு ஹேதுவாயிறே யிருப்பது. இதுக்கு ஹேது இன்னதென்கிறது மேல். (எமக்காகவன்றோ இங்காண்டா ளவதரித்தாள்) ப்ரஜை கிணற்றிலே விழுந்தால் ஒக்கக் குதித்து எடுக்கும் தாயைப்போலே ஸம்ஸார மக்நரான நம்மை எடுக்கைக்காகவன்றோ? ஸர்வலோக ஜநநியான தான் இவ்விபூதியிலே வந்து அவதரித்தருளிற்று. “கூபத்தில் வீழுங் குழவியுடன் குதித்தவ் வாபத்தைநீக்குமந்த அன்னையைப்போல்” என்றும், “కూపాన్తర్ముగ్ధపుత్రం పతితమనుపతన్మాతృ ஸீ—கூபாந்தர்முக்தபுத்ரம் பதிதமநுபதந் மாத்ருவத்” என்றும் சொல்லுகிறபடியே ஜ்ஞாநாதிகரான இவரும் இவ்வவதாரத்தை ஸ்வார்த்தமாக அநுஸந்தித்தருளுகிறார். இனி இப்படி அவதரிக்கையிலுண்டான அருமையைச் சொல்லுகிறது. (குன்றாத) இத்யாதியால். அல்லாதாருடைய போகங்களைப்போலே க்ஷயிக்கையன்றிக்கே அகுண்ட வைபவத்தையுடைத்தான ஸ்ரீவைகுண்டத்தில் நிரவதிக பகவதநுபவமாகிற மஹாபோகத்தை உபேக்ஷித்து, இங்கும் “போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை” என்னும்படி (ஆழ்வார் திருமகளாரா) யாய்த்து அவதரித்தது. ராஜமஹிஷியானவள் ராஜாவினுடைய பூம்படுக்கையைக் காற்கடை கொண்டு ப்ரஜையினுடைய தொட்டிலைக் கட்டிக்கொண்டு கிடந்து நோக்குமாபோலே யாய்த்து இவளும் நித்யவிபூதியில் நிரதிசயாநந்தத்தை நெகிழ்ந்து, இங்கே அவதரித்துப்போந்தது. இதிறே இவர் திருவுள்ளத்தை இப்படி வருத்தப்பண்ணுகிறது.

உகூ-ம் பாட்டு.

பெரியாழ்வார் பெண்பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த
திருவாடிப் பூரத்தின் சீர்மை—ஒருநாளைக்
குண்டோ மனமே யுணர்ந்துபார் ஆண்டாளுக்
குண்டாகி லொப்பிதற்கு முண்டு.

பதவுரை.

பெரியாழ்வார்-பெரியாழ்வாருடைய, பெண்பிள்ளையாய்-திருக்குமாரத்தியாக, ஆண்டாள்-சூடிக்கொடுத்த நாய்ச்சியார், பிறந்த-அவதரித்தருளின, திரு ஆடிப்பூரத்தின்-அழகிய ஆடிமாதத்தின் பூர நக்ஷத்ரத்தின், சீர்மை-வைபவம், ஒரு நாளைக்கு-வேறொரு தினத்துக்கு, உண்டோ—, மனமே—, உணர்ந்துபார்-விசாரித்துக்கண்டுகொள், ஆண்டாளுக்கு-சூடிக்கொடுத்த நாய்ச்சியாருக்கு, ஒப்பு-ஸமாநம், உண்டாகில்-உண்டாகுமானல், இதற்கும்-இந்த நாளுக்கும், உண்டு-ஸமாநமான ஒரு நாள் உண்டாகும்.

வ்யாக்யாநம்.

இருபத்துமூன்றாம்பாட்டு.—இனி இப்படி இவள் அவதரித்தருளின இந்தத் திருநக்ஷத்ரத்தினுடைய அஸத்ருசத்வத்தால் வந்த வைபவத்தை அருளிச்செய்கிறார், (பெரியாழ்வார் பெண்பிள்ளையாய்) என்று. இவள் பிறக்கைக்கடியான அவருடைய பெருமையிருக்கிறபடி. திருமாலை கட்டுகையே தொழிலாக இருக்கிற இவர், திருத்துழாய் அடியிலே அவதரித்த இவளை யெடுத்துக்கொண்டுபோய், தந்தேவிகள் கையிலே காட்டிக்கொடுக்க, வந்தயை யாகையாலே அவளும்பிறர் பெண்டாயிருக்கிற இப்பெண்பிள்ளையை அதி ப்ரீதியுடனே எடுத்துக்கொள்ள, அப்போது "வனமுலைகள் சோர்ந்து பாய" என்னும்படியிறே ஸ்தந்யம் ப்ரவஹித்தது. ஈன்ற தாய்மார்க்கிறே ஸ்வஸூதாதிகள் ஸந்நிதாநத்தில் இரக்கம் பிறந்து இப்படியாவது. ஆகையால் பெண்பிள்ளையாய் அவதரித்த மெய்ப்பாடிருக்கிறபடி. (ஆண்டாள் பிறந்த) பிறந்தவளுடைய பெருமையிதுவாவதே. உலகுடைய நாய்ச்சியாரிறே உலகத்திலே வந்தவதரித்தது. (பிறந்த) "நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றிறே இவள் பேச்சிருப்பது. பெற்றவர்களும், பிறந்தவர்களும் "மேபிதா, மேஸுதா—மேபிதா, மேஸுதா" என்னுமாபோலே, "ஒருமகள் தன்னை யுடையேன்" "பட்டர்பிரான் கோதை" என்றிறே இருவரும் பணிப்பது. (பிறந்த திருவாடிப் பூரத்தின் சீர்மை)

இவள் பிறக்கைக்கு அடியிறே சீர்மையுண்டாய்த்து இதுக்கு. இப்படியான இதின் சீர்மை கீழ்ச்சொன்ன நாள்களில் ஒருநாளைக்குத் தானுண்டோ? ஏனிப்படி யாவதென்? இல்லையோவென்னில், (மனமே யுணர்ந்துபார்) இவற்றின் வாசியறிகைக்குப் பரிகரமான மநஸ்ஸே! மேலெழவன்றிக்கே உள்ளூற உணர்ந்துணர்ந்து பார். (ஆண்டாளுக் குண்டாகி லொப்பிதற்கு முண்டு) ஸர்வலோக நிர்வாஹிகையான ஆண்டாளுக்கு ஸாம்யமுண்டாகில், இதற்கும் ஸாம்யமுண்டென்கை. "அவர்களிலுங் காட்டில் விஞ்சின க்ஷமா தயாதி குணங்களையும் நாவால் தொகைக்கவொண்ணுத அழகையும் உடையளாய்" என்றிறே அருளிச்செய்தது. ஆகையால் அவளுக்கு ஒப்பில்லாதாப்போலே இதற்கும் ஒப்பில்லையென்று கருத்து.

உச-ம் பாட்டு.

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்குந் தன்மையளாய்—பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

பதவுரை.

அஞ்சுகுடிக்கு-கொடு உலகத்துக்கு அஞ்சி மங்களாசாஸநம் பண்ணும் ஆழ்வார்கள் ஸந்ததிக்கு, ஒரு-ஒப்பற்ற, சந்ததியாய்-திருக்குமாரத்தியாய், ஆழ்வார்கள் தம்-ஆழ்வார்களுடைய, செயலை-கார்யமான ஜ்ஞாநபக்தி வைராக்யாதிகளில், விஞ்சி-விசேஷித்து, நிற்கும்-நிலைபெற்றிருக்கும், தன்மையளாய்-ஸ்வபாவமுடையவளாய், பிஞ்சு ஆய்-இளமையாயிருந்தே, பழுத்தாளை-பரிபக்குவமானவளை, ஆண்டாளை-சூடிக்கொடுத்தாளை, பத்தியுடன்-பக்தியுடனே, நாளும்-எப்போதும், மனமே-மநஸ்ஸே, மகிழ்ந்து-சந்தோஷமடைந்து, வழுத்தாய்-துதிப்பாயாக.

வ்யாக்யாநம்.

இருபத்துநாலாம்பாட்டு.—ஆழ்வார்களைக் காட்டிலும் அதிசயித வைபவத்தை யுடையளான ஆண்டாளை ஹர்ஷத்துடனே ஸ்துதியென்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார், (அஞ்சு குடிக்கொரு சந்ததியாய்) என்று. அதாவது: "సన్తానబీజం కురుపాణ్డవానాం—ஸந்தாநபீஜம் குருபாண்டவாநாம்" என்று பாண்டவர்கள் ஐவர்க்கும் பரிக்ஷித்து ஒருவனும் ஸந்தாநபீஜ

மானுற்போலே இவளும் ப்ரபந்ந குலரான ஆழ்வார்கள் பதின்மர்க்கும் திருமகளாம்படியான ஒருமகளாயிருக்கை. இவள்தான் ஜ்ஞாந ஸந்தாந ப்ரஸூதையாகையாலே "குலமகள் கோதை" என்றிறே கூறிவைத்தார்கள். அன்றிக்கே, அதீத காலங்களில் அபதாநங்களுக்கு மங்களாசாஸநம் பண்ணும்படி அஸ்தாநே பய சங்கிகளான பட்டநாத குலத்துக்கு அத்விதீயமான ஸந்ததியாயிருக்கை. "భగవత్యజస్రమస్థాన రక్షణ భయాకుల వంశజాతా—பகவத் யஜஸ்ரமஸ்தாந ரக்ஷண பயாகுல வம்சஜாதா" என்றிறே ஆசார்ய பௌத்ரருடைய திவ்ய ஸூக்தியும். இவளும் "அன்றிவ்வுலகமளந்தா யடிபோற்றி" என்று தொடங்கி, அதீத காலங்களில் அபதாநங்களுக்கு மங்களாசாஸநம் பண்ணினாளிறே. இவளுக்கு மங்களாசாஸநம் பண்ணுகைக்கடி குடிபிறப்பிறே. இக்குடிக்கு அஞ்சுகுடியென்றுய்த்து நிருபகம். (ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சிநிற்குந் தன்மையளாய்) அதாவது: மங்களாசாஸநத்தில் வந்தால் தமப்பனாரோடொத்து, ஜ்ஞாந பக்த்யாதிகளில் வந்தால் ஆழ்வார்கள் பதின்மரிலும் விஞ்சியாய்த்திறே இவளிருப்பது. இவள்தனக்கு பதின்மருடைய பக்தியும் ஸ்திரீதநமாய் வருகையாலும், இன்னமும் ஆழ்வார்களைப் போலே பக்த்யவஸ்தா கார்யமான ஸ்த்ரீத்வத்தை பாவிக்கவேண்டாதே தானான தன்மையையுடையளாகையாலும் அவர்களில் அதிசயிதமான பக்த்யாதி ஸ்வபாவங்களை யுடையளாயாய்த்து இவளிருப்பது. அதாவது: ஆழ்வார்களைப்போலே ப்ராப்ய த்வராதிசயத்தாலே நோன்பு நோற்கை, மடலூருகை தொடக்கமான அநந்யோபாயத்வ பஞ்ஜகமான வ்யாபாராதிகளா லன்றிக்கே காமனைக் குறித்து, "பேசுவதொன்றுண்டிங் கெம்பெருமான்" என்றும், "உன்னையு மும்பியையுந் தொழுதேன்" என்றும் "தொழுது முப்போது முன்னடி வணங்கி" என்றும் அவனைப் பரதேவதையாக எண்ணி, அவன் காலிலே விழுந்த இந்த அநந்ய தைவத்ய பஞ்ஜகமான இவ்வதிப்ரவ்ருத்தி அவர்களிற் காட்டில் விஞ்சியிருக்கிற நிலைநின்ற ஸ்வபாவமென்கை. (பிஞ்சாய்ப் பழுத்தாளை) அதாவது: லோகத்தில் ஒன்று பலிக்கும்போது "ఫలస్య కారణం పుష్పం—பலஸ்ய காரணம் புஷ்பம்" என்னும்படி பலகாரணமான புஷ்பமாய், பின்பு பிஞ்சாய், அநந்தரம் காயாய், இப்படி சிலநாள் சென்றாலாய்த்து

பக்வபலமாவது. அங்ஙனன்றிக்கே அபக்வமான பிஞ்சு, தானே பக்வபலமாமாபோலே யாய்த்து இவளுடைய பரிமாற்றமும். அதாவது: பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாய் க்ரமத்திலே பரிணதையாம்படியான "ஞானக்கனிந்த நலம்" ஆன பரம பக்தியானது அறிவு நடையாடாத பர்வத்திலேயாய்த்து பரிபக்வையானது. அதாவது: ஸஹஜபக்தியானது அப்போதாய்த்து ஸ்புரித்ததென்கை. அறிவுக்கு அளவில்லாத அஞ்சு ப்ராயத்திலே யாய்த்து, திருப்பாவை இவளுக்கு முகஞ்செய்தது. அஞ்சு ப்ராயத்திலே பெண்பிள்ளை ஜல்பித்ததொரு பொருளுண்டோ வென்ன, நம்மாழ்வார், "முலையோ முழுமுற்றும் போந்தில" இத்யாதி. அன்றிக்கே ஆழ்வார்களுக்குத் ததீயவிஷயத்திலுண்டான சரம ஜ்ஞாநம் இவளுக்கு ப்ரதமத்திலே யுண்டாகை. அதாவது: "நெடுமாற்கடிமை" யிலே அவர்களுடைய போக்யதையை "நனிமாக் கலவி யின்பமே நாளும் வாய்க்க நங்கட்கே" என்றும், "தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரே வாய்க்க தமியேற்கே" என்றும் பாகவத ஸமாஜ தர்சநம் இனிதாம்படியையும், ஆழ்வாரும் அப்படியே "கண்சோர வெங்குருதி" யிலும் "தண்சேறை யெம்பெருமானுக்கடியார் தம்மைக்கண்டு எனக்கிதுகாணீ ரென்னெஞ்சும் கண்ணிணையுங் களிக்குமாறே" என்றும் "தண்சேறை யெம்பெருமான் றாளை நாளும் சிந்திப்பார்க்கென்னுள்ளந் தேனூறி எப்பொழுதுந் தித்திக்குமே" என்றும் திருமங்கையாழ்வார் அருளிச்செய்தாரிறே. அத்தனை நெடுந்தூரம் போகாமல் "போதுவீர் போதுமினோ" என்றும், "எல்லாரும் போந்தாரோ" என்றும் இது இவளுக்கு அடியிலே உண்டாய்த்தென்கை. (ஆண்டாளை) இப்படி பரிபக்வ ஸ்வபாவையுமாய், கீழ் உக்த குணங்களுக்கெல்லாம் ஒக்கும்படியான ஏற்றத்தை யுடையவளை. (பத்தியுடன் நாளும் வழுத்தாய் மனமே மகிழ்ந்து) அவள் பகவத் விஷயத்தில் கண்ணழிவற்ற பக்த்யாதிகளை உடையளா யிருக்குமாபோலே தத் விஷயத்தில் நீயும் பக்தியுடனே "𑌗𑍋𑌦𑌾𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑌇𑌦𑌮𑌿𑌦𑌂 𑌭𑍂𑌯𑌯𑍇𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌭𑍂𑌯𑌃—கோதாதஸ்யைநம இதமிதம் பூயயேவாஸ்துபூய:" என்று நித்யமாக ஸ்துதி ரூபமான மங்களாசாஸநத்தை "மங்கையும் பல்லாண்டு" என்று ப்ரீதியுடனே பண்ணிப்போரு. "உற்றே னுகந்து பணிசெய்து" என்னக்கடவதிறே.

உடு-ம் பாட்டு.

ஏரார் மதுரகவி இவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரைநாள்—பாருலகில்
மற்றுள்ள ஆழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்
உற்றதெமக் கென்றுநெஞ்சே யோர்.

பதவுரை.

ஏர்ஆர்-அழகுபொருந்திய, மதுரகவி-மதுரகவியாழ்வார், இஉலகில்-இந்த வுலகத்தில், வந்து அவதரித்த-வந்து அவதரித்தருளின, சீர்ஆரும்-வைபவம்பொருந்திய, சித்திரையில்-சித்திரைமாதத்தில், சித்திரைநாள்-சித்திரை நக்ஷத்ரமானது, பார் உலகில்-பூமியில், மற்றுள்ள-மற்றவர்களாயுள்ள, ஆழ்வார்கள்-பதின்மரான ஆழ்வார்கள், வந்து உதித்த-வந்து அவதரித்தருளின, நாள்களிலும்-திரு நக்ஷத்ரங்களைக்காட்டிலும், எமக்கு-எங்களுக்கு, உற்றது என்று-ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததென்று, நெஞ்சே-மனமே, ஓர்-நீ அறிந்துகொள்.

வ்யாக்யானம்.

இருபத்தஞ்சாம்பாட்டு—கீழ்ச்சொன்ன மூவரிலும் வைத்துக்கொண்டு, மத்யஸ்தரான மதுரகவியாழ்வார் அவதரித்த மது மாஸத்தில் சித்ரா நக்ஷத்ரமானது அல்லாத திருநக்ஷத்ரங்களிற் காட்டில், ஸ்வரூப ப்ராப்தமாயிருக்கு மென்றத்தைத் தமக்கு ஆப்தமான திருவுள்ளத்தைக் குறித்து ஆராயும்படி அருளிச்செய்கிறார். (ஏரார் மதுரகவி) அவராகிறார், "அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர்" என்னும்படியான ஆசார்யாபிமாந நிஷ்டையுடையரா யிருக்குமவர், அவர்க்கு ஏர்மையாவது: "ஆசார்யவான்—ஆசார்யவாந்" என்னும்படி ஜகத்துக்கெல்லாம் ஆபரண ஸ்தாநீயரா யிருக்கை. "அன்பாடிக்கன்ப"ரிறே. "திலதமெனத் திரிவார்" இவர்தாம், ஜகதாபரணரான நம்பிக்கு அன்பரிறே. ஏரார்ந்திருக்கையாவது: எல்லாரும் தம்முடைய நிஷ்டையை யுடையராம்படி பண்ணவல்ல ஆசார்ய பரதந்த்ர பூர்த்தியையுடையராயிருக்கை. (இவ்வுலகில் வந்துதித்த) ஏவம்பூதரானவர் இந்த ஜகத்திலே ஆதித்யோதயத்துக்கு அருணோதயம்போலே வகுளபூஷண பாஸ்கரோதயத்துக்கு முன்னே வந்து அவதரித்த. (சீராரும் சித்திரையில் சித்திரைநாள்) ஏரார்ந்திருக்கும் அவர் அவதரிக்கையாலே இதுவும் சீரார்ந்தது. அவர்தாம் ஸ்ரீமான்களான அதிகாரிகளா

கையாலே "𑌚𑍈𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑌯𑌂 𑌮𑌾𑌸𑌃—சைத்ர ஸ்ரீமா நயம்மாஸ:" என்று மாஸமும் நேர்பட்டது. (சீராரும்) என்கிற இது சித்திரைகள் இரண்டுக்கும் விசேஷணமாகக் கொள்வது. "𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿—சித்தாநக்ஷத்ரம் பவதி" என்று ச்ருதி ப்ரஸித்தமான திவஸமிறே. இதுதான் திருவூறல் கொண்டருளும்படி பெரிய திருநாளுமாயிருக்கும். இவர்தாம் "பெரியவர் சீரை" என்னும்படியான மஹாத்மாவிறே. இப்படி வைலக்ஷண்யத்தை யுடைத்தான இத்திருநக்ஷத்ரத்தை. (பாருலகில் மற்றுள்ள வாழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்) இந்த பூலோகத்திலே "உண்டபோதொரு வார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையுஞ் சொல்லுவார் பத்துப்பேர்" என்னும்படியான ஆழ்வார்கள் பதின்மரும் "இந்த வுலகி லிருள்நீங்க வந்துதித்த மாதங்கள் நாள்கள்" ஆன அந்தத் திருநக்ஷத்ரங்களிலும், (உற்றதெமக்கென்று நெஞ்சே யோர்) "மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்றிருக்கிற ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததென்று மநஸ்ஸே புத்திபண்ணு. "உற்றது முன்னடியார்க் கடிமை" என்னக்கடவதிறே.

உசு-ம் பாட்டு.

வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்
சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ்
ஆரியர்கள் தாங்கள் அருளிச்செயல் நடுவே
சேர்வித்தார் தாற்பரியந் தேர்ந்து.

பதவுரை.

வாய்த்த-ஸ்வரூபாநுரூபமான, திருமந்திரத்தின்-திருமந்திரத்தில், மத்திமம் ஆம்பதம்போல்-மத்தியிலிருக்கும் நமப்பதம்போல, சீர்த்த-வைபவத்தையுடைய, மதுரகவி-மதுரகவியாழ்வார், செய்-அருளிச்செய்த, கலையை-ப்ரபந்தமான கண்ணிநுண் சிறுத்தாம்பை, ஆர்த்த-நிறைந்த, புகழ்-வைபவத்தையுடைய, ஆரியர்கள் தாங்கள்-பூர்வாசார்யர்கள், அருளிச்செயல் நடுவே-ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களுக்கு மத்தியிலே, தாற்பரியம்-அதின் அபிப்பிராயத்தை, தேர்ந்து-அறிந்துகொண்டு, சேர்வித்தார்-சேரும்படி செய்தார்கள்.

வ்யாக்யாநம்.

இருபத்தாறும்பாட்டு.—இனி அருளிச்செயல்களுக்கு அர்த்த நிரூபணம் பண்ணும் ஆசார்யர்கள் இவருடைய திவ்ய ப்ரபந்

த்தின் அர்த்த கௌரவத்தை ஆராய்ந்து அருளிச்செயலினிடை யிலே இத்தை ஸ்தாபித்தபடியை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செ ய்கிறார், (வாய்த்த திருமந்திரத்தில் மத்திமமாம் பதம்போல்) என்று. இது வாய்க்கையாவது: சப்த பூர்த்தியையும் அர்த்தபூர்த்தி யையும் உடைத்தாகையாலே ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருக் கை. "[illegible]—ஸர்வ மஷ்டாக்ஷராந்தஸ்தம்" என்றிறே பெரியதிருமந்த்ரத்தின் பெருமை. "[illegible]— மந்த்ராரம் த்ராயத இதிமந்த்ர:" என்கிறபடியே தன்னை அநுஸந் திப்பாரை ஸம்ஸாரத்தில் நின்றும் உத்தரிப்பிக்குமதாயிருக்கை. "ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரம்" என்றிறே அரு ளிச்செய்தருளிற்று. "[illegible]—ஸத்யஸ்ஸம்ஸாரநாசநம்" என்னக்கடவதிறே. (மத்திமமாம் பதம்போல்) அதில் மத்யம பத முண்டு நமஸ்ஸு, அந்தப் பதம்போலே. அதுதான் ஸ்வரூபோ பாய புருஷார்த்த விரோதி நிவர்த்தகமுமாய், ஸ்வரூபோபாய புரு ஷார்த்த ப்ரதிபாதகமுமாய் "[illegible]— ஸித்தே ததீயசேஷத்வே ஸர்வார்த்தாஸ் ஸம்பவந்திஹி" என்னும் படியான ததீய பாரதந்த்ர்யத்தையும் உடைத்தாயிருக்கும். அந்த ப்பதத்தில் அர்த்தமிறே ஸ்வரூபத்துக்கு மிகவும் அநுரூபமாயிருப் பது. அந்தப் பதம்போலேயாய்த்து இதுவும். அப்படியே இவர்தா மும் "[illegible]—ததியாநா மக்ரேஸர:" என்று ததியா நா மக்ரகண்யரான ஆழ்வாருடைய விஷயத்திலே சேஷித்வ சர ண்யத்வ ப்ராப்யத்வாதிகளையிறே ஸ்வப்ரபந்தமான கண்ணிநுண் சிறுத்தாம்பிலே அருளிச்செய்தது. (சீர்த்த மதுரகவி செய்கலை யை) ச்லாக்யமாய் "மதுரகவி சொன்னசொல்" என்னும்படி இவ ராலே சொல்லப்பட்டதான கண்ணிநுண் சிறுத்தாம்பாகிற ப்ர பந்தத்தை, (சேர்வித்தார்) என்று மேலே க்ரியை. கலையைத் தண்டமிழ் நூலோடே சேர்வித்தார்கள். ஒண்டமிழ்நூலடியாக வுண்டான கலையிறே. (சீர்த்த மதுரகவி) என்று தேவுமற்றறியாத கௌரவத்தை யுடையவரென்னவுமாம். (சீர்த்த செய்கலையை) ப்ரதம பர்வ விஷயமான ப்ரபந்தங்களைக் காட்டிலும், சரமபர்வ விஷயமான ப்ரபந்தம் ஆத்யந்தம் சீரியதாயிறே இருப்பது. "மிக் கவேதியர் வேதத்தினுட்பொரு" ளைப் பொதிந்துகொண்டிருக்கிற பெருமையுண்டே இதுக்கு. "அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்

தம் அறுதியிடக்கடவோம்" என்னும்படியிறே. இதின் ஏற்றமிருப்பது. அன்றிக்கே, ஆழ்வார் திருவடிகளிலே பெரியமுதலியார் இத்தைப் பன்னீராயிரமுரு அநுஸந்திக்க, அதடியாக ஆழ்வார் திருவுள்ளம் ப்ரஸந்நமாய் அத்தாலே அருளிச்செயல்களெல்லாம் அப்போது ப்ரகாசகமாய்த்திறே. அத்தைப்பற்றி வந்த கௌரவத்தையாகவுமாம். இப்படி ஸாரார்த்த ப்ரதிபாதகதயா வந்த கௌரவத்தை யுடைத்தாய், மதுரகவிகளாலே நிர்மிதமான கண்ணிநுண் சிறுத்தாம்பாகிற கலையை, செய்ய கலையான அருளிச்செயலி னிடையிலே சேர்வித்தார்கள். (ஆர்ந்த புகழாரியர்கள் தாங்கள்) மதுரகவிகளினுடைய அடிப்பாட்டிலே நடப்பாராய் அருளிச்செயல்களுக்கு அர்த்த நிரூபணம் பண்ணுகையால் வந்த ஸம்ருத்தமான யசஸ்ஸை யுடையராய் அத்தாலே பெருமதிப்பராயிருக்கிற ஆசார்யர்கள் தாங்கள் (ஆர்ந்தபுகழ்) என்றது, ஆர்ந்த புகழ் என்றபடி, "ஆர்ந்தபுகழச்சுதனை" என்னுமாபோலே. இதுதான் "பயிலுஞ்சுடரொளி" "நெடுமாற்கடிமை" தொடக்கமானவற்றின் அர்த்தத்தை ப்ரதிபாதிக்கையாலே இதின் அர்த்த கௌரவத்தை விசாரித்து, நன்ருயிருப்பதொரு ஹாரத்தைச் சமைத்து, அது ஒளிபெறும்படி ச்லாக்யமாயிருப்பதொரு நாயகக் கல்லை அதின் நடுவே பதித்தாற்போலே அருளிச்செயல்கள் தான் நிறம்பெறும்படி அவற்றின் நடுவே இத்தைச் சேர்வித்தார்கள். சேர்த்த சேர்வையின் சாதுர்யத்தாலேயிறே முத்துமாலை தொடக்கமான ஆபரணங்கள் நிறம் பெறுவது. அதுபோலேயாய்த்து இது. அருளிச்செயல்களுக்கு அதிசயித்திருக்கும்படி இதுதான் ஆந்தராளிக வைஷ்ணவ பதமான நமஸ்ஸோபாதி நடுவில் நாயகமாய் எல்லாவற்றையும் ப்ரகாசித்துக்கொண்டாய்த்திருப்பது. இவர் அவதரித்த சித்திரையில் சித்திரை யல்லாத மாஸ நக்ஷத்ரங்களுக்கு மத்யேயாய் அல்லாதவற்றுக்கும் அதிசயித்திருக்குமாபோலே, இவர் ப்ரபந்தம் அருளிச்செயல்க ளிடையிலேயாய் அவற்றுக்கும் அதிசயத்தை ஆபாதிக்குமதாயிருக்கும். இத்தை மத்யம பதமாக யோஜிக்கும் க்ரமத்தால் தான் இத்தையொழியக் கீழ்மேலுண்டான ப்ரபந்தங்கள் ப்ரணவத்தினுடையவும் நாராயண பதத்தினுடையவும் ஸ்தாநே யோஜிக்கவும் குறையில்லை. அது எங்ஙனேயென்னில், "வேதத்துக்கு ஓம் என்னு

மதுபோலே" யான திருப்பல்லாண்டு தொடங்கி கண்ணிநுண் சிறுத்தாம்பு அடியாக வுண்டான ப்ரபந்தங்கள் ப்ரணவார்த்தமாயும், கண்ணிநுண்சிறுத்தாம்பு 'நமஸ்ஸினுடைய அர்த்தமாயும், மேலே "நாராயணுவென்னு நாமம்" என்று தொடங்கி, உபாதிக்கிற திருமொழி தொடங்கி, "நாராயணு ஓ மணிமண்ணு நாகணையாய் வாராய் என் ஆரிடரை நீக்காய்" என்கிற திருமடல்களீருக வுண்டான ப்ரபந்தங்கள் நாராயண சப்தார்த்தமாயும் கைங்கர்யத்வ ஸூசகமான சதுர்த்யர்த்தமாயும் அநுஸந்திக்கலாமாயிறேயிருப்பது. ஆசார்ய பரதந்த்ரரான அநந்தாழ்வானுக்கு சித்திரையில் சித்திரையிறே திருநக்ஷத்ரம். ஆகையால் அவர்க்கு மதுரகவி தாஸனென்று தாஸ்யநாமமும்.

உஎ-ம் பாட்டு.

இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்த திருவாதிரைநாள்
என்றையினு மின்றிதனுக் கேற்றமென்றுன்—என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர் தம்பிறப்பால்
நாற்றிசையுங் கொண்டாடு நாள்.

பதவுரை.

இன்று-இன்றையதினம், உலகீர்-உலகத்திலுள்ளவர்களே, சித்திரையில்-சித்திரைமாதத்தில், ஏய்ந்த-பொருந்திய, திருவாதிரைநாள்-திருவாதிரைநக்ஷத்ரமாகும். என்றையினும்-எந்தத்தினத்திலும், இன்று இதனுக்கு-இன்றைத்தினத்துக்கு, ஏற்றம்-வைபவம், என்தான்-என்னவோ, என்றவர்க்கு-என்றுகேட்டவர்களுக்கு, சாற்றுகின்றேன்-சொல்லுகின்றேன், கேள்மின்-கேளுங்கள், அதாவது, எதிராசர்தம்-எம்பெருமானுருடைய, பிறப்பால்-திருவவதாரத்தாலே, நால்திசையும்-நான்குதிக்கிலுள்ளவர்களும், கொண்டாடும்-கொண்டாடக்கூடிய, நாள்-நாளாகும்.

வ்யாக்யானம்.

இருபத்தேழாம்பாட்டு.—இனி ஆழ்வார்களோடு விகல்பிக்கலாம்படியான அதிசயத்தை யுடையராய் அவர்களுக்குச் சேஷபூதருமாய் மற்றுமுண்டானவர்களுக்கெல்லாம் நாதரான எம்பெருமானுர் திருநக்ஷத்ர வைபவத்தை மூன்று பாட்டாலே அருளிச்செய்வாராக உபக்ரமித்து, அதில் இப்பாட்டில் அவர் அவதரித்தருளின சித்திரை மாஸத்தில் திருவாதிரையின் ஏற்றத்தை ஸர்வரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி ப்ரச்னோத்தர ரூபேண ப்ரகாசிப்

பித்தருளுகிறார். (இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்த திருவாதிரை நாள்) இவரும் எம்பெருமானாரைப்போலே இருந்ததே குடியாக எல்லாரும் உஜ்ஜீவிக்கும்படி இதின் ஏற்றத்தை (இன்றுலகீர்) என்று ஸம்போதித்து அருளிச்செய்கிறார். "ஸ்ரீமாந் ஸமாஸ்ஸ:— சைத்ரஸ்ரீமா நயம்மாஸ:" என்னுமாபோலே. (இன்று) என்று இதின் ஏற்றம் தமக்கு ஆதரணீயமா யிருக்கிறபடி. (சித்திரையி லேய்ந்த திருவாதிரைநாள்) சித்திரைமாஸத்தோடே கூடின திரு வாதிரை நக்ஷத்ரமானது, எம்பெருமானார் அவதரித்தருளின அற் றைக்குப் புஷ்ப வ்ருஷ்டி செய்யவும் மேல்வரக்கடவ பலத்தை ஸூசிப்பிக்கைக்கும் ப்ராப்தமான காலம். (ஏய்ந்த திருவா திரை) நம் ஸ்வரூபத்துக்குச் சேர்ந்த திருவாதிரை. இப்படி இரு ப்பதொரு மாஸமும் நக்ஷத்ரமும் நேர்படுவதே. ஸ்ரீமானான பெரு மாள் அவதரித்த ஸ்ரீமானான மாஸமும், அவர் அவதரித்த நக்ஷத் ரத்தோடு அடுத்து அணித்தான நக்ஷத்ரமுமாய்த்து. இவரும், "சீமானிளையாழ்வா" ரிறே. ராம ராமாநுஜர்களிருவர்க்கும் முன் னும் பின்னுமான திருவாதிரையும் புநர்பூசமுமாகப் பெற் றது. இப்படி எல்லாத் திவஸத்திலும் இதுக்கு ஏற்றம் ஏதுதான் என்று ப்ரச்நம் பண்ணினவர்களுக்கு ப்ரதிவசநமாக லௌகிகரா யிருந்துவைத்து இவ்வளவு ஆபிமுக்ய முண்டாவதே! என்றது வே ஹேதுவாக இதின் ஏற்றத்தை (சாற்றுகின்றேன்) என்கிறார். (சாற்றுகின்றேன்) நீங்கள் இத்தை ஆதரிப்பது, ஆதரியாதொழி வது ஆயினும், நான் என்கார்யம் செய்து போராநிற்பன். ஸர்வே ச்வரனுடைய விஜயத்துக்கு ஸ்ரீஜாம்பவன் மஹாராஜர் பறையறை ந்து திரிந்தாற்போலே "வாமநன் சீல" னை இவருடைய அவ தார நக்ஷத்ர வைபவத்தை ஸர்வலோக ப்ரஸித்தமாம்படி பறைய றைந்து சாற்றுகின்றேன். (கேள்மின்) இந்த தூளிதாநத்தையும் தப்பாமல் கேளுங்கோள். உபஸத்தி பண்ணி சிஷ்யர்களுமா யிரு ந்து ரஹஸ்யமாகக் கேட்கவேண்டா. இருந்த இடங்களிலே செவி தாழ்க்க வேண்டுமித்தனை. ஆகில் நீர் சொல்லுகிற ஜந்ம ரஹஸ் யத்தை வெளியிடலாகாதோ வென்ன, (எதிராசர் தம்பிறப்பால்) என்கிறார். யதிகளுக்கு நாதரான எம்பெருமானாருடைய திருவ வதாரத்தாலே சதுர் திக்குகளிலுண்டான ஸர்வ சேதநராலும் கொண்டாடப்படும் திருநக்ஷத்ரமாயிருக்கும். இத்தைப் பொது

விலே திருநக்ஷத்ர மென்றாய்த்து, பூர்வர்கள் அருளிச்செய்து போருவது. (எதிராசர் தம்பிறப்பு) யதுகுல நாதருடைய அவதாரத்தைக் காட்டிலும் அதிசயித்த வைபவத்தை யுடைத்தாயாய்த்து யதிகுல துர்யரான இவருடைய அவதார மிருக்கும்படி. அவ்வவதாரத்துக்கு ப்ரயோஜநம் தேரிலே யிருந்து ஒருவனுக்குத் தெளிவு பிறக்கும்படி எல்லாம் எடுத்துரைக்க வேண்டிற்று. இவ்வவதாரத்துக்கு ப்ரயோஜநம், பாரிலே யிருந்த எல்லாரையும் பதஸ்தராய் உஜ்ஜீவிக்கும்படி முடிந்ததொரு வார்த்தையாய்த்து உபதேசித்தது. இனி இதின் ஏற்றம் அறிந்து பரிபாலிப்பார் இன்றார் என்னுமத்தை ஸர்வ திக்குக்களிலும் தர்சிப்பிக்கிறார். (நாற்றிசையுங் கொண்டாடும் நாள்) என்று. இவர்தாம் "திசையனைத்தும் ஏறுங்குணனை" யென்றும், "திக்குற்ற கீர்த்தி யிராமாநுசனை" யென்றும் சொல்லும்படியான வைபவத்தை யுடையராகையாலே இவர் திருநக்ஷத்ரமும் ஸர்வதோ திக்கமாகப் பரிபாலிக்கப் படுமதான திருநாளாயிருக்கும். இவர் ஸம்பந்தம் உடையாரிறே திக்குப்பட்டிருக்கிறவர்கள். ஆகையால் எம்பெருமானார் ஸம்பந்தமுடையார் இல்லாததொரு தேசமில்லையிறே. ஆகையால் இது ஸர்வோபலால்யமாய் இருக்குமென்னுமத்தை யறிந்து நீங்களும் இத்தை ஆதரித்துப் போருங்கோளென்று கருத்து.

### உ௫-ம் பாட்டு.

ஆழ்வார்கள் தாங்க ளவதரித்த நாள்களிலும்
வாழ்வான நாள்நமக்கு மண்ணுலகீர்—ஏழ்பாரும்
உய்ய எதிராசர் உதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவாதிரை.

### பதவுரை.

ஆழ்வார்கள் தாங்கள்-ஆழ்வார்கள் எல்லாம், அவதரித்த-திருவவதாரஞ்செய்தருளின, நாள்களிலும்-திருநக்ஷத்ரங்களிலும், நமக்கு—, வாழ்வு ஆன-வாழ்வைத்தருவதான, நாள்-திருநக்ஷத்ரமானது, மண்ணுலகீர்-பூமியிலுள்ளவர்களே! ஏழ்பாரும்-ஏழுலகத்திலுள்ளவர்களும், உய்ய-உஜ்ஜீவிக்கும்படியாக, எதிராசர்-எம்பெருமானார், உதித்தருளும்-அவதரித்தருளின, சித்திரையில்-சித்திரைமாதத்தில், செய்ய-செம்மையான, திருவாதிரை-திருவாதிரை நக்ஷத்ரமாகும்.

வ்யாக்யாநம்.

இருபத்தெட்டாம்பாட்டு.—ஸகல ஜகத் உஜ்ஜீவநஹேதுவாக எம்பெருமானார் அவதரித்தருளின திருநக்ஷத்ரமானது, ஆழ்வார்கள் அவதரித்தருளின திருநக்ஷத்ர மாஸங்களிற் காட்டிலும் தமக்கு ஸம்பத் ரூபமாய் இருக்கும்படியை ஸர்வ ஜநங்களும் அறியும்படி அருளிச்செய்கிறார். (ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும்) அவர்கள்தான் ஸர்வேச்வரனாலே "மயர்வற மதிநலமருள" ப்பெற்ற தரத்தை உடையவர்களாய் அதடியாக வுண்டான தங்கள் திவ்ய ஸூக்திகளாலே ஊரும் நாடும் உலகமும் திருந்தும்படி பண்ணவல்லராய் அதஏவ ஜகதுபகாரகராயாய்த்து அவர்கள் அவதரித்தது. இப்படி அவதரித்த அவர்கள் திருநக்ஷத்ரங்களைக் காட்டிலும், (வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்) அதாவது "மங்கையராளி பராங்குசர் முன்னவர் வாழ்வு முளைத்திடு நாள்" என்னும்படி பகவத் ஸம்ருத்திகளே பேறும்படி யிருக்கிற அந்த ஆழ்வார்கள் வாழ்வுக்கும் அடியாய் இருக்கையாலே அவற்றைக் காட்டிலும் நம்முடைய வாழ்வாகிற ஸ்வரூப ஸத்தாக்களையும் உண்டாக்குமதான நாளாயு மிருக்கும். அன்றிக்கே, (வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்) உங்களைப்போலே ஐச்வர்யாதிகளை விரும்பி, * இதுக்குச் சலராய்ப் போகையன்றிக்கே அவற்றையெல்லாம் த்ருணீகரித்து ராமாநுஜ பதாம்போஜ ஸமாச்ரயண சாலிகளாய் "தந்தை நல்தாய் தாரம் தநயர் பெருஞ்செல்வம் என்றனக்கு நீயே எதிராசா" என்று அவரையே ஸர்வ ஸம்பத்தாக எண்ணியிருக்கிற நமக்கு அவர் அவதரித்தருளின திருநக்ஷத்ரமும் அப்படியே ஸம்பத்தாயே யிருக்கும். அதாவது: வாழ்வுக்கு அடியன்றிக்கே வாழ்வு தானாயிருக்குமென்றபடி. (மண்ணுலகீர்) "𑌆𑌵𑌿𑌰𑌭𑍂𑌦𑍍𑌭𑍂𑌮𑍌—ஆவிரபூத் பூமௌ" என்றும் "மண்ணின் தலத்துதித்து" என்றும் சொல்லுகிறபடியே அவர் அவதரித்தருளின பூலோகத்திலே பிறந்து திரிகைக்கு அடியான பாக்யத்தை யுடையவர்களே! நீங்களும் அப்படியே இத்தை வாழ்வாக எண்ணியிருங்கோள். இனி இதுதான் ஏது என்ன அருளிச்செய்கிறார். (ஏழ்பாரு முய்ய எதிராச ருதித்தருளும் சித்திரையில் செய்ய திருவாதிரை) என்று அதாவது: "உண்

* இதுக்கசலராயென்று பாடாந்தரம்.

மை நன்ஞான முரைத்த" என்னும்படி இவருடைய ஜ்ஞாநோபதேசத்தாலே ஸத்தைபெற்று, ஸர்வலோகங்களிலும் உண்டானவர்களும் உஜ்ஜீவிக்கும்படி யதிகளுக்கு நாதரான எம்பெருமானார் அவதரித்தருளும்படியான சித்திரை மாஸத்தில் அழகிய திருவாதிரை யென்கை. ஆகையாலே, (வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர் ஏழ்பாரு முய்ய) பார் என்று பூமியாய், ஏழ்பாரென்று ஸப்த த்வீபவதியான பூமி யென்றபடி. இத்தால் ஸர்வ லோகங்களையும் நினைக்கிறது. "அனைத்துலகும் வாழப் பிறந்தவன்" என்னக்கடவதிறே. ஸர்வலோகத்தில் உண்டானவர்களும் இவர் அவதாரத்தாலே உஜ்ஜீவிக்கையாவது: "తదుపర్యపి బాదరాయణస్సమ్భవాత్ — ததுபர்யபி பாதராயணஸ்ஸம்பவாத்" என்று உபரிதந லோகங்களிலும் ப்ரஹ்மோபாஸநம் உண்டாகச் சொல்லுகையாலே அத்தை விதிக்கிற வேதாந்த சாஸ்த்ரங்களில், ஸம்சயங்களெல்லாம் போம்படி ஸ்ரீபாஷ்யமுகேந "தத்துவநூல் கூழற்றது" என்னும்படி ஸகலார்த்தங்களையும் ஸம்சய விபர்யயமற ஸாதித்தருளுகையாலே தங்களுடைய ஸம்சயங்களும் தீர்ந்து உஜ்ஜீவிக்கும்படியானார்கள். இதுதான் பௌமராயுள்ளவர்கள் விஷயமாக இருந்ததே யாகிலும் திவ்யர்களுக்கும் ஸஹகார ரூபத்தாலே உபகாரகமாயும் இருக்கும். இவர்தாம் சாரதாபீடத்துக்கு எழுந்தருளின போது, ஸரஸ்வதியானவள், தன்னுடைய ஸம்சயங்களெல்லாம் இவரிடத்திலே கேட்டுக்கொண்டு, நிஸ்ஸம்சையாய் "சங்கைகெடுத்தாண்ட தவராசா" என்னும்படி மிகவும் உபலாலித்து, தன்னிடத்தி லுண்டான வ்ருத்தியையும் தர்சிப்பித்து, பின்பு போகவிட்டருளின ஸ்ரீபாஷ்யத்தை சிரஸாவஹித்தும் செய்தவை எங்கும் ப்ரஸித்தமிறே. தேவர்கட்கெல்லாம் தலையாய், ஸத்யலோகவாஸியாய் இருக்கிற ப்ரஹ்மாவினுடைய மஹிஷியாய், ஸர்வ வாணியாயிருக்கிற ஸரஸ்வதியானவள் இப்படி ஆதரித்துச் செய்தால் ஸர்வலோகத்தில் உண்டானவர்களும் ஆதரித்துப் போருவர்களென்னுமது சொல்லவேண்டாவிறே. அன்றிக்கே, "సభ్రాతుశ్చరణౌ గాఢం నిపీడ్య రఘునందనః సీతాముపాచాతియశా రాఘవఞ్చ మహావ్రతమ్— ஸப்ராதுச் சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந: ஸீதா முவாசாதியசா ராகவஞ்ச மஹாவ்ரதம்" என்று நித்யஸூரிகளில் தலைவரான இளையபெருமாளுடைய கைங்கர்ய ப்ரார்த்தநா ரூபமான

ப்ரவர்த்தி அநுஷ்டானத்தை ததவதாரமான தாம் அப்படியே "శ్రీమన్నారాయణ తవ చరణారవిన్ద యుగళం శరణమహం ప్రపద్యే—ஸ்ரீமந் நாராயண தவ சரணாரவிந்த யுகளம் சரணமஹம் ப்ரபத்யே" என்று ததநுஷ்டானத்தை அநுஷ்டித்தும் அவ்வளவும் போதாமல், அவ்வநுஷ்டானத்தைப் பின்புள்ளாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி ஸ்ரீகத்யத்ரயமாகிற ப்ரபந்தமுகேந ப்ரகாசிப்பித்தருளினதாகவுமாம். இதிறே ஸர்வலோகத்திலவர்களும் உஜ்ஜீவிக்கைக்கு உசிதமான மார்க்கம். (ஏழ்பாரு முய்ய எதிராசர் உதித்தருளும்) கேவல ஆதித்யனுடைய உதயத்தில், "கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான் கனையிருளகன்றது" என்னும்படி இந்த லோகத்தில், பாஹ்யாந்தகாரமாய்த்துப் போவது. ஜ்ஞாந ப்ரபையையுடைய ராமாநுஜ திவாகரரான இந்த ஆதித்யனுடைய உதயத்தில் "உலகிருள் நீங்க" என்றும், "సర్వలోక తమోహన్తా—ஸர்வலோக தமோஹந்தா" என்று சொல்லுகிறபடியே ஸர்வ லோகத்தில் உண்டான அஜ்ஞாநாந்தகாரம் போம்படியாயிருக்கும். "అర్కస్య కరసమ్పర్కాత్ దివాహన్తి బహిస్తమః సన్తస్తు దర్శనాదేవ బహిరన్తర్దివానిశమ్—ஆர்க்கஸ்ய கரஸம்பர்க்காத் திவாஹந்தி பஹிஸ்தம: ஸந்தஸ்து தர்சநாதேவ பஹிரந்தர்திவாநிசம்" என்றும், "నిఖిలకుమతిమాయా శర్వరీబాలసూర్యః-நிகில குமதிமாயா சர்வரீபாலஸூர்ய:" என்றும் சொல்லக்கடவதிறே. "ஆனது செம்மை" என்று தொடங்கி, "இராமாநுசனித்தலத் துதித்தே" என்னுமளவாக இவர் உதயத்தில் உண்டான விசேஷங்களைக் காணலாயிருக்கும். (எதிராசர் உதித்தருளும் சித்திரையில் செய்ய திருவாதிரை) ஆதித்யனானவன், ஆர்த்ராப்ரவேசம் பண்ணினாற்போலே யாய்த்து இவரும் ஆர்த்ரையிலே உதித்தருளினபடி. அப்போதிறே ஸஸ்யங்களெல்லாம் பருவஞ்செய்வது. இங்கும் அப்படியாய்த்து ஆத்ம ஸஸ்யங்களும் ஜ்ஞாந ப்ரகாசம் செய்ததும். "ఆదిత్యాజ్జాయతే వృష్టిః—ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டி:" என்னுமாபோலே இங்கும் க்ருபாவர்ஷமுண்டிறே. (சித்திரையில் செய்ய திருவாதிரை) புஷ்ப ஸமயமான சித்திரை மாஸத்தில் அழகிய திருவாதிரையாய்த்து அவதரித்தருளிற்று. அதுக்கு அழகாவது: "அழகாரு மெதிராசர்" அவதரிக்கையால் வந்த அழகுண்டிறே. "செய்ய திருவாதிரை" திரு

வாதிரைதான் சிவந்திறே யிருப்பது. செய்ய வடிவையுடைய ஸ்ரீமாந் அவதரிக்கையால் அதுவும் அப்படியே யாயிருக்கை. "ஸுவர்ணவர்ண—ஸுபக ஸ்ரீமாந்" என்னுமாபோலே "செய்யதோர் ஞாயிற்" றின்படியாய்த்து இவர் படியும். "சிவந்து வலிய நெடிய ராய்" என்றிறே நம்பியும் அருளிச்செய்தது.

உகூ-ம் பாட்டு.

எந்தை எதிராசர் இவ்வுலகில் எந்தமக்கா
வந்துதித்த நாளென்னும் வாசியினால்—இந்தத்
திருவாதிரை தன்னின் சீர்மைதன்னை நெஞ்சே
ஒருவாம லெப்பொழுது மோர்.

பதவுரை.

எந்தை-எமது ஸ்வாமியான, எதிராசர்-இராமாநுஜர், இவ்வுலகில்-இந்த உலகத்தில், எம்தமக்கா-எங்களுக்காக, வந்து உதித்த-வந்து அவதரித்தருளின, நாள் என்னும்-திருநக்ஷத்ரமென்று சொல்லும், வாசியினால்-ஏற்றத்தினாலே, இந்த—, திருவாதிரைதன்னின்-திருவாதிரை நக்ஷத்ரத்தின், சீர்மை தன்னை-வைபவத்தை, நெஞ்சே-மனமே! ஒருவாமல்-தவறாமல், எப்பொழுதும்-எக்காலத்திலும், ஓர்-அறிந்துகொள்.

வ்யாக்யாநம்.

இருபத்தொன்பதாம்பாட்டு.—கீழ் இரண்டு பாட்டாலும் இதினுடைய வைபவத்தை ஸர்வ சேதநரும் அறியும்படி உபதேசித்தருளினவர், இப்பாட்டில் அவர்களைக் காட்டிலும் தம் உபதேசம் நிரபேக்ஷமாகவே, "முந்துற்ற நெஞ்" சாய்த் திருந்தியிருக்கிற தம் திருவுள்ளத்தைக்குறித்து, இதின் வைபவத்தை ஸஹ்ருதயமாக ஸதா அநுஸந்தாநம் பண்ணும்படி அருளிச்செய்கிறார் (எந்தை யெதிராசர்) என்று தொடங்கி. நம்முடைய ஸத்தாதிகளுக்கெல்லாம் காரணமாய் யதிகளுக்கு நாதரான எம்பெருமானார். (இவ்வுலகில்) ஸம்ஸாரிகளுங்கூட குத்ஸித்துக் கால்வாங்க வேண்டும்படியான ஸம்ஸாரத்திலே. (எந்தமக்கா வந்துதித்த) எந்தையான முறையாலே இவ்வுலகில் எந்தமக்காய் வந்துதித்தது. (எந்தமக்கா) இப்படி இந்தக் கொடுவுலகத்திலே அவதரிக்கைக்கு வேறொரு ஹேத்வந்தரமில்லை. நம்மை ரக்ஷிக்கைக்காகவே "மாயுமென் னுவினைய வந்தெடு" க்கைக்காகவாய்த்து,

"இராமாநுச னிப்படியிற் பிறந்தது மற்றில்லை காரணம் பார்த்திடிலே" என்கிறபடியே இவர்க்கிருக்கிறது. "கூபத்தில் வீழுங் குழவியுடன் குதித்து" என்றுதொடங்கி, "யதிராசர் தாம்பிறக்கை யென்னை யுய்ப்பதா" என்றும் "எந்தை யெதிராசர் எம்மை யெடுத்தளிக்க வந்த" என்றுமிறே இவர் வாசிகமாக அருளிச்செய்தது. (எந்தமக்கா வந்துதித்த நாளென்னும் வாசியினால்) நம்முடைய விடியா வெந்நரகான ஸம்ஸாரத்துக்கு ஒரு விடிவு பிறக்கும்படி "விண்ணின் றலைநின்றும் வீடளிப்பா"னாய் "மண்ணின் தலத்துதித்த" நாள் என்கிற விசேஷத்தினாலே. (இந்தத் திருவாதிரைதன்னின் சீர்மைதன்னை) அநந்தாவதாரத்துக்கும் அடியாய், "சங்கர பாற்கரர்" இத்யாதியாலும், ஸ்தலாந்தரங்களிலும் பேசும்படியான பெருமையை, கௌரவத்தை. (நெஞ்சே ஒருவாமலெப்பொழுது மோர்) இப்படி ஸ்வார்த்தமாக அநுஸந்திக்கும்படி அவதரித்தருளின இந்தத் திருவாதிரையினுடைய மஹத்தையை மநநம் பண்ணுகைக்குப் பரிகரமான மநஸ்ஸே! அப்படியே இத்தை விச்சேதியாமல் ஸர்வகாலத்திலும் அநுஸந்தித்துப் போரு. (இந்தத்திருவாதிரை) யென்று இதில் தமக்குண்டான ஈடுபாடு இருக்கிறபடி. இத்தால் "ఆచార్యంసంస్మరేత్సదా— ஆசார்யம்ஸம்ஸ்மரேத்ஸதா" என்னுமாபோலே அவர் அவதரித்த திருநக்ஷத்ர வைபவமும் இவர்க்கு அநுஸ்மரணத்துக்கு உடலாயிருக்கிறது; அதுக்கடி உபகாரஸ்ம்ருதியிறே.

## ௯0-ம் பாட்டு.

எண்ணருஞ்சீர் பொய்கைமுன்னோர் இவ்வுலகில் தோன்றியவூர்
வண்மைமிகு கச்சிமல்லை மாமயிலை—மண்ணியில் நீர்
தேங்குங் குறையலூர் சீர்க்கலியன் றோன்றியவூர்
ஓங்குமுறையூர் பாணனூர்.

### பதவுரை.

எண்ண அரும்-எண்ணுவதற்கரிய, சீர்-வைபவத்தையுடைய, பொய்கை முன்னோர்-பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னுமிவர்கள், இவ்வுலகில்-இந்த வுலகத்தில், தோன்றிய-அவதரித்தருளின, ஊர்-நகரங்களாவன: வண்மை-வளப்பம், மிகு-அதிகரித்த, கச்சி-திருக்கச்சியும், மல்லை-திருக்கடல் மல்லையும், மாமயிலை-சிறந்த திருமயிலையுமாகும். சீர்-வைபவத்தையுடைய, கலியன்-திருமங்கையாழ்வார், தோன்றிய-அவ

தரித்தருளின, ஊர்-நகரமானது, மண்ணியில்-மண்ணியாற்றின், நீர்-ஜலமானது, தேங்கும்-நிறைந்திருக்கிற, குறையலூர்-திருக்குறையலூராகும், பாணன்-திருப்பாணாழ்வார் (அவதரித்தருளின) ஊர்-நகரமானது உறையூர்-திருவுறையூராகும்.

பொய்கையாழ்வார் திருக்கச்சியிலும், பூதத்தாழ்வார் திருக்கடல் மல்லையிலும் பேயாழ்வார் திருமயிலையிலும் அவதரித்தனர் எனக்கொள்க.

வ்யாக்யானம்.

முப்பதாம்பாட்டு.— "அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்" என்று தொடங்கி, இவ்வளவாக, ஆழ்வார்கள் அவதரித்த நாள் ஊர் திங்களடைவு திருநாமங்களும் அவர்கள் செய்த "வாழ்வான திருமொழிகள்" என்கிறபடியே, ஆழ்வார்கள் தொடக்கமானார் வைபவங்கள் எல்லாவற்றையும் எல்லாரும் அறியும்படி அதிஸ்புடமாக அருளிச்செய்தவர், அவ்வோபாதி அவர்கள் அவதரித்த தேசமும் "அயோத்யா மதுரா— அயோத்யா மதுரா" திகளோபாதி ஆதரணீயங்களாகையாலே அத்தை அருளிச்செய்ய வேணுமென்று திருவுள்ளம்பற்றி அவற்றை அடைவே நாலு பாட்டாலே அருளிச்செய்வாராய் அதில் இப்பாட்டில் பொய்கையார் தொடங்கி அஞ்சுபேருடைய அவதரண ஸ்தலங்களை அருளிச்செய்கிறார், (எண்ணருஞ்சீர்) என்று தொடங்கி. அதாவது: பரிகணநத்துக்கு முடியாதபடியான கல்யாண குணங்களையுடையரான முதலாழ்வார்கள் மூவரும், "எண்ணில் தொல்புகழ்" போலே பத்மபவோப்ய கண்யங்களாயிறே இவர்கள் குணங்களிருப்பது. இப்படி அகண்யகுணகண மஹா வைபவத்தை யுடையரான இவர்கள் இந்த ஜகத்திலே வந்து அவதரித்தருளின ஊர்கள் இன்னதென்கிறார், (வளமிகு கச்சி மல்லை மாமயிலை) என்று. அதாவது மஹா நகரங்களான காஞ்ச்யாதி நகரத்ரயமும் கீழ் உக்தரான மூவருடையவும் அவதரண ஸ்தலங்களென்கை. கச்சிக்கு மிக்கவண்மையாவது "நிறைந்த சீர்மை நீள்கச்சி" என்னும்படி திருப்பதிகளாலே நிறைந்த சீரையுடைத்தாய் "அழகாயகச்சி" என்கிறபடியே நகராலங்காரங்களையும் உடைத்தாயிருக்கை. "நின்றானிருந்தான் கிடந்தானிதுவன்றோ, மன்றார் பொழிற்கச்சி மாண்பு" என்றும் சொல்லக்கடவதிறே. அன்றிக்கே கச்சிவெஃகாவிலே கிடந்த ஸர்வேச்

வரனையும் கச்சிநகர் வந்துதித்த ஆழ்வாரையும் ஸம்ஸாரிகளும் கண்டு வாழும்படி உபகரித்துக்கொண்டிருக்கிற ஔதார்யமாகவுமாம். "மல்லை கச்சிக் கிடந்தவனூர்" என்ற அநந்தரத்திலே "கடல்மல்லைத் தலசயனம்" என்றாரிறே. தத் ஸமமான கடல் மல்லை. "வங்கத்தால் மாமணிவந்துந்து முந்நீர் மல்லையாய்" என்னக்கடவதிறே. விலையில்லாத ஜீவேச்வரங்களையிறே உட்கொண்டிருக்கிறது. அதாவது: "சிதைந்தார் முத்துக்கள் சேருங் கடல்மல்லை பூதத்தாரை" யும் "கடல்மல்லைத் தலசயனத்துறைவாரை" யுமிறே இங்கு உரைக்கிறது. (மாமயிலை) "நீளோதம் வந்தலைக்கும் மாமயிலை" என்னும்படி மஹதாஹ்வயர் அவதரணத்துக்குத் தகுதியான மஹா நகரமான மயிலை. "வந்துதைத்த வெண்டிரைகள்" இத்யாதி. அதுவும் அப்படியே யாயிருக்கை. (சீர்க்கலியன் றோன்றிய வூர் மண்ணியில் நீர் தேங்குங் குறையலூர்) அதாவது: "கொண்ட சீர்த்தொண்டன் கலியன்" என்கிறபடியே ஜ்ஞாந பக்த்யாதி கல்யாண குணங்களையும், "அரும் பெறலன்பு புக்கிட்டடிமை பூண்டுய்ந்து" என்னும்படி அத்தாலே உண்டான வாசிக காயிக ரூபமான கைங்கர்ய ஸம்பத்தையும் உடையரான திருமங்கையாழ்வாரென்கை. அன்றிக்கே, "சீர்க்கலியன்" என்கிறத்துக்கு, கலியன் என்னும்படி அறுகாழி முதலாக அங்குளியாதி ஆபரணங்களையும் அபஹரித்து, அநந்தரம் அவனுக்கு ஸர்வஸ்வம்மான பெரிய திருமந்த்ரத்தையும் பெற்ற சீராகவுமாம். "அவளுக்குத் திருவடிகளுக்குடுத்த திருவாழி மோதிரத்தோபாதி இவனுக்கு ஆசார்யன் ப்ரஸாதித்த திருமந்த்ரமும்" என்னக்கடவதிறே. இப்படியான அத்ருஷ்ட ஸம்பத்தை யுடையரான, இவர் அவதரித்த ஊரானது "தேங்கும் பொருநற் திருநகரி" யைப்போலே (பொங்கு புனல் மண்ணி) என்னும்படியான மண்ணியாற்றின் ஜல ஸம்ருத்தியை யுடைத்தான திருக்குறையலூரென்கை. அந்த ஜல ஸம்ருத்தியாலேயிறே "கலிமிக்க செந்நெற்கழனி" யையு முடைத்தாயிருக்கிறது. இதுவும் "கலிவயல் தென்னன் குருகூரை" ப்போலே யாய்த்து. அந்தத் திருக்குறையலூர்தான் திருவாலி திருநகரியோடே சேர்ந்து அதில் ஏகதேசம் என்னலாம்படியா யிருக்கும். (குறையலூர் சீர்க்கலியன் தோன்றி யூர். ஒக்கு முறையூர் பாணனூர்) இவை யிரண்டுக்கும்

உண்டான மாஸ சேர்த்தியும் நிருக்ஷத்ர சேர்த்தியுமுண்டிறே. (பாணரூர் ஓங்கு றுறையூர்) இதுக்கு ஒக்கமாவது: சேஷத்வத்துக்கு அநுகுணமான உயர்ந்த குலத்தையுடையவர் அவதரிக்கையால் வந்த உயர்த்தியென்கை. அன்றிக்கே, “கோழியுங் கூடலுங் கோயில் கொண்ட கோவலர்” என்னும்படி ஸர்வேச்வரன் உகந்து வர்த்திக்கும் திருப்பதியுமாய், “திருவாழுறந்தை” யென்றும் “உறையூர் வல்லியா” ரென்றும் நிரூபகமாம்படி பிராட்டிக்கு உத்பத்தி ஸ்தாநமாகையாலும் உண்டான உச்ச்ராயமாகவுமாம். இப்படி அதிசயத்தை யுடைத்தான ஊராய்த்து இவருடைய அவதரண ஸ்தலமென்கை. இதுதான் திருமுகத்துறைக்கு எதிர்த்துறையா யிருப்பது, எதிர்விழி கொடுக்கைக்குப் பாங்கான தேசமாய்த்து.

௩௧-ம் பாட்டு.

தொண்டரடிப் பொடியார் தோன்றியவூர் தொல்புகழ்சேர்
மண்டங் குடியென்பர் மண்ணுலகில்—எண்டிசையும்
ஏத்துங் குலசேகரனூ ரெனவுரைப்பர்
வாய்த்ததிரு வஞ்சிக்களம்.

பதவுரை.

மண்ணுலகில்-பூமியில், தொண்டரடிப்பொடியார்-தொண்டரடிப் பொடியாழ்வார், தோன்றிய ஊர்-அவதரித்த நகரமானது, தொல்-பழமையான, புகழ்-வைபவம், சேர்-கூடியிருக்கும், மண்டங்குடி-திருமண்டங்குடி நகரம், என்பர்-என்று பெரியோர் சொல்லுவர், எண்திசையும்-எட்டுத்திக்கிலுள்ளவர்களும், ஏத்தும்-துதிக்கும், குலசேகரன் ஊர்-குலசேகராழ்வார் அவதரித்த நகரமானது, வாய்த்த-ஸ்வரூபாநுரூபமான, திரு-அழகிய, வஞ்சிக்களம்-வஞ்சிக்களமென்னும் நகரம், என்று-என்று, உரைப்பர்-பெரியோர் சொல்லுவார்கள்.

வ்யாக்யாநம்.

முப்பத்தொன்றாம்பாட்டு.—இதில் தொண்டரடிப்பொடியாழ்வாருடையவும் குலசேகரப் பெருமாளுடையவும் அவதரண ஸ்தலங்களை இன்னதென்று அருளிச்செய்கிறார். (தொண்டரடிப் பொடியார் தோன்றிய ஊர் தொல்புகழ்சேர் மண்டங்குடி யென்பர் மண்ணுலகில்) இந்த பூமியிலே தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்த ஊரானது, (தொல்புகழ்சேர் மண்டங்குடியென்பர்)

துன்னுபுகழ் மாமறையோரான இவர் அவதரிக்கைக்கு அநுகுண மாம்படி ஸ்வாபாவிகமான புகழையுடைத்தான திருமண்டங்குடி யென்பர்கள். அந்த அவதார வைபவத்தை யறிந்து போரும் பரம வைதிகரானவர்கள் "மண்டங் குடியென்பர் மாமறையோர் மன்னிய சீர் தொண்டரடிப்பொடி தொன்னகரம்" என்னக்கடவ திறே. தொன்னகரமாகையாலே தொல்புகழை யுடைத்தாய்த்து. அதுதான் திருப்புள்ளம் பூதங்குடிக்கு அத்யாஸந்நமாயிறே யிருப்பது. (எண்டிசையு மேத்துங் குலசேகரனூரென வுரைப்பர் வாய்த்த திருவஞ்சிக்களம்) இவருடைய பகவத் பாகவத ப்ராவண்யாதிகளை ஸர்வதோதிக்கமாக ஸ்துதிக்கும்படியா யிருக்கிற "முடிவேந்தர் சிகாமணி" யான குலசேகரப் பெருமாளுடைய அவதார ஸ்தலமாகச் சொல்லுவர்கள், அதுக்கு அநுரூபமான திருவஞ்சிக்களம். வாய்க்கை-சேருகை. அதுதான் கேரளதேசத்திலே கிசூலையென்று பெயரையுடைத்தான மஹா நகரமாயிருக்கும். இதுதான் திருவற்றுவக்கோட்டுக்கு ஆஸந்நமாயிருக்கும்.

௩உ-ம் பாட்டு.

மன்னுதிருமழிசை மாடத் திருக்குருகூர்
மின்னுபுகழ் வில்லிபுத்தூர் மேதினியில்—நன்னெறியோர்
ஏய்ந்த பத்திசாரர் எழில் மாறன் பட்டர்பிரான்
வாய்ந்துதித்த வூர்கள் வகை.

பதவுரை.

மேதினியில்-உலகத்தில், நல்நெறியோர்-நல்லதான ஆசார்யாபிமாந நிஷ்டையிலிருப்போர், ஏய்ந்த-கூடியிருந்துள்ள, பத்திசாரர்-திருமழிசைப் பிரானும், எழில்-அழகிய, மாறன்-நம்மாழ்வாரும், பட்டர்பிரான்-பெரியாழ்வாரும், வாய்ந்து-சேர்ந்து, உதித்த-அவதரித்த, ஊர்கள்-நகரங்களினுடைய, வகை-விவரமானது: மன்னு-நிலைபெற்ற, திருமழிசை-திருமழிசையும், மாடம்-மாடங்களையுடைய, திருக்குருகூர்-திருக்குருகூரும், மின்னு-ப்ரகாசிப்பதான- புகழ்-வைபவத்தையுடைய, வில்லிபுத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூருமாகும்.

பத்திசாரர்-திருமழிசையிலும், நம்மாழ்வார்-திருக்குருகூரிலும், பெரியாழ்வார்-ஸ்ரீவில்லிபுத்தூரிலும் அவதரித்தனரெனக்கொள்க.

வ்யாக்யானம்.

முப்பத்திரண்டாம்பாட்டு.—(மன்னு திருமழிசை) இத்யாதி. இதில் திருமழிசைப் பிரானுடையவும், திருக்குருகூர் காரிமாற

னன நம்மாழ்வாருடையவும் வில்லிபுத்தூர் பட்டர்பிரானன பெரியாழ்வாருடையவும் திருவவதார ஸ்தலங்களை இன்னதென்றருளிச் செய்கிறார். (மன்னுதிருமழிசை) இவர்கள் அவதரித்த மாஸங்களின் அடைவே ஊர்களையும் அருளிச்செய்கிற இவர், திருமண்டங்குடிக்கு அநந்தரம் திருமழிசையை அருளிச்செய்திலரேயாகிலும் அந்த அளவிலே ஆகவேணுமென்று கண்டுகொள்வது. அன்றிக்கே கீழ், நடந்ததுக்கு அநுகுணமாக "புகழ்மழிசையையனருள் மாறன்" என்கிற சேர்த்திக்காகவுமாம். (மன்னு திருமழிசை) இதுதான் ஸ்ரீஜகந்நாதருடையவும் ஆழ்வாருடையவும் ஸம்பந்தம் மாறாதே நித்யமாய்ச் செல்லுகையாலே மஹீஸார க்ஷேத்ரமென்னும்படி பூமியை நொய்தாகப் பண்ணும்படியிருப்பதான திருமழிசை. அதுதான் திருநின்றவூருக்குத் தெற்காய் அதுக்கு அத்யாஸந்நமாயிருக்கும். (மாடத்திருக்குருகூர்) "மாடமாளிகை சூழ்ந்தழகாய திருக்குருகூர்" என்னும்படி நகராலங்காரங்களையுடைத்தான திருநகரி. (மின்னுபுகழ் வில்லிபுத்தூர்) அதாவது: "பாரார் தொல்புகழான் பட்டர்பிரான்" வந்து அவதரித்தருளுகையாலே திக்குக்களிலே ப்ரகாசமான யசஸ்ஸையுடைத்தாயிறே ஸ்ரீவில்லிபுத்தூர் இருப்பது. (மேதினியில்) பூமியிலே. இந்த பூமியிலுண்டான ஸ்ரீநகர்யாதி ஸ்தலங்களிலே யாய்த்து ஸ்ரீமாந்களான இவர்கள் அவரித்தது. அவர்கள் ஆர் என்னில் (நன்னெறியோர் ஏய்ந்த பத்திசாரன்) அதாவது: நன்னெறியுண்டு ஆசார்யாபிமாநம். அந்த மார்க்கத்திலே நிஷ்டராய், பழுதாகாத வழியையறிந்து "வேறாகவேத்தியிருக்கு"மவர்களைப் பற்றியிருக்குமவர்கள். கணிகண்ணர்-பெரும்புலியூரடிகள் போல்வார். இப்படி அநந்ய ப்ரயோஜநரானவர்களாலே பொருந்தி நின்று, ஸேவிக்கப்படுகிற ஸ்ரீபக்திஸாரராகிற திருமழிசைப்பிரான். அன்றிக்கே, (நன்னெறியோர்) என்கிறத்தை மற்றை ஆழ்வார்களோடும் கூட்டி அநுஸந்திக்கவுமாம். அப்போது ஆண்டாள் மதுரகவியாழ்வார் போல்வார் ஆகிறது. அவர்களிறே அங்குத்தைக்கு அநுரூபமாக வந்தேவாஸிகளாய் நின்று ஸேவித்துப் போந்தவர்கள். (எழில்மாறன்) ஜகதாபரணரான வகுளாபரணர். எழில்-அழகு. (பட்டர்பிரான்) ஸ்ரீபட்டநாதரான பெரியாழ்வார். இவர்கள் மூவரும் பூமியிலே பெறுதற் கரிதென்னலாம்படி சேதநரு

ணுடைய ரக்ஷணத்துக்கு அநுகுணமாக அவதரித்த ஊர்களினுடைய வகை இவையாய்த்து. இவைதான் பூர்வபச்சிமோத்தர தக்ஷிண தேச ஸ்தலங்களாயிறே யிருப்பது.

௩௩-ம் பாட்டு.

சீராரும் வில்லிபுத்தூர் செல்வத் திருக்கோளூர்
ஏரார் பெரும்பூதூ ரென்னுமிவை—பாரில்
மதியாரு மாண்டாள் மதுரகவியாழ்வார்
எதிராசர் தோன்றியவூ ரிங்கு.

பதவுரை.

சீர்-வைபவம், ஆரும்-பொருந்திய, வில்லிபுத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூரும், செல்வம்-ஸம்பத்தையுடைய, திருக்கோளூர்-திருக்கோளூரும், ஏர்-அழகு, ஆர்-நிறைந்த, பெரும்பூதூர்-ஸ்ரீபெரும்பூதூரும், என்னும்-என்று சொல்லப் படும், இவை-இந்தத் தேசங்கள், பாரில்-பூமியில், மதி-ஞானம், ஆரும்-விசேஷித்திருக்கும், ஆண்டாள்-சூடிக்கொடுத்த நாய்ச்சியாரும், மதுரகவி யாழ்வார்-மதுரகவியாழ்வாரும், எதிராசர்-எம்பெருமானாரும், தோன்றிய-அவதரித்தருளின, ஊர்-தேசங்களாகும்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளும், திருக்கோளூரில்-மதுரகவியாழ்வாரும், ஸ்ரீபெரும்பூதூரில்-எதிராசரும் அவதரித்தருளினரெனக்கொள்க.

வ்யாக்யாநம்.

முப்பத்துமூன்றாம்பாட்டு.—இனி "ஆழ்வார் திருமகளார் ஆண்டாள்" என்று தொடங்கி, கீழே அருளிச்செய்யப்பட்டவர்களுடைய அவதரண ஸ்தலங்களையும் அடைவே இப்பாட்டாலே அருளிச்செய்கிறார். (சீராரும் வில்லிபுத்தூர்) என்று. இவர்கள்தான் "வாழ்வாக வந்துதித்த" வர்களாகையாலே ஊர்களும் சீரும் செல்வமும் எங்கும் தழைத்திருக்கும்படி. (சீராரும் வில்லிபுத்தூர்) ஸம்பத் ஸம்ருத்தியையுடைய வில்லிபுத்தூர். அதாவது பொன்னும் மணியும் முத்தும் சேர்ந்தாற்போலே பொன்னடியையுடைய வில்லிபுத்தூருறைவானையும், மணிவல்லி என்னும்படி ஸ்த்ரீரத்நமான நாய்ச்சியாரையும், முக்தாகரமான சோதியிலே அவதரித்து, "இக்கரையேறி யிளைத்திருந்தேன்" என்னும்படி ஒருகரை சேர்ந்திருக்கிற முக்த ப்ராயரான ஆழ்வாரையும் உடைத்தாயிருக்கையாலே நிரவதிக நித்ய ஸ்ரீயையுடைத்தாயிருக்கை, அன்றிக்கே "கோவலர் தம் பொற்கொடி" யான

நாய்ச்சியாரையும் "மணியை வானவர்க்கண்ணனை" என்னும்படியான ஸர்வேச்வரனையும் சொல்லுகிறதாகவுமாம். அன்றிக்கே, "சீர்மல்கு மாய்ப்பாடிச்செல்வ" த்திற்போலே ஆழ்வாரும் திருமகளாரும் கோப ஜந்மத்தை ஆஸ்தாநம் பண்ணி குறைபவைக யாத்ரையாய்ப் போருகையாலே "மலிபுகழ்வண்குருகூர்" என்கிறபடியே க்ருஷ்ண குணங்களாலே பூர்ணமாயிருக்கையைப் பற்றச் சொல்லவுமாம். (செல்வத்திருக்கோளூர்) "செல்வம் மல்கி யவன்கிடந்த திருக்கோளூர்" என்கையாலே வைத்தமாநிதியையுடைத்தாயிருக்கை. (ஏரார்பெரும்பூதூர்) அதாவது: "ஏராரெதிராச" ரவதரிக்கையாலே அழகு மிக்கிருந்துள்ள பெரும்பூதூரென்கை. அன்றிக்கே, "செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளும் செறிந்த பெரும்பூதூர்" என்கிறபடியே ஊர் வளப்பத்தைச் சொல்லவுமாம். (என்னுமிவை) என்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிற இந்த ஸ்தலங்கள். (பாரில் மதியாரு மாண்டாள் மதுரகவியாழ்வார் எதிராசர் தோன்றியவூரிங்கு) அதாவது: பகவத்ஜ்ஞாந பரிபூர்ணையாய், அதுதான் ததீய பர்யந்தமாயிருக்கும்படியான தரத்தையுடைய ஆண்டாள் பூமியிலே அவதரித்தது, (சீராரும் வில்லிபுத்தூர்) "ஆயர் குலத்தினில் தோன்றும் மணிவிளக்கு" ப்போலேயாய்த்து, "வேயர் பயந்த விளக்கும்" இங்கு தோன்றிற்று. தத் துல்ய ஜ்ஞாநராய் தேவுமற்றறியாத மதுரகவிகள், யதிகளுக்கு நாதரான எம்பெருமானார் இவர்கள் ஆவிர்ப்பவித்த ஸ்தலங்கள், (செல்வத்திருக்கோளூர் ஏரார் பெரும்பூதூர்) என்னுமிவையாய்த்து. (இங்கு) என்கையாலே அங்குள்ளார்கள் இங்கேவந்து ஆவிர்ப்பவித்தார்களென்னுமது தோற்றுகிறது. "యథావతారాన్ మధురాముఱారే రామస్యసాకేత పురీచయద్వత్ తథాయతీన్ద్రస్య సతాముపాస్యా పుణ్యామహాభూతపురీబభూవ—யதாவதாராந் மதுராமுராரே ராமஸ்ய ஸாகேத புரீசயத்வத் ததாயதீந்த்ரஸ்ய ஸதாமுபாஸ்யா புண்யா மஹாபூத புரீபபூவ" என்னக்கடவதிறே.

௬௪-ம் பாட்டு.

ஆழ்வார்க ளேற்ற மருளிச் செயலேற்றம்
தாழ்வாது மின்றியவை தாம்வளர்த்தோர்—ஏழ்பாரு
முய்ய வவர்கள் செய் வியாக்கியைக ளுள்ளதெல்லாம்
வையமறியப் பகர்வோம் வாய்ந்து.

பதவுரை.

ஆழ்வார்கள்-ஆழ்வார்களுடைய, ஏற்றம்-வைபவமும், அருளிச்செயல்-அவர்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களுடைய, ஏற்றம்-வைபவமும், தாழ்வு-தாழ்வானது, ஆதும்-யாதொன்றும், இன்றி-இல்லாமல், அவைதாம்-அவைகளை, வளர்த்தோர்-வளர்த்த பூர்வாசார்யர்களையும், ஏழ்பாரும்-ஏழுலகமும், உய்ய-உஜ்ஜீவிக்கும்படியாக, அவர்கள்-அந்தப் பூர்வாசார்யர்கள், செய்-அருளிச்செய்த, வியாக்கியைகள்-வியாக்யாநங்களாக, உள்ளது எல்லாம்-இருப்பவைகளை யெல்லாம், வாய்ந்து-பொருந்தும்படி, வையம்-பூமியிலுள்ளவர்கள், அறிய-அறிந்து கொள்ளும்படி, பகர்வோம்-சொல்லக்கடவோம்.

வ்யாக்யாநம்.

முப்பத்துநாலாம்பாட்டு.—அடியிலே "ஆழ்வார்கள் வாழி யருளிச்செயல் வாழி" என்றும், "அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்" என்றும் இத்யாதிகளிலே உபக்ரமித்தருளினபடியே உத்தரோத்தரம் அவர்களுடைய அவதரண க்ரமாதிகளைப் பரக்க அருளிச்செய்தாராய் நின்றார் கீழ். இனி "தாழ்வாது மில்குரவர் தாம்வாழி, ஏழ்பாரும் உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி" என்றும் அருளிச்செய்த அம்சத்தையும் விஸ்தரேண ப்ரதிபாதித்தருளுகிறார் மேலெல்லாம். இதில் ஸகல ஜகதுஜ்ஜீவநார்த்தமாக அருளிச்செயல்களுக்கு ஆசார்யர்களால் அருளிச்செய்யப்பட்ட வ்யாக்யாந விசேஷங்களை யெல்லாம் தர்சிப்பித்தருளுகிறோமென்கிறார். (ஆழ்வார்களேற்றம்) என்று தொடங்கி. அவர்களுக்கு ஏற்றமாவது: ஸ்வயத்ந ஸாத்ய ஜ்ஞாநரான ருஷ்யாதிகளைப் போலன்றிக்கே அவனுடைய ஆகஸ்மிக க்ருபையாலே "மயர்வற மதிநலமருள"ப் பெற்ற மாஹாத்ம்யத்தை யுடையவர்களாய் அத்தாலே ப்ராப்ய ஸித்தியைப் பெற்றபோது பெறுகிறோம் என்றாறியிருந்து லோக யாத்ரையிலும் கண் வைத்திருக்கை யன்றிக்கே "எல்லாம் கண்ணன்" "யாவையும் திருமால் திருநாமங்களே கூவி" என்றும் "உண்டறியாள் உறக்கம்பேணாள் பந்தோடு கழல்மருவாள்" என்றும் இத்யாதிகளில் சொல்லுகிறபடியே தததேக தாரகாதிகளை யுடையராய், அவனை விச்லேஷிக்கில் அரைக்ஷணமும் தரியாத தன்மையை யுடையராய், "மாக வைகுந்தம் காண்பதற் கென்மனம் ஏகமெண்ணும்" "வானுலகம் தெளிந்தே யென்

றெய்துவன்" என்றும் பேசும்படியான மநோரதத்தை யுடையராய், அத்தைப் பெறுகைக்குத் தடுத்தும் வளைத்தும் பெறவேண்டும்படியான பரமபக்தியை யுடையராயிருக்கை. இதிறே அல்லாதாரிற் காட்டில் இவர்களுக்கு ஏற்றம். (அருளிச்செயலேற்ற)மாவது: "அருள்கொண்டாயிர மின்றமிழ் பாடினான்" என்னும்படி அந்த பகவத் ப்ரஸாதமடியாக உண்டான திவ்ய சக்ஷுர் மூலமாக "அவாவிலந்தாதி" என்னும்படி பக்தி பலாத்காரத்தாலே அவதரித்ததாய் அதுதான் பகவதேக பரமாய், விலக்ஷணமுமாய், போக்யமுமாய், ஸூசகமுமாய், ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகமுமாய், ஈச்வர ப்ரீதிஹேதுவுமாய், ஸம்ஸார விச்சேதகமுமாய், சீக்ர பலப்ரதமுமாயிருக்கை. இதிறே அல்லாதவற்றிற் காட்டில் இதுக்குண்டான ஏற்றம். இனி, (தாழ்வாது மின்றியவை தாம்வளர்க்கை) யாவது: இப்படி விலக்ஷணரான ஆழ்வார்களுடையவும் விலக்ஷண ப்ரமாணங்களான அருளிச்செயல்களினுடையவும் வைபவத்தை அவத்யலேசமும் இன்றிக்கே யிருப்பதொரு படித்தானத்தை வர்த்திப்பித்துக்கொண்டு போருகை. அதாவது: வக்த்ரு வைலக்ஷண்யத்திலே யாதல் ப்ரபந்த வைலக்ஷண்யத்திலே யாதல் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்திலே யாதல் உள்ளதொன்றையும் ஸங்கோசியாமல் ஒன்று பத்தாக்கி வர்த்திப்பித்துக்கொண்டு ததேகபரராய்ப் போருகையாய்த்து. அவர்கள், "தாழ்வாது மில்குரவர்" ஆகையாலே யாய்த்து இவற்றையும் தாழ்வாது மின்றிக்கே வளர்த்தார்கள். (வளர்த்தார்கள்) என்று ஏதத் வர்த்தகரானவர்களுடைய பாஹுள்ய மிருக்கும்படி. இனி அவை வளர்த்தாரா யிருக்கிறவர்கள்தான் ஸ்வஸ்வ வ்யாக்யாநமுகேந வாய்த்து இவற்றை வர்த்திப்பித்துக்கொண்டு போந்தது. ஆகையாலே (ஏழ்பாருமுய்ய அவர்கள் செய் வியாக்கியைகளுள்ளதெல்லாம் வையமறியப் பகர்வோம் வாய்ந்து) என்று அத்தை அருளிச்செய்கிறார். இத்தாலே (ஏழ்பாருமுய்கை) யாவது: இவற்றால் உய்யலாமென்றும், "உலகுய்ய வும்பர்களுங் கேட்டுய்ய" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வ லோகத்திலுள்ளவர்களும் "செவிக்கினிய செஞ்சொல்" லைக் கேட்டு உஜ்ஜீவிக்கும்படியிறே அவற்றுக்கு மூல ப்ரமாணங்களான அருளிச்செயல் தானிருப்பது. அப்படியே

அத்தை அடியொத்தி க்யாதி லாபாதி நிரபேக்ஷத்வாத் யாகார யுக்தரா யிருக்கிற இவர்களும் அதின் சீரிய அர்த்தங்களை எல்லா ரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி பரமப்ரயோஜநைக பரதையாலே "ஏழ்பாரு முய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி, செய்ய மறை தன்னுடனே சேர்ந்து" என்று அடியிலே அருளிச்செய்த படியே ஆப்திக்குடலாக வேத தாத்பர்யங்களையும் அநுவிதாநம் பண்ணிக்கொண்டு அர்த்த ப்ரதிபாதகம் பண்ணுகையாலே முக்ய தமமான ப்ரமாணமுமாய் அத்தாலே ஸர்வலோக பரிக்ரஹத்தை யும் உடைத்தாய் ஸர்வர்க்கும் உஜ்ஜீவந ஹேதுவுமா யிருக்கும். (அவர்கள் செய் வியாக்கியைக ளுள்ளதெல்லாம்) என்று அவர் கள்தான் அநேகரா யிருக்கையாலே வியாக்கியைகள் என்றதுவும் அப்படியே யாயிருக்கிறது. அதெல்லாம் மந்தமதிகளுக்கு அவிச் வாஸ ஹேதுவாயிறே யிருப்பது. அவர்கள் செய்த வியாக்கியை கள் இன்னவைகள் என்கிறத்தை இவர்தாமே "பிள்ளான்" என் று தொடங்கி, மேலே பரக்க அருளிச்செய்கிறார். (உள்ளதெல் லாம் வையமறியப் பகர்வோம் வாய்ந்து) அதாவது: "அகல்ஞா லத்தவ ரறிய நெறியெல்லா மெடுத்துரைத்த" என்னுமாபோலே இவர்கள் துர்க்கதி கண்டு, ஒன்றல்லா ஒன்றிலேயாகிலும் ருசிவிச் வாஸங்கள் பிறக்கக்கூடுமென்று அகிலார்த்தங்களையும் அகில சே தநரு மறிந்து உஜ்ஜீவிக்கும்படி சொல்லக்கடவோமென்று ஸங்கல் பித்தருளுகிறார். இவருடைய அமோக ஸங்கல்ப மிருக்கும்படி இதுவாய்த்து. அன்றிக்கே, இன்னாரின்னபடி இந்த ப்ரபந்தத் துக்கு வ்யாக்யாநம் செய்தருளினா ரென்று ஸம்ப்ரதாயங்கள்தான் ஸங்குசிதமாகாமல் அவற்றையெல்லாம் அறிந்தவர்களை ஆதரித்து உஜ்ஜீவிக்கும்படி அருளிச்செய்கிறா ராகவுமாம். (பகர்வோம் வாய்ந்து) என்று அவர்கள் அருளிச்செய்த வ்யாக்யாந விசேஷங் களை ஆபாத ப்ரதீதியாகவன்றிக்கே அதில் அர்த்தத்தில் பாவபந் தமடியாகப் பொருத்த முடையராயாய்த்து இவர் செய்தருளு வது. "பண்டுவலவாரியரும்" என்றுதொடங்கி, "பிறர்க்குக் காதலுடன் கற்பித்து" என்றிறே இவற்றில் இவர்க்குண்டான ஆதராதிசயமிருப்பது.

௩௰௬-ம் பாட்டு.

ஆழ்வார்களையும் அருளிச்செயல்களையும்
தாழ்வா நினைப்பவர்கள் தாம்நரகில்—வீழ்வார்கள்
என்று நினைத்து நெஞ்சே எப்பொழுதும் நீயவர்பால்
சென்றணுகக் கூசித் திரி.

பதவுரை.

ஆழ்வார்களையும்-பதின்மரான ஆழ்வார்களையும், அருளிச்செயல்களையும்-அவர்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களையும், தாழ்வா-தாழ்வாக, நினைப்பவர்கள் தாம்-எண்ணுமவர்கள், நரகில்-நரகத்திலே, வீழ்வார்கள் என்று-விழுமவர்களே யென்று, நினைத்து-எண்ணி, நெஞ்சே-மனமே, நீ—, எப்பொழுதும்-எந்தக்காலத்திலும், அவர்பால்-ஆழ்வார்களையும் அவர்கள் ப்ரபந்தங்களையும் தாழ்வாக நினைக்குமவர்களிடத்தில், சென்று-போய், அணுக-சேருவதற்கு, கூசி-லஜ்ஜித்து, திரி-சஞ்சரிப்பாயாக.

வ்யாக்யாநம்.

முப்பத்தஞ்சாம்பாட்டு.—கீழ் “ஆழ்வார்களேற்றம், அருளிச்செயலேற்றம், தாழ்வாது மின்றியவை தாம்வளர்த்தோர்” என்று அருளிச்செய்து, அவர்களுக்கும் அவர்கள் திவ்யப்ரபந்தத்துக்கும் அதிசயாவஹராக வேண்டியிருக்க, அத்தைச் செய்யாதே தங்கள் அல்பபுத்தியாலே அவமதி பண்ணுமவர்கள் அத:பதிப்பர்கள் ஆகையால் அவர்கள் பரித்யாஜ்ய ரென்னுமத்தைத் தம் திருவுள்ளத்தைக் குறித்து, அருளிச்செய்கிறார். (ஆழ்வார்களையும் அருளிச்செயல்களையும்) என்று தொடங்கி. ஆழ்வார்களாகிறார், நிமக்நரை உயர்த்தத் தாழ இழிந்து, “உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்” என்கிறபடியே, ஸர்வ யோநிகளிலும் அவதரித்தவர்கள். “[Telugu/Grantha script] —யோகிநஸ்ஸர்வ யோநிஷு” என்னக்கடவதிறே. இங்கு யோநியென்று ப்ராஹ்மணாதி ஜாதிகள் எல்லாவற்றையும் நினைக்கிறது. “குலந்தாங்கு சாதிகள் நாலிலும்” என்றிறே அருளிச்செய்தது. (அருளிச்செயல்க)ளாவன: ஸர்வேச்வரனுடைய திவ்ய ஸங்கல்பத்தாலே சங்கரகம்போலே ஸர்வோப ஜீவ்யமாம்படி, ஸர்வ ஸுலபமான த்ராவிட பாஷையாலே “பண்ணிய தமிழ்மாலை” என்னும்படி ஆழ்வார்கள் முகேந அவதரித்ததாய், ஸர்வ ஸுலபனாய் அர்ச்சா ரூபத்தாலே அகில திவ்ய தேசங்களிலும், அநவதிகாதிசய அஸ

ங்க்யேய கல்யாண குணங்களோடே அகில சேதநர்க்கும் ஆச்ரயணீயனாய் எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனை ப்ரதிபாதிக்கக் கடவதாய், "செந்தமிழ்வேதம்" என்னலாம்படியான த்ராவிட வேத ததங்கோபாங்கங்களான திவ்ய ப்ரபந்தங்களென்கை. இவற்றை (தாழ்வாக நினைக்கை) யாவது : ஏவம்வித மாஹாத்ம்ய அநபிஜ்ஞராய், ஜந்ம மாத்ரத்தையும், பாஷா மாத்ரத்தையும் விசாரித்து நிகர்ஷபுத்யா எண்ணுகின்ற நீசரென்னும்படி "సద్య శ్చణ్డాల—ஸத்யச்சண்டால" ரான தாங்கள், "మానసైరన్త్యజాతితాం—மானஸை ரந்த்யஜாதிதாம்" என்னக்கடவதிறே. "த்ரவ்ய பாஷா நிரூபணஸமம் இன்பமாரியி லாராய்ச்சியும்" என்றிறே துல்ய தோஷமாக அருளிச்செய்தது. எண்ணிக்கொண்டு, பிறரறிய வாய்விட்டுச் சொல்லுகையன்றிக்கே ஸ்வகதமாக மநஸ்ஸாலே சிந்தித்தார்களாகில், "உன்னைச் சிந்தையினாலிகழ்ந்த" என்கிறபடியே அதுதான் மஹா அநர்த்தமாய்ப் பர்யவஸிக்கும்படி யாயிறே யிருப்பது. (நினைப்பவர்கள் தாம்) அநுதாப ஹேதுவான மநஸ்ஸாலே அநுதாப சூந்யமான அபராதத்தை ஆர்ஜித்துக் கொள்ளாநிற்கும் ஸாஹஸிகளாயிருக்கிற தாங்கள் (நரகில் வீழ்வார்களென்று) அவர்கள் "న క్షమామి—நக்ஷமாமி" க்கு லக்ஷ்யமாகையாலே "క్షిపామి—க்ஷிபாமி" க்கு விஷயமாய், ரௌரவாதி நரகங்களிலே படிவர்களென்று புத்திபண்ணி, (நெஞ்சே எப்பொழுதும்) ஆழ்வார்களிடங்களிலும் அவர்கள் திவ்ய ஸூக்திகளிடங்களிலும், அதிசயமான ப்ராவண்யத்தை யுடைய மநஸ்ஸே! ஸர்வ காலத்திலும் "நீ அவர்பால் சென்றணுகக் கூசித்திரி" நமக்கு சேஷிகளானவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கிற நீ உஜ்ஜீவநத்துக்கு வழிபார்க்கிறவர்கள் விஷயத்தில் அபசாரத்தாலே தங்களுக்கு அநர்த்தத்தை ஆர்ஜித்துக் கொள்ளுமவர்க ளிடங்களிலே சென்று கிட்ட பயத்தோடே வர்த்தி. ஸ்வரூப நாசகரோடு ஸஹவாஸம் பண்ணுகை அநர்த்த மாகையாலே அவர்களை உபஸத்தி பண்ணக் கூசித்திரி. ஸ்வரூபவர்த்தகரோடு சேர்ந்து போந்த நீ இவர்கள்படியை அறிந்து, தத்ஸஹவாஸம் துஸ்ஸஹ மென்று தூரே வர்த்தித்துப் போர், அவர்களை யறியும்படி எங்ஙனே யென்னில், "[illegible]—ததாபி விபரீதாஶ்சேத் புத்தி ராசாரவர்ஜிதா" என்கிறபடியே அவர்கள் துரநுஷ்டாநத்தாலே

அவர்கள் துர்புத்தியை அநுஸந்தித்து அவர்களைக் கண்டால் ஸர்ப்பாக்நிகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்தித்துப்போரு. அவைகள் தேஹநாசகங்கள், இவர்கள் ஸ்வரூப நாசகரிறே. இத்தால் "ఆనుకూల్యస్య సఙ్కల్ప — ஆநுகூல்ய ஸ்யஸங்கல்ப" த்தோபாதி "ప్రాతికూల్యస్య వర్జన–ப்ராதிகூல்யஸ்ய வர்ஜந"மும் வேணுமென்றதாய்த்து. (வியாக்கியைகளுள்ளதெல்லாம் வையமறியப்பகர்வோம்) என்றிறே அருளிச்செய்தது.

௩௬-ம் பாட்டு.

தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மை யறிவாரார்
அருளிச்செயலை யறிவாரார்—அருள்பெற்ற
நாதமுனி முதலா நந்தேசிகரை யல்லால்
பேதைமனமே யுண்டோ பேசு.

பதவுரை.

தெருள் உற்ற-திவ்யஜ்ஞாநத்தையுடைய, ஆழ்வார்கள்-ஆழ்வார்களுடைய, சீர்மை-வைபவத்தை, அறிவார் ஆர்-அறியுமவர்கள் யார்? அருளிச்செயலை-அவர்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களின் வைபவத்தை, அறிவார் ஆர்—, அருள்பெற்ற-ஆழ்வாருடைய திருவருளையடைந்த, நாதமுனி முதலாம்-ஸ்ரீமந்நாதமுநிகள் முதலான, நம்-நம்முடைய, தேசிகரை அல்லால்-ஆசார்யர்களையல்லாமல், உண்டோ-ஆழ்வார்களுடைய வைபவத்தையும், அருளிச்செயலின் வைபவத்தையும், அறிந்தவர்கள் வேறே யாரேனும் உண்டோ? பேதை மனமே-அறிவிலியான மனமே, பேசு-இதை நீ ஆராய்ந்து சொல்லுவாயாக.

வ்யாக்யாநம்.

முப்பத்தாறும்பாட்டு.—கீழ்ப்பாட்டில் விலக்ஷண ப்ரமாண ப்ரமாத்ரு வைபவ அநபிஜ்ஞர், பரித்யாஜ்யர் என்று அருளிச்செய்த இத்தாலே தத் வைபவாபிஜ்ஞரே ஆதரணீயரென்றதாய்த்து. அப்படி ஆதரணீயரா யிருக்குமவர்கள்தான் ஆரென்ன, வேறுண்டோ, ஸ்ரீமந்நாதாதிகளான நம் ஆசார்யர்களை யொழிய என்கிறார். கீழ்ப்பாட்டிலவர்களும் இப்பாட்டிலவர்களும் நிந்திப்பாரையும் வந்திப்பாரையும் போல்வார். (தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மையறிவாரார்) "மயர்வற மதிநலமருள" ப்பெற்றவை எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே (தெருளுற்ற ஆழ்வார்கள்) என்றதுவே நிரூபகமாக இருக்கிறபடி. "జ్ఞానానన్దమయస్త్వాత్మా శేషోహి పర

ஸூத்ர:—ஜ்ஞாநாநந்த மயஸ்த்வாத்மா சேஷோஹி பரமாத்மந:" என்னுமாபோலே, அவன் ப்ரஸாதத்தாலே "உணர்வு மூயிருமுடம்பும் மற்றுலப்பில்லனவும் பழுதேயாமுணர்வைப் பெற்று உணர்வெனும் பெரும்பதந் தெரிந்து" என்றும், "மெய்ம்மையை மிகவுணர்ந்து" என்றும், "தாமரையாள்கேள்வ னொருவனையே நோக்குமுணர்வு" என்றும் "உணர்ந்த மெய்ஞ்ஞானியர்" என்றும் "ஜ்ஞாநிந ஸ்தத்வதர்சிந:—ஜ்ஞாநிநஸ்தத்வதர்சிந:" என்றும் சொல்லுகிறபடியே தத்வ யதாத்ம்ய தர்சிகளாய் அத்தால் "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்—ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்றும் "அறிவாருயிரானாய்" என்றும் சொல்லுகிறபடியே ஈச்வரனுக்கு தாரகராய் ஜ்ஞாநிநாம் அக்ரேஸரரா யிருக்குமவர்கள். அல்லாதாரடைய அர்த்தகாமாபிபூதராய் உந்மத்தரைப்போலே "இருள்தருமா ஞால" த்திலே மருள்கொண்டோடித் திரியாநிற்க, இவர்கள் "மருளில் வண்சடகோப" னென்னும்படி அஜ்ஞாந கந்த ரஹிதராய் அந்த ஜ்ஞாநபலமாக ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடி வீடு பெற்றவர்களா யிருப்பர்களாய்த்து. ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞாநம் விஞ்சியிறே இவர்கள் விஷயத்திலிருப்பது. தெருளுற்றிருக்கையாவது: அதிலே ஊன்றியிருக்கை யென்றபடி. இப்படி "நாட்டாரோ டியல்வொழிந்து நாரணனை நண்ணி" யிருக்குமவர்கள். (சீர்மை) யாவது: ஆத்மஜ்ஞாநம் கைவந்திருக்குமவர்களிற் காட்டில் "பர்வத பரமாணுவோட்டை வாசி" யை யுடையருமாய் விலக்ஷணமான ஜந்ம வ்ருத்த ஜ்ஞாநங்களை யுடையரா யிருக்கிற வைபவமாய்த்து. அதாவது: "ஆழ்வார்களேற்றம்" என்கிற இடத்தில் சொன்ன ப்ரபாவம். சீர்மை-பெருமை. "திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி" என்கிற இடத்துக்கு "கௌரவ" மென்றிறே அருளிச்செய்தது. "இதுக்கு மூலமென்று தொடங்கி, "பட்டபோது எழுபோது அறியாதிருந்த ப்ரபாவம்" என்றிறே நைநாரும் அருளிச்செய்தார். "விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்றும் "பேராளன் பேரோதும் பெரியோர்" என்றும் "மிக்கசீர்த் தொண்டர்" என்றும் சொல்லும்படியிறே இவர்கள் சீர்மையிருப்பது. அன்றிக்கே (தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மை) யென்று தெருளுற்றிருக்கைதானே இவர்களுக்குச் (சீர்

மை) யென்னவுமாம். இப்படியான இவர்கள் ப்ரபாவத்தைத்
தாம் அருளிச்செய்யப் புகுகிறவர்களை யொழிய அறிவார் ஆர்
என்கிறார். (ஆழ்வார்கள் சீர்மை அறிவார் ஆர்) என்று முதலடி
யிலே ப்ராக்ருத்யாத்ம விவேகம் பண்ணமாட்டாதவர்களோ அவர்
கள் ஜ்ஞாந வைபவத்தை யறிந்தவர்க ளளவுஞ் சென்று அவர்கள்
சீர்மையை அறியப்புகுகிறார்கள். (அறிவாரார்) தேஹாத்மாபி
மாநிகள் தொடக்கமான ப்ரதிகூலரானாரோ அநுகூலராயிருக்கிற
ஆழ்வார்கள் வைபவத்தை அறிந்துபோருவர். ஆகையாலே
(அறிவாரார்) என்று அருமை தோற்ற அருளிச்செய்கிறார்.
அதுக்கு மேலே அவர்களாலே ப்ரணீதங்களாய் ப்ரபத்யர்த்த
ப்ரதிபாதகங்களான (அருளிச்செயலை யறிவாரார்) அவர்கள்
திவ்யஸூக்திகளான திவ்யப்ரபந்தங்களை ப்ரதிபாத்ய அர்த்த
கௌரவத்தை யறிந்து ப்ரதிபத்தி பண்ணி அப்யஸிப்பாரார்?
இவ்விடத்திலும் அருளிச்செயலின் சீர்மையை அறிவாரார் என்று
கூட்டி நிர்வஹிப்பது. கீழும், "ஆழ்வார்களேற்ற மருளிச்செய
லேற்றம்" என்றன்றோ அருளிச்செய்தது. "தெருள் கொள்ளச்
சொன்ன ஓராயிரந் தொடக்கமானவற்றின் வாசியறிந்து ஆதரிக்
கும்போது, ஆழ்வார்கள் அருள்பெற்றவர்களாக வேண்டாவோ?
தங்கள் ஸ்வாதந்த்ர்யாதிகளுக்கு அநுகுணமான ஹர்ஷவச
நாதிகளை ஆதரித்துப்போருமவர்கள், "பாலோடமுதென்ற
வாயிரம்" என்றும், "தொண்டர்க்கமுது" என்றும் "செஞ்
சொலா லெடுத்த தெய்வநன்மாலை" யென்றும், சொல்லுகிற
படியே நிரதிசய போக்யமான திவ்ய ப்ரபந்தங்களை "பத்தராகக்
கூடும் பயிலுமின், உரியதொண்டராக்கும்" என்று இத்தை ஸ்வ
ரூபலாபத்துக் குறுப்பாக அறிந்து ஆதரித்துப் போருவர்களோ?
அவற்றில் ஆழ்வார்கள் பொருளையும் அறிந்து உரைக்குமவரா
யிருந்து இவர்தாம். இனி இவ்வைபவாபிஜ்ஞர்தான் ஆரென்கிறார்.
(அருள்பெற்ற நாதமுனி முதலா நந்தேசிகரை யல்லால்) அவர்க
ளாகிறார் "அருள்மாறன்" அருளைப்பெற்ற ஸ்ரீமந்நாதமுனி தொ
டக்கமாக நடந்து செல்லுகிற ஆசார்யபதஸ்தராய், அருளிச்செ
யலை ஆதரித்து ப்ரவர்த்திப்பித்துக்கொண்டு போருமவர்கள்தான்,
"[illegible]—நாதம் பங்கஜநேத்ர" என்று தொடங்கி, "[illegible]
[illegible]—தேவராஜ:" என்னுமளவும் தர்சிப்பிக்கப்பட்ட தேசிகர்

கள். "தேவப்பெருமாள் கைக்கொண்டருளும் திருமலையாழ்வா" ரிறே தம்முடைய தேசிகர். இவர்களை, (நந்தேசிகர்) என்கிறது இவர்களே நாதரென்றிருக்கும் தம்முடைய ப்ரதிபத்தி விசேஷத்தாலே. (அருள்பெற்ற நாதமுனி) ஆழ்வார் அருளையாதல் அதுக்கடியான மன்னனுருடைய அருளையாதல் பெற்றவரென்னவுமாம். இப்படி பகவத் பாகவதர்களுடைய க்ருபைக்கு இலக்கானவர்களிறே ஆழ்வார்கள் சீர்மையையும் அருளிச்செயலின் சீர்மையையும், அறிந்துபோருவார். அல்லாதவர்களுக்கு இத்தை அறியத்தரமோ? (பேதை மனமே யுண்டோ பேசு) முக்தமான மநஸ்ஸே இப்படி விதக்தரான இவர்களை யொழியவுண்டோ? சொல்லிக்காண். இவ்வர்த்தம் இல்லையே என்றபடி. ஆகையால் திருவுள்ளமறிய ஒருவருமில்லை யென்கிறார். இத்தால் ஸ்வயத்நத்தாலே அறியவொண்ணாதது அயத்நத்தாலே அறியலாயிருக்கும் அருள்பெற்றவர்களுக் கென்றதாய்த்து.

௩௯-ம் பாட்டு.

ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர்
ஏராரெதிராச ரின்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க் கெல்லா மாரியர்காள் கூறுமென்று
பேசிவரம்பறுத்தார் பின்.

பதவுரை.

முன்னோர்-பூர்வாசார்யர்கள், ஓராண்வழியாய்-ஒருபுருஷ க்ரமமாக, (ஒருவருக்குப் பின்னொருவராக) உபதேசித்தார்-உபதேசித்துக்கொண்டு வந்தார்கள், பின்-பிற்பாடு, ஏர் ஆர்-அழகுபொருந்திய, எதிராசர்-எம்பெருமானார், இன் அருளால்-தம் இனிய அருளாலே, பார் உலகில்-பூமியிலே, ஆசை உடையோர்க்கு எல்லாம்-இதில் விருப்ப முடையவர்களுக்கெலலாம், ஆரியர்காள்-ஆசாரியர்களே! கூறும் என்று-நீங்கள் உபதேசியுங்களென்று, பேசி-நியமித்து, வரம்பு-ஓராண்வழியா யுபதேசிக்கும் வரம்பை, அறுத்தார்-நீக்கியருளினார்.

வ்யாக்யாநம்.

முப்பத்தேழாம்பாட்டு.—இனி ஸ்ரீமந்நாதமுநிகள் தொடக்கமானாராலே அறிந்து ஆதரிக்கப்படுமதான அருளிச்செயலில் தாத்பர்யமான ப்ரபத்யர்த்தமானது, ஓராண்வழியாய் நடந்து செல்ல, அத்தை எம்பெருமானார் தம்முடைய நிரவதிக க்ருபை

யாலே பேசி வரம்பறுத்து, வழியாக்கி நடத்தியருளினபடியை அருளிச்செய்கிறார். (ஓராண்வழியா யுபதேசித்தார்) என்று தொடங்கி. ப்ரபத்யர்த்தமென்ன, திருவாய்மொழியினுடைய அர்த்தமென்ன, பேதமில்லாமலே திருவாய்மொழியை ப்ரவர்த்திப்பிப்பாராக ப்ரபத்யர்த்தத்தை முந்துற அருளிச்செய்தபடி சொல்லுகிறது. "த்வயார்த்தம் தீர்க்கசரணாகதி யென்றது ஸாரஸங்க்ரஹத்திலே" என்றிறே அருளிச்செய்தது. த்வயத்தையும் திருவாய்மொழியையும் யாவனொருவன் உபதேசிக்கிறான், அவனுக்கிறே ஆசார்யத்வ பூர்த்தியுள்ளதென்று அருளிச்செய்வர்கள். பெரிய முதலியார்க்கு "ஸமந்த்ரராஜ த்வயமாஹயஸ்ய—ஸமந்த்ரராஜ த்வயமாஹயஸ்ய" என்று த்வய பூர்வகமாயிறே ஆழ்வார் திருவாய்மொழி முதலான ப்ரபந்தங்களை ப்ரஸாதித்தருளினதும். அப்படியே உபயத்தையும் வர்த்திப்பித்தருளுமவரிறே எம்பெருமானார். ஆகையால் இத்தை முந்துற ப்ரவர்த்திப்பித்தருளினார். த்வயாதிகாரிகளான பின்பிறே திருவாய்மொழியை அதிகரித்துப் பேறுவது. (ஓராண்வழியாய்) ஒரொரு மஹாபுருஷர்களைக் குறித்து உபதேசித்திறே முன்புள்ளார் இந்த மார்க்கத்தை நடத்திப்போந்தது. (முன்னோர்) அவர்கள்தான் எம்பெருமானார்க்கு அவ்வருகுண்டான அருள்பெற்ற நாதமுனி முதலான ஆசார்யர்கள். அவர்கள்தாம் அர்த்த கௌரவத்தைப் பார்த்திறே மறைத்து உபதேசித்து ரக்ஷித்துவந்தது. நம்பிதாமும் சூழுரவுகொண்டிறே இவர்க்கு இவ்வர்த்தத்தை உபதேசித்தருளினார். (ஏராரெதிராச ரின்னருளால்) அப்படியன்றிக்கே யதிகளுக்கு நாதராயிருக்கிற எம்பெருமானார் அர்த்தத்தின் சீர்மையைப் பாராதே இவர்கள் அநர்த்தத்தையே பார்த்து, அநுக்ரஹைக சீலமான அருளாலே யாய்த்து இப்படி வெளியிட்டது. (ஏராரெதிராசர்) அதாவது: "ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம்வ்யாசஷ்டே—ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம்வ்யாசஷ்டே" என்று "ஏராரும் செய்யவடிவு" என்றும் சொல்லும்படியான தம்முடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் ப்ரகாசிக்கிற ஸௌந்தர்ய பூர்த்தியாலே ஸர்வரையும் வசீகரிக்கும்படியான எம்பெருமானார், ஸம்ஸாரிகள் துர்க்கதிகண்டு பொறுக்கமாட்டாதே தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலேயாய்த்து இப்படி உபதேசித்தருளிற்று. இவர்தாம் ரூபகுணத்தாலும் ஆத்ம

குணத்தாலுமாய்த்து ஜகத்தைத் திருத்தி ரக்ஷித்துப் போந்தது. இதுதான் ஆர் அதிகாரிகளாக என்னில், (பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம்) இந்த பூமியிலே இருந்ததே குடியாக ஆசாலேசமுடையவர்களுக்கெல்லாம் (ஆசையுடையோர்) "நிதியுடையோர்" என்னுமாபோலே "பத்துடையடியவர்க்கு" என்னக்கடவதிறே. பாருலகில் ஆசையுடையோர்தான் அரிதாயிறே யிருப்பது. ஆகையால் அவர்களுடைய ஜந்ம வ்ருத்த ஜ்ஞாநங்களாலுண்டான உத்கர்ஷ அபகர்ஷங்கள் பாராதே ஆபிமுக்ய ஸூசகமான ருசியையே பார்த்து, நான் உங்களுக்குச் சொன்ன பரமார்த்தத்தை நீங்கள் அவர்களுக்குச் சொல்லுங்கோள்; "மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம் மாநிலத் தெவ்வுயிர்க்கும்" என்னுமவருடைய அடிபணிந்த ஆகாரத்தாலே (பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம்) என்றருளிச்செய்கிறது. (ஆரியர்காள்) "[illegible]—கார்யங்கருணமார்யேண" என்கிறபடியே நீங்களும் கேவல க்ருபையாலே உபதேசித்துப் போருங்கோள். தாம் இன்னருளாலேயிறே பேசி வரம்பறுக்கிறது. அப்படியே அவர்களையும் உபதேசிக்கும்படி அருளிச்செய்கிறார். (ஆரியர்காள்) ஆரியர்காளென்று அப்போது தம்முடைய ஸந்நிதியிலே தெற்காழ்வான் திருமுன்பே தம் உபதேசம் பெற்றிருக்குமவர்களெல்லாரையும் பார்த்து நம்மைப்போலே நீங்களும் ஆசாலேசமாத்ரத்தையே பற்றாசாகக் கொண்டு, ஸர்வர்க்கும் உபதேசியுங்கோளென்று, தடைவிடுகிறார். அன்றிக்கே, (ஆரியர்காள்) என்று ஆசார்ய பதஸ்தராகத் தாம் அபிமாநித்தருளின ஆழ்வான் முதலான எழுபத்துநாலு முதலிகளையாகவுமாம். இத்தால் ஒரு பெருமதிப்பனான ஆசார்யனுடனே கேட்டாரடைய உபதேஷ்டாக்களாகவும் ச்ரத்தையுடையவர்கள் உபதேச்யராகவும் கடவர்களென்னும் அர்த்தஞ் சொல்லிற்று. (ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின்) முன்புள்ளார் இத்தை "[illegible]—இதந்தேநாதபஸ்காய" இத்யாதிப்படியே ஒருவர்க்கும் உபதேசியாதே உங்கள் அளவுகளிலே அநுஸந்தித்துப் போருங்கோளென்று, மறைத்துப் போந்தார்கள். பின்பு இவர் பரஸம்ருத்தியைக பரதையாலே இத்தை ப்ரஸித்தமாம்படி சொல்லுங்கோளென்று முக்தகண்டமாக அருளிச்செய்கிறார். (முன்னோர் வரம்

பறுதத்தார் பின்) முன்பு முதலிகளாலே கட்டின வரம்பைப் பெருமாள் அடைத்துத் துடைத்தாற்போலே இவரும் அவர்களாலே கட்டின மர்யாதையையும் அமர்யாதமாகப் பண்ணியருளினார். மர்யாதாஸ்தாபகரிறே இப்படி செய்தது. "రామానుజస్య కరుణా వరుణాలయస్య—ராமாநுஜஸ்ய கருணா வருணாலயஸ்ய" என்னும்படியான க்ருபைக்கடல் கரையழியப் பெருகினபடி. அதாவது ஓரடிப்பாடாயிருக்கிற வழிகளைப் பெருவழியாக்கி நடத்தும் ராஜாக்களைப்போலே (ஓராண்வழியாய்) நடந்த அடிப்பாட்டை யதிராஜரான இவரும் தம்முடைய இன்னருளாலே ஆசையுடையோர்க் கெல்லாம் கூறுமென்று பெருவழியாக்கித் தடையறும்படி, நடத்தியருளினார். "శ్రీమాన్ రాజపథంచ కారయయా రామానుజార్యో మునిః—ஸ்ரீமாந்ராஜபதஞ்ச காரதயயா ராமாநுஜார்யோமுநி:" என்னக்கடவதிறே. தாம் "ராமாநுஜப் பெருவழி வெட்டி" என்னும்படி நடத்தினாற்போலேயாய்த்து இதுவும். இவர்தாம் "శ్రీవిష్ణులోక మణిమంటప మార్గదాయి—ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டப மார்க்கதாயி" யிறே.

௩அ-ம் பாட்டு.

எம்பெருமானார் தரிசனமென்றேயிதுக்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச்செய லறிகைக்கா

பதவுரை.

இந்த தரிசனத்தை-இந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை, எம்பெருமானார்-ஸ்ரீபாஷ்யகாரர், வளர்த்த-விர்த்தி செய்த, அந்தச்செயல்-அந்தக் காரியத்தை, அம்புவியோர்-பூமியிலுள்ளவர்கள், அறிகைக்கா-அறிந்து கொள்வதற்காக, எம்பெருமானார் தரிசனம் என்றே—, இதுக்கு-இந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்துக்கு, நம்பெருமாள்-திருவரங்கத் தெம்பெருமான், பேர் இட்டு-திருநாம மாக்கி, நாட்டிவைத்தார்-ஸ்தாபித்து வைத்தார்.

வ்யாக்யாநம்.

முப்பத்தெட்டாம்பாட்டு.—ப்ரபத்தி மார்க்கத்தை ப்ரவர்த்திப்பித்தருளியும், தத்ரக்ஷணார்த்தமாக ஸ்ரீபாஷ்யாதிகளைப் பண்

ணியருளியும், அத்தாலே நிரபாயமாக இத்தர்சநத்தை எம்பெருமானார், வர்த்திப்பித்தமையும் ஸர்வரும் அறியும்படி நம்பெருமாள் அவருடைய தர்சநமென்று அபிதாநமாக்கி ஸ்தாபித்தபடியையும் அருளிச்செய்கிறார். (எம்பெருமானார் தரிசனம்) என்று தொடங்கி. நாதயாமுநர்களும் தர்சந ப்ரவர்த்தகராயிருக்க, இவருடைய பரஸம்ருத்யைக ப்ரயோஜநத்தையே பார்த்து, (எம்பெருமானார் தரிசனம்) என்றாய்த்து நம்பெருமாள் நாம நிர்த்தேசம் பண்ணி ஸ்தாபித்தருளினபடி. "మర్యాదానాంచ లోకస్య కర్తా కారయితా సః—மர்யாதாநாம்ச லோகஸ்ய கர்த்தா காரயிதா சஸ:" என்னக்கடவதிறே. அதாவது திருக்கோட்டியூர் நம்பிபாடே பலகால் நடந்து பெற்ற பரமார்த்தத்தைத் தம்மை யழியமாறி, ஸூரிதாநம் பண்ணி மீண்டெழுந்தருளின அநந்தரம், "நமக்காவாரை நாமே தேடிக்கொள்ளுவோம்" என்று அதுக்கு விஷயமான இவரை நம்பெருமாள், மிகவும் விசேஷாபிதாநம் பண்ணியருளி, இன்று தொடங்கி, "எம்பெருமானார் தர்சனம் என்னுங்கோள்" என்று ஜகத்திலே ப்ரதிஷ்டிப்பித்தருளினாரென்கை. அன்றிக்கே (நாட்டுவித்தார்) என்று பாடமானபோது இவர் ஆஜ்ஞாதிலங்கநம் பண்ணி, அமர்யாதமாக ப்ரபத்தி ப்ரதாநம் பண்ணின ப்ரபாவத்தைக் கண்டு, திருக்கோட்டியூர் நம்பியும் அப்படியே "எம்பெருமானார்" என்று திருநாமம் சாத்தி "இன்றுமுதல் எம்பெருமானார் தர்சநம் என்னுங்கோ"ளென்று அருளிச்செய்து, ஆதரித்துப் போருகையாலே அந்த நம்பியுடனே இத்தை வெளியிடும்படி அருளிச்செய்த நம்பெருமாள் தாமே தத்வாரா இத்தை ஸ்தாபித்தருளினார் என்னவுமாம். இவர்தாம் "ஆளுமாளார்" என்று இவனுடைய தனிமையைத் தீர்க்கைக்கும் ஸம்ஸாரிகள் தனிமையைத் தீர்க்கைக்குமிறே இப்படி உபதேசித்துப் போந்தது. இப்படி நம்பெருமாள் தர்சந ஸ்தாபநம் பண்ணுகைக்கு அடியென் என்னில், (அம்புவியோர் இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த அந்தச்செயலறிகைக்காக) என்கிறார். எம்பெருமானார் அபிதாந விசேஷத்தாலே அழகியதாயிருக்கிற பூமியிலுண்டானவர்களெல்லாம் பரமவைதிகமுமாய், அதஏவ நிரவத்யமுமான இந்தத் தர்சநத்தை (எம்பெருமானார் வளர்த்த) தம் உபதேசமுகத்தாலே வர்த்திப்பித்துக்கொண்டு போந்த அந்தச் செயலறி

கைக்காக. அந்தச் செயலை அம்புவியோர் அறிந்து உஜ்ஜீவிக் கைக்காக. அதாவது, அவர் ஜகதுபகாரமாகச் செய்த அந்த க்ருத்யத்தை ஜகத்திலுண்டானவர்கள் எல்லாரும் அறிந்து உஜ் ஜீவிக்கும்படி, (நம்பெருமாள் பேரிட்டு காட்டிவைத்தார்) என் கை. இத்தால் இவருடைய தர்சந ப்ரவர்த்தகத்வம் ப்ரபத்தி சாஸ்த்ரமுகேந என்னுமது ப்ரஸித்தமாக ஸ்தாபிக்கப்பட்ட தாய்த்து.

௩௯-ம் பாட்டு.

பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை
தெள்ளார் வடக்குத் திருவீதிப்—பிள்ளை
மணவாளயோகி திருவாய்மொழியைக் காத்த
குணவாளரென்று நெஞ்சே கூறு.

பதவுரை.

பிள்ளான்-திருக்குருகைப்பிரான் பிள்ளானும், நஞ்சீயர்-நஞ்ஜீயரும், பெரிய வாச்சான்பிள்ளை-பெரிய வாச்சான்பிள்ளையும், தெள் ஆர்-தெளி வையுடைய, வடக்குத்திரு வீதிப்பிள்ளை-வடக்குத்திரு வீதிப்பிள்ளையும், மணவாளயோகி-வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயரும், ஆகிய இவர் கள், திருவாய்மொழியை-திருவாய்மொழி ப்ரபந்தத்தை, காத்த-தங்கள் வ்யாக்யாநங்களாலே காத்தருளின, குணவாளர் என்று-மஹா குணமுடை யவர்களென்று, நெஞ்சே-மனமே, கூறு-நீ சொல்லுவாயாக.

வ்யாக்யாநம்.

முப்பத்தொன்பதாம்பாட்டு.—இனி த்வயார்த்தமான திரு வாய்மொழியை "ஈன்ற முதற்றாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாயிராமாநுசன்" என்னும்படி இத்தை வர்த்திப் பித்துக்கொண்டு போந்தவராகையாலே தத் ப்ரஸாதமடியாகத் ததபிப்ராயமான அர்த்தங்களாலே அருளிச்செயலில் ஸாரமான திருவாய்மொழியை வ்யாக்யாந நிர்மாண முகேந ரக்ஷித்துப் போந்தவர்கள் பிள்ளான்முதலான ஆசார்யர்கள் என்கிறார். (பிள் ளான்) என்றுதொடங்கி. பிள்ளானென்கிறார், திருக்கோட்டியூர் நம்பி செய்தருளின மஹோபகாரத்தை அநுஸந்தித்து, அதில் க்ருதஜ்ஞராயிருக்கும் எம்பெருமானாராலே புத்ராபிமாநம் பண் ணப்பட்டு, திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்று திருநாமஞ் சாத்த, இப்படி நம்பி தன் நாமமான ஏற்றத்தையுடையராய், அத்

தாலே அல்லாதார்க்கு அவரோபாதி உத்தேச்யராய் அவரிடத்தி லே அகில வேதாந்த தாத்பர்யங்களையும் அதிகரித்து ஸகல சாஸ்த்ர வித்தமராய் ஸம்ஸ்க்ருத த்ராவிட ரூபமான உபயவேதாந் தத்துக்கும் ப்ரவர்த்தகரா யிருப்பாரொருவர். (நஞ்சீயர்) அவ ராகிறார், ஸர்வஜ்ஞரான கூரத்தாழ்வான் திருக்குமாரராய் ஸகல சாஸ்த்ர வித்தமரான பட்டராலே "நம்முடைய ஜீயர்" என்று அபிமானிக்கப்பட்டு, அவர் ஸந்நிதியிலே ஸகலார்த்தங்களையும் ஸம் சய விபர்யயமறக் கேட்டு, பின்பு நூறுரு திருவாய்மொழி நிர்வ ஹித்து அத்தாலே சதாபிஷேகம் பண்ணப்பெற்றவராய்த்து. (பெரியவாச்சான் பிள்ளை) அவராகிறார், ஆழ்வாருடைய திருவவ தாரத்தோபாதியான நம்பிள்ளை திருவடிகளிலே ஆச்ரயித்து, தத் ஸேவைக்கு விருத்தங்களான ததிதர புருஷார்த்தங்களை யெல் லாம் ஶ்வாஸநமாகப் பரித்யஜித்து, ஸகலார்த்தங்களையும் அவர் ஸந்நிதியிலே நன்றாகக் கற்றுக் கேட்டு அவர்க்கு அத்யந்தம் அபி மதராயிருக்குமவர். (தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை) திரு வாய்மொழியில் அர்த்தங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படியான மிக்க தெளிவையுடையராய் அத்தாலே "ஸக்ருஷ்ணத்வ யௌ" என்னும்படி, பெரியவாச்சான் பிள்ளையோடு ஒரு கோ வையாய் நம்பிள்ளை திருவடிகளுக்கு அத்யந்தம் அந்தரங்கராய் அதிக்ருதபரமார்த்தராய் அபிமாந நிஷ்டாக்ரகண்யராயிருக்கு மவர். (மணவாளயோகி) அவராகிறார், அபயப்ரதராஜபுத்ர ரென்னும்படி, பெரியவாச்சான் பிள்ளைக்குக் குமாரரான நைநா ராச்சாம்பிள்ளை திருவடிகளை "ஸதாஸேவை ச்வர்யாத்" என்னும்படி பழுக்க ஸேவித்து, தர்சந ரஹஸ்ய தாத்பர்யார்த்தங்களையும் திவ்ய ப்ரபந்த தாத்பர்யார்த்தங்களையும் அவர் உபதேசமுகத்தாலே லபித்து, மற்றும் ஸகல சாஸ்த்ரங்களை யும் அவர் ஸந்நிதியிலே ஸாங்கமாக அதிகரித்து இதர தர்சந நிர ஸநத்துக்குறுப்பாக, "வாதிகேஸரி" என்னும்படி வாக்வைகரி யை யுடையராயிருக்குமவர். ஏவம்விதரான இவர்கள் (திருவாய் மொழியைக்காத்த) அதாவது, ப்ரமாண ச்ரேஷ்டமான திருவாய் மொழியை அல்ப மதிகளால் அவிசால்யமாம்படி ஸ்வஸ்வ வ்யாக் யாநங்களாலே ஸுரக்ஷிதமாக ரக்ஷித்த மஹா குணத்தையுடைய வர்களென்றபடி. அவர்கள்தான் ஆறாயிரப்படி தொடங்கி, பன்

னீராயிரப்படி யிறுதியாக வ்யாக்யாநம் பண்ணியருளினபடியை மேலே இவர்தாமே வ்யக்தமாக அருளிச்செய்கிருர். (காத்தகுண வாளரென்று நெஞ்சே கூறு) இப்படி வ்யாக்யாந விசேஷங்களாலே ரக்ஷித்துப்போந்த குணத்தை யுடையவர்கள் என்று அக்குணங்களிலே வணங்கியிருக்கிற நெஞ்சே! அக்குணங்களடியாக வுண்டான அவர்கள் வைபவத்தை உன் ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக "ꣳதுவாசவதி—தத்வாசாவததி" என்னும்படி சொல்லு. மநஸ்ஸுக்கு த்வாரமாயிறே மற்றைக் கரணங்கள் தான் இருப்பது. அந்த உண்மையைப்பற்ற (கூறு) என்கிருர்.

௪0-ம் பாட்டு.

முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்
அந்த வியாக்கியைக ளன்ருகில்—அந்தோ
திருவாய்மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்க வல்ல
குருவாரிக் காலநெஞ்சே கூறு.

பதவுரை.

முந்துறவே-முற்படும்படியாகவே, பிள்ளான் முதலானோர்-திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான ஐவரும், செய்தருளும்-செய்தருளிய, அந்த—, வியாக்கியைகள்-வ்யாக்யாநங்கள், அன்ருகில்-அல்லாவிட்டால், அந்தோ-ஐயோ! திருவாய்மொழிப் பொருளை-திருவாய் மொழியின் அர்த்த விசேஷங்களை, தேர்ந்து-தெளிந்து, உரைக்கவல்ல-சொல்லவல்லவரான, குரு-ஆசாரியரானோர், இக்காலம்-இந்தக் காலத்தில், ஆர்-யார் ஆவார்கள், நெஞ்சே-மனமே, கூறு-நீ இதைச்சொல்லுவாயாக.

வ்யாக்யாநம்.

நாற்பதாம்பாட்டு.—முற்காலத்திலே அவர்கள் செய்த வ்யாக்யாநங்களின் அருமையை வ்யதிரேக முகத்தாலே தம் திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிருர். (முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்) என்று. அதாவது "ஜ்ஞாநாந்யபி பவிஷ்யந்தி—ஜ்ஞாநாங்யல்பீ பவிஷ்யந்தி" என்று ஸம்ப்ரதாயங்கள் ஸங்குசித மாவதற்கு முன்னே, ஏற்கவே, முற்காலே, பிள்ளான் முதலாக, ஜீயரளவாக வுண்டான ஐந்தாசார்யர்களும் செய்தருளும், (அந்த வியாக்கியைகள்) அந்த விலக்ஷணமான வ்யாக்யாநங்களானவைகள். (அன்ருகில்) அப்படி அவர்களாலே செய்யப்பெருவிடில், அன்றென்றது-அல்லதென்றபடி. அக்

காலத்திலே திர்க்கதர்சிகளான அவர்களாலே வ்யாக்யாநம் பண்ணுதொழியில், இன்று நாமிருந்து என்படக்கடவோமென்று விஷண்ணராகிறார். (அந்தோ) "నచేద్రామానుజేత్యేషా చతురాచతురక్షరీ కామవస్థాంప్రపద్యన్తే జన్తవోహంతమాదృశః—நசேத் ராமாநுஜேத் யேஷா சதுரா சதுராக்ஷரீ காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோஹந்த மாத்ருச:" என்னுமாபோலே. (திருவாய் மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்க வல்ல குருவா ரிக்கால நெஞ்சே கூறு) திருவாய்மொழிப் பொருளைத் தேர்ந்துரைக்கும்போது, தெள்ளார் ஞானமுடையராக வேண்டாவோ? இத்தை இப்போது நிரூபித்துச் சொல்லவல்ல வெளிச்செறிப்பை யுடையாரார்? அவர்களை எங்கே காண்பது? ஏதத் காலத்திலவர்களுடைய ஜ்ஞாநமாந்த்யத்தையும் "ద్రావిడ వేదసాగరం—த்ராவிட வேதஸாகரம்" என்னும்படி, "அளவியன்ற வந்தாதி" யான இதினுடைய அர்த்த காம்பீர்யத்தையும் கண்டு, இத்தை யறிந்து இதுக்கு அநுகுணமாக வ்யாக்யாநம் பண்ணவல்ல சக்தியை யுடையார் ஆர் என்கிறார். (தேர்ந்துரைக்க வல்ல குருவார்) இவர்கள் செய்த வ்யாக்யாநங்களின் சீர்மையறிந்து, "அறியக்கற்று வல்லார்" என்னுமாபோலே அத்தை ப்ரவர்த்திப்பித்துப் போருவார்தாம் ஒரொருத்தரென்னும்படி அபூர்வராயிருக்க, ஆழ்வார் திருவுள்ளத்தை அடியொற்றி, அதுக்கு அநுகுணமாக வ்யாக்யாநம் பண்ணுவார் அரிதாயிறே யிருப்பது. (உரைக்கவல்ல) என்கையாலே, சப்தார்த்த ஸந்தர்ப்ப கரணத்தில் அருமையிருக்கிறபடி. (உரைக்க வல்ல குருவா ரிக்காலம்) அர்த்தாபஹாரம் பண்ணுகிற காலத்திலே அர்த்த ப்ரகாசகரைக் கிட்டுமோ? உண்டாகிலும் தன் கைப்பொருள் கொண்டு தப்பியோடுங் காலமிறே. "பிறர்நன் பொருளை" யிறே அபஹரித்துப் போருகிறது. "கடலளவாய திசையெட்டினுள்ளுங் கலியிருளே மிடைதருங் காலத்து" என்னும்படி, க்ரூரமான காலத்திலே கூரிய மெய்ஞ்ஞானத்தாலே திருவாய்மொழிப் பொருளை ஓர்ந்து உணர்ந்து உரைப்பார் ஒருவரைக் கிட்டுமோ? (நெஞ்சே கூறு) பாஷ்யகாரர் காலந்தொடங்கி உண்டான திருவாய்மொழி ஆசார்யர்கள் இடங்களிலே பவ்யமாய்ப் போருகிற நெஞ்சே! இவர்களைப்போலே ஏதத் தர்த்த தர்சிகளாய்ப் போருமவர்களை இக்காலத்திலே இன்று

ரென்று ஒருவரையாகிலும் சொல்லிக்காண். ஆகையால் அவர்கள் அலட்'யராயிறே யிருப்பது.

சக-ம் பாட்டு.

தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான்
பிள்ளா னெதிராசர் பேரருளால்—உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப்பொருளை யன்றுரைத்த
தின்பமிகு மாறுயிரம்.

பதவுரை.

தெள் ஆரும்-தெளிவு பொருந்திய, ஞானம்-ஞானத்தையுடைய, திருக்குருகைப்பிரான் பிள்ளான்—, எதிராசர்-ஸ்ரீபாஷ்யகாரருடைய, பேர்-விசேஷித்ததான, அருளால்-கடாக்ஷத்தாலே, உள்-தமது திருவுள்ளத்தில், ஆரும்-நிறைந்திருக்கும், அன்புடனே-பக்தியுடனே, மாறன்-நம்மாழ்வார் அருளிச்செய்த, மறை-த்ராவிட வேதமான திருவாய்மொழியின், பொருளை-அர்த்தவிசேஷங்களை, அன்று-அக்காலத்திலே, உரைத்தது-அருளிச்செய்தது, இன்பம்-இனிமை, மிகும்-அதிகரித்திருக்கும், ஆறுயிரம்-ஆறுயிரப்படி வ்யாக்யாந மாகும்.

வ்யாக்யாநம்.

நாற்பத்தொன்றும்பாட்டு.—கீழே "பிள்ளா னஞ்சியர்" என்று தொடங்கி, "திருவாய்மொழியைக் காத்த குணவாளர்" என்று அவர்கள் அருளிச்செய்த வ்யாக்யாந பஞ்சக ஸங்க்யையும் தனித்தனியே அருளிச்செய்வாராய் அதில் இப்பாட்டில், "குருகைப்பிரான் கன்பா மெதிராசர்" என்னும்படி ப்ரபந்நஜநகூடஸ்தரான எம்பெருமானாருடைய நிரவதிக க்ருபையாலே திருக்குருகைப் பிரான்பிள்ளான் திருவாய்மொழிக்குப் பண்ணியருளின வ்யாக்யாந ஸங்க்யை ஷட்ஸஹஸ்ர மென்கிறார். (தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான் பிள்ளான்) திருவாய்மொழிக்கு ப்ரதம வ்யாக்யாநம் பண்ணுகைக்கு அநுகுணமாக விவேக பரிபூர்ணமான வெளிச்செறிப்பை யுடையரான திருக்குருகைப்பிரான் பிளளான். அன்றிக்கே தெளிவு மிக்கிருந்துள்ள ஞானத்தை யுடையவ ரென்னவுமாம். (எதிராசர் பேரருளால்) "உன் பெருங் கருணைதன்னை" என்னும்படியான எம்பெருமானாருடைய நிரவதிக க்ருபையாலே, இதுவாய்த்து இவர் வ்யாக்யாநம் பண்ணுகைக்கடி. (உள்ளாரு மன்புடனே) ஜ்யாதி லாபாதி

களா லன்றிக்கே திருவாய்மொழி விஷயமாக வுண்டான நிரவதிக ப்ரேமத்தாலே யென்னுதல். சேதநர் பக்கல் நிரவதிக ஸ்நேஹத் தாலே யென்னுதல். (மாறன் மறைப்பொருளை) "அருளினனவ் வருமறையின் பொருள்" என்கிறபடியே ஆழ்வாருடையதான வேதரூபமாய், ஸ்வார்த்த நிர்ணயத்தில், அல்லாதார்க்கு அருமை தட்டி யிருப்பதான திருவாய்மொழியின் அர்த்தத்தை அருளிச் செய்தது ஆறாயிரமாய்த்து. "அவாவிலந்தாதி" க்கு அநுகுண மான அன்புடனேயாய்த்து உரைத்தது. (அன்றுரைத்தது) அதாவது, பாஷ்யகாரர் ஸந்நிதியிலே கேட்டு மநநம் பண்ணி, அர்த்த வைசத்யம் பிறந்திருக்கிற அக்காலத்திலேயாய்த்து இவர் வ்யாக் யாநம் பண்ணிற்றென்கை. அதின் ஸங்க்யை எவ்வளவென்னில், (இன்பமிகு மாறாயிரம்) "அமர்சுவை யாயிரம்" என்னும்படி ரஸ கநமாயிருப்பதாய் அடியார்க்கு இன்பமாரியாய் இருக்கிற இதுக்கு. (இன்பமிகுமாறாயிர) மாய்த்து இவர் அருளிச்செய்தது. இதுவும் அப்படியேயாயிருக்கை மூலத்தைப்பற்றி வருகிற ரஸ மிறே. அன்புடனே பண்ணுகையாலே இதுவும் இன்பமிகுந் திறே யிருப்பது, இவர்தாம் பௌராணிக புத்ரராகையாலே யாய்த்து, புராணரத்ந ஸங்க்யையிலே யருளிச்செய்தது.

சஉ-ம் பாட்டு.

தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி
நஞ்சீயர் தாம்பட்டர் நல்லருளால்—எஞ்சாத
ஆர்வமுடன் மாறன் மறைப்பொருளை யாய்ந்துரைத்த
தேரொன்பதினாயிரம்.

பதவுரை.

தஞ்சீரை-தம்முடைய வைபவத்தை, ஞானியர்கள் தாம்-தத்வஜ்ஞாந முடையவர்கள், புகழும்-புகழக்கடவரான, வேதாந்தி-வேதாந்தியான, நஞ் சீயர் தாம்-நஞ்சீயரானவர், பட்டர்-ஸ்ரீபராசர பட்டருடைய, நல் அரு ளால்-நல்ல க்ருபையாலே, எஞ்சாத-குறையாத, ஆர்வமுடன்-பக்தியுட னே, மாறன் மறைப்பொருளை—, ஆய்ந்து-ஆராய்ந்து, உரைத்தது-அருளிச் செய்தது, ஏர்-அழகிய, ஒன்பதினாயிரம்-ஒன்பதினாயிரப்படி வ்யாக்யாந மாகும்.

வ்யாக்யாநம்.

நாற்பத்திரண்டாம்பாட்டு.—அதின்பின்பு, பெரிய பட்டரு டைய க்ருபையாலே விசேஷித்து, நஞ்சீயர், ஆறாயிரத்திற் காட்

டிலும் அரைவாசி நடத்திருக்கும்படி திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரமாக ஒரு வ்யாக்யாநம் செய்தருளினபடியை அருளிச் செய்கிறார். (நஞ்சீரை) இத்யாதியால். அதாவது திருவாய்மொழிக்கு வ்யாக்யாநம் பண்ணுகைக் கீடான தம்முடைய ஜ்ஞாநாதி குணங்களை ஜ்ஞாதாக்கள் எல்லாரும் ஸ்துதிக்கும்படியாய் இருக்குமவ ரென்னுதல். அன்றிக்கே, தம்முடைய ஜகந்மங்கள ஹேதுவாயிருக்கிற ஆசார்யாநுவர்த்தநாதிகளாகிற ஆத்ம குணங்களை “ஆசார்யவாந்” என்னும்படி, ஆசார்ய பரதந்த்ரரா யிருக்கிற விசேஷத்தாலே ஜ்ஞாதாக்க ளெல்லாருங் கொண்டாடும்படியான வைபவத்தை யுடையராய், வேதாந்திக ளென்று நிரூபகமாயிருக்கிற நஞ்சியர் என்னுதலாகவுமாம். இப்போது (வேதாந்தி நஞ்சீயர்) என்கிற விசேஷணத்தாலே, பட்டர், நெடுந்தூரம் எழுந்தருளி, திருத்துகைக்குப் போரும் பெருமையுடையவ ரென்று தோற்றுகிறது. (நஞ்சீயர்தாம்) இப்படி பெருமதிப்பரான நஞ்சீயர்தாம். (பட்டர் நல்லருளால்) பட்டருடைய நிர்ஹேதுக க்ருபையாலே. இவர்க்கு பட்டருடைய க்ருபை த்ருஷ்டமாகப் பலித்தது. திருவாய் மொழிக்கு வ்யாக்யாநம் பண்ணும்படியாகப் பலித்தது. (பட்டர் நல்லருளால்) (நல்லருள்) “நம்பெருமாள்” என்னுமாபோலே. அங்குத் திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யனுடைய க்ருபை. இங்கு ப்ரதிபாதகருடைய க்ருபை. அவனுடைய க்ருபையைக் காட்டிலும் விஞ்சியிறே இவருடைய க்ருபையிருப்பது. அது ஆயிரத்துக்கு அடியாயிருக்கும். இது ஒன்பதினாயிரத்துக்கு அடியாயிருக்கும். இதுதான் ஒன்றுக்கு ஒன்பதாயிருக்கிறபடி. (அருளால் எஞ்சாத ஆர்வமுடன்) அவர் நல்ல அருளாலே இவர்க்கு நலம் உண்டாய்த்து. “நலமருளினன்” என்னுமாபோலே. இப்படியானவர் அருளாலே யாய்த்து, இவர்க்கு அஸங்குசிதமான அபிநிவேச முண்டாய்த்து. எஞ்சல்-சுருங்குதல். (ஆர்வமுடன் மாறன்மறைப் பொருளையாய்ந்துரைத்தது) “ஆராதகாதலை” யுடையவருடைய ப்ரபந்தத்துக்குத் தகுதியாக, “ஆர்வம்பெருக” என்னும்படியான அபிநிவேசத்தாலே “மாறன் பணித்ததமிழ்மறை” என்னும்படி ஆழ்வாருடைய தாய் த்ராவிட வேதரூபமான திருவாய்மொழியின் அர்த்தத்தை நிரூபித்து, தததுகுணமாக வ்யாக்யாநஞ் செய்தது எவ்வள

வென்ன, (ஏரொன்பதினாயிரம்) என்கிறார். ஏரார்ந்த தமிழ்மறைக்குத் தகுதியாயிருக்கை. இது ஏரார்ந்திருக்கையாவது : சப்த ஸந்தர்ப்பத்தினுடைய சாதுர்யத்தாலும் அர்த்த கௌரவத்தாலும் உண்டான அழகின் மிகுதியை யுடைத்தாகை. இவர்தாம் (வேதாந்தி நஞ்சீயர்) ஆகையாலே வேதாந்த சாஸ்த்ரமான ஸ்ரீபாஷ்ய ஸங்க்யையாலே யாய்த்திறே இத்தை இப்படி அருளிச் செய்தது.

சஈ-ம் பாட்டு.

நம்பிள்ளை தம்முடைய நல்லருளா லேவியிடப்
பின்பெரிய வாச்சான்பிள்ளை யதனால்—இன்பா
வருபத்திமாறன் மறைப்பொருளைச் சொன்ன
திருப்பத்து நாலாயிரம்.

பதவுரை.

நம்பிள்ளை-நம்பிள்ளையானவர், தம்முடைய—, நல்லருளால்-நல்ல க்ருபையாலே, ஏவியிட-நியமநமிட, பின்-அதின் பிற்பாடு, பெரிய வாச்சான் பிள்ளை—, அதனால்-அந்த நியமநத்தாலே, இன்பமா-இன்பமாக, வரு-பகவத் கடாக்ஷத்தாலே வந்த, பத்தி-பக்தியையுடைய, மாறன் மறைப்பொருளை—, சொன்னது-அருளிச்செய்தது, இருபத்து நாலாயிரம்-இருபத்து நாலாயிரப்படியாகும்.

வ்யாக்யானம்.

நாற்பத்துமூன்றாம்பாட்டு.—அநந்தரம் நம்பிள்ளையுடைய நியோகத்தாலே பெரிய வாச்சான்பிள்ளை, கீழ் அருளிச்செய்ததில் மும்மடங்கு என்னும்படி இருபத்துநாலாயிரமாக ஒரு வ்யாக்யாநம் செய்தருளினபடியை அருளிச்செய்கிறார். (நம்பிள்ளை தம்முடைய நல்லருளாலேவியிட) சுத்தஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராய், "కారుణ్యపూర్ణం కలివైరిదాసం—காருண்யபூர்ணம் கலிவைரிதாஸம்" என்னும்படி, கேவல க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யராயிருக்கிற நம்பிள்ளை, தம்முடைய பர ப்ரயோஜநைக பரதையான "கொள்வதிலையாகிய குளிர்ந்தவரு" ளாலே திருவாய்மொழிக்கு ஒரு வ்யாக்யாநம் பண்ணுமென்று நியமித்தருள, அப்படியே அந்த அநுக்ரஹைக சீலமான அவருடைய நியோகத்தை, "క్రియతామితి—க்ரியதாமிதி" போலவும், "ஏவிப்பணிகொள்ளாய்"

என்னுமது போலவும் எண்ணி, (பின் பெரியவாச்சான் பிள்ளை) இப்படி ஆஜ்ஞாபித்தருளின வநந்தரம், "పరవానస్మి—பரவாநஸ்மி" என்னும்படி அங்குத்தைக்கு அத்யந்த ப்ரதந்த்ரரான ஆச்சான் பிள்ளை. (அதனால்) அந்த ஆசார்ய நியமநத்தைப் பற்றி, இத்தால் ஸ்வயத்நத்தாலே செய்த நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரையும் வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டரையும், வ்யாவர்த்திக்கிறது. (அதனால் இன்பாவருபத்திமாறன் மறைப்பொருளை) ராக ப்ராப்தமாயிருக்கு மதுக்கு விதியுண்டானால் கடுக பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்கையாலே "பாலோடமுதென்ற வாயிரம்" ஆன இதுக்கும் அப்படி ஆசார்ய நியமநம் உண்டாகப் பெற்றது. அதினாலேயாய்த்து (இன்பாவருபத்தி மாறன் மறைப் பொருளைச்சொன்னது) (இன்பாவருபத்தி) ஸ்மர்த்தவ்ய விஷய ஸ்வாரஸ்யத்தாலே, "సుసుఖం—ஸுஸுகம்" என்னும்படி நிரதிசய ஸுகரூபமாயிருக்கிற பக்தியை, ப்ராப்தருமாய் ஆப்தருமாயிருக்கிற ஆழ்வார், மேன்மேலெனப் பெருக்காறு போலே பெருகிவாராநிற்கிற அந்த பக்தி பலாத்காரத்தாலே அருளிச்செய்த த்ராவிடவேதமான திருவாய்மொழியின் அர்த்தத்தை இவர் வ்யாக்யாநமாக அருளிச்செய்தது. (இருபத்துநாலாயிரம்) பத்திமாறன் மறைப்பொருளைச் சொன்னது. "காதல்குருகூர்ச் சடகோபன்" என்னுமாபோலே இதுதான் (இன்பாவருபத்தி) அடியாக வந்ததாகையாலே, "భక్తామృతం—பக்தாம்ருதம்" ஆய் அவதரித்ததிறே. இப்படி நிரதிசய போக்யமான (மாறன் மறைப் பொருளைச் சொன்ன இருபத்துநாலாயிரம்) "చతుర్వింశత్సహస్రాణి శ్లోకానాముక్తవానృషిః—சதுர் விம்சத் ஸஹஸ்ராணி ச்லோகாநா முக்தவாந்ருஷி" என்னுமாபோலே இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயண ஸங்க்யையாய்த்து இவர் இப்படி யருளிச்செய்தது. (இன்பாவருபத்தி மாறன் மறைப்பொருளை) "ராமாயணமென்னும் பத்திவெள்ள"த்தின் படியாயிறே இது இருப்பது. ஆகையாலே வ்யாக்யாநமும் தத்துல்யமாயிருக்கை. "ஸ்ரீராமாயண மென்றும் திருவாய்மொழி யென்றும் இரண்டு மஹா ப்ரபந்தங்கள் உண்டு" என்றிறே இவற்றினுடைய ஸாம்யமிருப்பது.

### ௪௪-ம் பாட்டு.

தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறி தன்னை
வள்ளல்வடக்குத் திருவீதிப்—பிள்ளையிந்த
நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்த
ஈடுமுப்பத் தாறுயிரம்.

### பதவுரை.

தெள்ளியதா ஆ-தெளிவாக, நம்பிள்ளை—, செப்பும்-அருளிச்செய்யும், நெறிதன்னை-மார்க்கத்தை, வள்ளல்-ஔதார்யமுடைய, வடக்குத்திரு வீதிப்பிள்ளை—, இந்த நாடு-இந்த உலகத்திலுள்ளார், அறிய-அறிந்து கொள்ளும்படி, மாறன் மறைப்பொருளை—, நன்கு-செவ்வையாக, உரைத்தது, ஈடு-ஈடு என்னும், முப்பத்தாறுயிரம்-முப்பத்தாறுயிரப் படியாகும்.

### வ்யாக்யானம்.

நாற்பத்துநாலாம்பாட்டு.—அநந்தரம், பிள்ளையுடைய திவ்ய ஸூக்தி க்ரமத்தை வடக்குத்திருவீதிப்பிள்ளை ஜகத் ப்ரஸித்த மாம்படி திருவாய்மொழிக்கு வ்யாக்யாநமாக அருளிச்செய்தது. (ஈடுமுப்பத்தாறுயிரம்) என்கிறார். (தெள்ளியதா நம்பிள்ளை செப்பு, நெறிதன்னை) ப்ரஸந்ந கம்பீரமாய் ஸாராஸாரவிவேக சதுர மாயிருந்துள்ள நம்பிள்ளையுடைய திவ்ய ஸூக்தி க்ரமத்தை (செப்புநெறிதன்னை) என்கையாலே அவர் அருளிச்செய்த மார்க்கமொழியத் தமக்கொரு மார்க்காந்தர மில்லையென்று தோற்று கிறது. "𑌗𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑍀𑌕𑍃𑌤𑌸𑌿𑌦𑍍𑌧𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃—குருப்ரமாணீ க்ருதசித்தவ்ருத்தய:" என்னும்படியிறே இவர் ஆசார்யரை அடியொற்றி நடக்கும் க்ரமம். (வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை) ஸம காலத்திலவர்களை யொழிய, பின்புள்ளாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி க்ரந்தஸ்தமாக எழுதி ஈடு உபகரித்த ஔதார்யத்தையுடைய வடக்குத்திரு வீதிப்பிள்ளை. (இந்த நாடறிய) "நாடுநகரமு நன்கறிய" என்னுமாபோலே விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியற ஒரு நாடாக அறிந்து, ஈடுபடும்படி. (மாறன் மறைப்பொருளை) ஆழ்வாருடையதாய் வேதரூபமான திருவாய்மொழியின் அர்த்தத்தை. "மாறன் செந்தமிழ்வேதத்தின் செழும் பொருளை" என்னக்கடவதிறே. (நாடறிய நன்குரைத்தது) அவர் "ஊருநாடு முலகமுந்தம்மைப்போ" லாக்கும்படி திருவாய்,

மொழி பாடினாற்போலே இவரும் நாடறியவாய்த்து, ஈடு நன் குரைத்தது. அதாவது ஸுவ்யக்த மாம்படி அருளிச்செய்தது. (ஈடுமுப்பத்தாறுயிரம்) பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யாநத்தைக் காட்டிலும் பன்னீராயிரம் அதிகமாம்படியிறே இவர் அருளிச் செய்தது. (ஈடு) என்பது-பொருள். மாறன் மறைப்பொருளை ஈடும்படியிறே அருளிச்செய்தது. “இதுதான் ச்ருதப்ரகாசிகை யில்” என்றிறே அந்திமோபாய நிஷ்டையிலே அருளிச்செய்தருளி னார். அந்தக் கட்டளையிலே யாய்த்து அருளிச்செய்தது. “ [illegible]—குருப்யோர்த்தச் ச்ருதச்சப் தைஸ்தத்ப்ரயுக்தைச்ச யோஜித:” என்கிறபடியே இங்கும் ச்ரு தமான அர்த்தத்தையிறே ப்ரகாசிப்பித்தது. (நம்பிள்ளை செப்பு நெறிதன்னை) யிறே இவர் எழுதியருளினார். “எழுது ஏரார் தமிழ் வேதத் தீடுதன்னை” என்று இவர்மேலே அருளிச்செய்கையாலே இவர்க்கு லேககாங்வயமாத்ரமே யுள்ளது. இதுதான் ச்ருதப்ர காசிகைக்கு முன்னே அவதரித்ததானாலும் பின்புள்ளார் இதின் படியை த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்யக் குறையில்லை.

சுரு-ம் பாட்டு.

அன்போ டழகிய மணவாளச் சீயர்
பின்போருங் கற்றறிந்து பேசுகைக்காத்—தம்பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்த
தேதமில் பன்னீராயிரம்.

பதவுரை

அன்போடு- அன்புடனே, அழகிய மணவாளச்சீயர் - வாதி கேஸரி அழகிய மணவாளஜீயர், பின்போரும்-தமக்குப் பிற்பட்டவர்களும், கற்று அறிந்து-அப்யஸித்தறிந்து, பேசுகைக்கா-சொல்லுவதற்காக, தம்-தம்முடைய, பெரிய-விசேஷித்ததான, போதமுடன்-ஞானத்துடன், மாறன் மறையின் பொருள்—, உரைத்தது-சொல்லியருளினது, ஏதம் இல்-தோஷமில்லாத, பன்னீராயிரம்-பன்னீராயிரப்படியாகும்.

வ்யாக்யாநம்.

நாற்பத்தஞ்சாம்பாட்டு.—இனி வாதிகேஸரி அழகிய மண வாளஜீயர், தம்முடைய அதிசயமான ஜ்ஞாநத்தாலே திருவாய் மொழியின் அர்த்தத்தை யுரைத்தது பன்னீராயிரம் என்கிறார், (அன்போடழகிய மணவாளச்சீயர்) திருவாய்மொழியில் தமக்

குண்டான ப்ரேமம் பெருக்கவாய்த்து அருளிச்செய்தது, "𑌭𑌾𑌷𑍍𑌯𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌸𑌾𑌕𑌰𑌾𑌤𑍍–பாஷ்யபக்தி ரசாகரத்" என்னுமாபோலே. அன்றிக்கே (அன்போடழகிய மணவாளச் சீயர்) என்று சேதநர் பக்கல் வாத்ஸல்யத்தாலே அருளிச்செய்தார் என்னவுமாம், "நெறியுள்ளி யுரைத்த கணக்கறு நலத்தனன்" என்னுமாபோலே. (பின்போருங் கற்றறிந்து பேசுகைக்கா) பின்புள்ளாரும் இத்தைக்கொண்டே ஸாதிக்கவேண்டி யிருக்குமிறே. அதுக்கு அநுகுணமாகப் பின்புள்ளாரும் இத்தை அப்யஸித்து அதில் தாத்பர்யங்களை நன்றாக அறிந்து பர ப்ரதிபாதநம் பண்ணவல்ல ராம்படியாக. இத்தையொழிய நாலு வ்யாக்யாந முண்டானாலும் சப்தார்த்த நிர்ணயத்துக்கு இத்தைக் கொண்டே ஸாதிக்கவேண்டுமிறே. (தம்பெரிய போதமுடன்) திருவாய்மொழியைத் தேர்ந்துரைக்க வல்ல தம்முடைய மஹத்தான புத்தியாலே. (மாறன் மறையின் பொருளுரைத்தது) ஆழ்வாருடைய திருப்பவளத்திலே அவதரிக்கையா லுண்டான அதிசயத்தை யுடைத்தாய், த்ராவிட வேதமான திருவாய்மொழியின் அர்த்தத்தை (உரைத்தது) உரையாக ப்ரதிபிம்ப வ்யாக்யாநமாக அருளிச்செய்தது. (ஏதமில் பன்னீராயிரம்) "ஏதமிலாயிர" மான இதுக்கு (ஏதமில் பன்னீராயிர) மாய்த்தது. ஏதமில்லாமை-குற்றமற்றிருக்கை. அதாவது ஆழ்வார் திருவுள்ளக் கருத்தைப் பின்செல்லுகை. இதுதான் பிள்ளானுடைய வ்யாக்யாநத்தில் த்விகுணமாய் ஆச்சான்பிள்ளையுடைய வ்யாக்யாநத்தில் அர்த்தமாய் இப்படி அடியொத்திருக்கவிறே அருளிச்செய்தது. ஆகையால் அதி ஸங்க்ரஹமும் அதி விஸ்தரமுமில்லை யென்றபடி. ஏதத் ஸங்க்யைக்கு அநுகுணமான விலக்ஷண ப்ரமாண முண்டாகில், தத் ஸங்க்யையாக அருளிச்செய்தாரென்று நிர்வஹிக்கக்கடவது.

சகூ-ம் பாட்டு.

பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய
அருளிச்செயல்பொருளை ஆரியர்கட்கிப்போ
தருளிச்செயலாய்த் தறிந்து.

பதவுரை.

பெரியவாச்சான்பிள்ளை—, பின்புள்ளவைக்கும்-மற்றமூவாயிரத்துக்கும், தெரிய-யாவரும் தெரிந்துகொள்ளும்படி, வியாக்கியைகள்-வியாக்கியானங்களை, செய்வால்-செய்ததினாலே, அரிய-அருமையான, அருளிச்செயல்-ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின், பொருளை-அர்த்தவிசேஷங்களை, ஆரியர்கட்கு-பின்புள்ள ஆசார்யர்களுக்கு, இப்போது-இந்தக் காலத்தில், அருளிச்செயல் ஆய்த்து-அருளிச்செய்வது ஆயிற்று.

வ்யாக்யாநம்.

நாற்பத்தாறும்பாட்டு.—பிள்ளான் நஞ்சியரென்று தொடங்கி, உத்தேசித்தபடி த்ராவிட வேதமான திருவாய்மொழிக்கு வ்யாக்யாநம் பண்ணினவர்களையும் தத் க்ரந்த ஸங்க்யைகளையும் இவ்வளவாக தர்சிப்பித்தருளி, இனி ததங்கோபாங்கங்களான மற்றை அருளிச்செயல்களுக்கும் வ்யாக்யாநம் பண்ணினார். இன்னாரென்னுமத்தையும் அருளிச்செய்வாராய் அப்படியே அவை எல்லாவற்றுக்கும் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம் செய்தருளின படியையும் அருளிச்செய்கிறார் இதில் (பெரியவாச்சான் பிள்ளை) அவர் குமாரரான நைநாராச்சான் பிள்ளையும் நாலூராச்சான் பிள்ளையும் உண்டாகையாலே (பெரிய வாச்சான் பிள்ளை) யென்று இவரை விசேஷிக்கிறது. (பின்புள்ள வைக்கும் தெரிய) சடகோப வாங்மயமான திருவாய்மொழியை யொழிந்த திருப்பல்லாண்டு தொடங்கி, திருமடல்களீறாக வுண்டான திவ்ய ப்ரபந்தங்கள் இருபத்து மூன்றுக்கும் (தெரிய வியாக்கியைகள் செய்வால்) தம்முடைய பரஸம்ருத்யைக ப்ரயோஜநதையாலே ஸுஸ்பஷ்டமாம்படி வ்யாக்யாநம் செய்தருளுகையால் (அரிய அருளிச்செயல் பொருளை) "அரியவின்னிசை" என்றும் "அறிவித்தேனாழ்பொருளை" என்றும் சொல்லும்படியாயிறே அருளிச்செயல்களினுடைய சப்தார்த்தங்களின் அருமை யிருக்கும்படி. "செஞ்சொல்கவி" என்றும், "செவிக்கினிய செஞ்சொல்" என்றும் "செஞ்சொலாலெடுத்த தெய்வ நன்மாலை" என்றும் "செந்தமிழ்" என்றும் சொல்லுகிறபடியே ச்ரவண ஸமயமே பிடித்து, நிரதிசய போக்யமாய், த்ராவிடபாஷை யென்னுமத்தால் அதிமருதுக்களாய் அதஏவ அதிஸுலபமாய் இருந்ததேயாகிலும், தாத்பர்ய நிர்ணயத்தில் வந்தால் அத்யந்த துர்க்ரஹமாயிறே யிருப்பது. இப்படி அருமை பெருமை

களை யுடைத்தான அருளிச்செயல்களின் அர்த்தமானது, (ஆரியர்கட்கிப்போது) ஆச்சான்பிள்ளைக்கு இவ்வருகிலுண்டான ஆசார்யர்கள் எல்லார்க்கும் (இப்போது) இவர் வ்யாக்யாநம் செய்தருளின பின்பென்னுதல். அன்றிக்கே, தமக்கு ஸமகாலத்திலவர்களாய் உள்ளவர்களுக் கென்னுதல். அப்போது அவர் அப்படி செய்தருளுகையாலே யாய்த்து இப்போது இப்படி அருளிச் செய்ய லாய்த்து. "அரியது எளிதாகும்" என்னும்படி அவர் ப்ரஸாதத்தாலே (அருளிச்செயலாய்த் தறிந்து) அதாவது அதி துர்க்ரஹமான அர்த்தங்களை இவர் வ்யாக்யாந விசேஷங்களாலே நன்றாக அறிந்து, அத்தை ஸ்வாநுபவ ரூபமாகவும் பரோபதேச ரூபமாகவும் அருளிச்செய்யும்படி யாய்த்து. அல்லாத ஆசார்யர்களிற் காட்டில் இதிறே இவர்க்கு வைபவம்.

சஎ-ம் பாட்டு.

நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு
எஞ்சாமை யாவைக்கு மில்லையே—தஞ்சீரால்
வையகுருவின்றம்பி மன்னுமணவாளமுநி
செய்யுமவை தாமுஞ் சில.

பதவுரை.

நஞ்சீயர்-நஞ்சீயரானவர், செய்த-அருளிச்செய்த, வியாக்கியைகள்-வ்யாக்யாநங்கள், நாலிரண்டுக்கு-சிலவற்றுக்கேயாகும், எஞ்சாமை-குறைவில்லாமல், யாவைக்கும்-எல்லா அருளிச்செயல்களுக்கும், இல்லை-இல்லையேயாகும், வையகுருவின்-பிள்ளை லோகாசார்யருடைய, தம்பி-திருத்தம்பியாரான, மன்னும்-நிலைபெற்ற, மணவாளமுனி-அழகியமணவாளப் பெருமாள் நாயனாராசார்யர், தம் சீரால்-தம்முடைய கல்யாண குணங்களாலே, செய்யுமவைதாமும்-செய்த வ்யாக்யாநங்களும், சில-சில அருளிச்செயல்களுக்கேயாகும்.

வ்யாக்யாநம்.

நாற்பத்தேழாம்பாட்டு.—இதிலே நஞ்சீயர் தொடக்கமான ஆசார்யர்களும் சிறிது ப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநம் செய்தருளினபடியை அருளிச்செய்கிறார். (நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு) என்று. அதாவது பெரியவாச்சான் பிள்ளையைப் போலே அசேஷ திவ்ய ப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யாநம் பண்ணுகை யன்றிக்கே, அவற்றிலே நாலிரண்டு ப்ரபந்தங்களுக்காய்த்து

அவர்முன்னே வ்யாக்யாநம் செய்தருளிற்றென்கை. (நாலிரண்டுக்கு) என்று ஸங்க்யா நிர்த்தேசமன்று. ஒரு முழுச்சொல் இருக்கிறபடி. அதாவது அல்பத்திலே தாத்பர்யம். மேலும் சில வென்றிறே யருளிச்செய்தது. இவர் தாம் செய்தருளினதாய்க் கண்டது திருப்பாவைக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்புக்குமிறே யுள்ளது. பின்னையு முண்டாகில் கண்டுகொள்வது. (எஞ்சாமை யாவைக்கு மில்லையே) அதாவது ஸங்கோசமற ஸகல திவ்ய ப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யாநம் செய்தருளவில்லை யென்றபடி. (இல்லையே) என்று தேற்ற மிருக்கிறபடி. எஞ்சல்-ஒழிதலும், சுருங்குதலும். "எஞ்சாமை வைத்தடக்கி" என்னக்கடவதிறே. (நஞ்சீரால் வையகுருவின்றம்பி) அருளிச்செயலிலே வந்தால் அல்லாத ஆசார்யர்கள் எல்லாரையுங் காட்டிலும் அத்யந்த அவகாஹத்தையுடைய ராம்படியான தம்முடைய ஜ்ஞாநாதி கல்யாண குணங்களாலே "காத்தகுணவாளர்" என்னுமாபோலே நஞ்சீராலே யாய்த்து இவரும் சிலவற்றுக்குச் செய்தருளினது. "மன்னுபதின்மர் மறைப்பொருளில் மாறன் சீர், துன்னு மதுரகவி சொற்பொருளு மன்னநடைத், திங்கண்முகவல்லியுரை செம்பொருளுந் தென்முடும்பை, எங்கண்மணவாளர்க்கிறை" என்னும் படியிறே இவற்றில் இவருடைய அவகாஹந மிருப்பது. (வையகுருவின்றம்பி) இதுக்கெல்லாமடி, அவர் பின் பிறப்பாய்த்து. அதாவது பிள்ளை லோகாசார்யரென்று ப்ரஸித்தியை யுடையரான வருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நைநாரென்கை. இவர்க்கு அதிசயாவஹமான ஸம்பந்த மிருக்கிறபடி. ராஜகுமாரரென்னுமாப்போலே. இவர்க்கும் "ஜகத் குருவராநுஜ" ரென்றிறே நிருபகம். "தம்பியுடன் றாசரதியானுனும்" இத்யாதி. (மன்னுமணவாளமுனி) இவ்வர்த்தத்தில பொருந்த முடையவராய், வாதிகேஸரி அழகியமணவாளச் சீயரென்று நிலைநின்ற நிருபகத்தையுடைய ரானவர், இப்படி திருநாமத்தை யுடையரான இவர்கள் இருவரும் (செய்யுமவைதாமுஞ்சில) இவர்களாலே செய்யப்படும் வ்யாக்யாநங்கள் தாமும் சிறிது ப்ரபந்தங்களுக்கென்றபடி. (அவைதாமும்) என்று கீழிலவற்றோடே ஸமுச்சயிக்கிறது. திருப்பாவைக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்புக்கும் நைநார் செய்தருளினதாயும் திருவிருத்தத்துக்கு ஸ்வாப

தேச வ்யாக்யாநம் ஜீயர் செய்தருளின தாகவுங் கண்டது. இன்னமும் இவற்றை யொழிய உண்டாகிலுங் கண்டுகொள்வது.

௪௮-ம்பாட்டு.

சீரார் வடக்குத் திருவிதிப்பிள்ளையெழு
தேரார் தமிழ் வேதத் தீடுதன்னைத்-தாருமென
வாங்கி முன் நம்பிள்ளை ஈயுண்ணிமாதவர்க்குத்
தாங் கொடுத்தார் பின்னதனைத் தான்.

பதவுரை.

சீர்ஆர்-வைபவ முடைய, வடக்குத்திருவீதிப்பிள்ளை—, எழுத-எழுதியருளிய- ஏர்-விலக்ஷணம், ஆர்-பொருந்திய, தமிழ்வேதத்த-திருவாய் மொழியின், ஈடுதன்னை-ஈடுஎன்னும் முப்பத்தாறுயிரப்படி வ்யாக்யாநத்தை, நம்பிள்ளை—முன்-முற்பட, தாரும்என-கொடும்என்று, வாங்கி-பெற்றுக் கொண்டு, ஈயுண்ணிமாதவர்க்கு—, தாம்-அந்தநம்பிள்ளை, பின்-பிற்பாடு, அதனைத்தான்-அந்த ஈட்டை, கொடுத்தார்-கொடுத்தருளினர்.

வ்யாக்யாநம்.

நாற்பத்தெட்டாம்பாட்டு.—ஆகக்கீழ் தாம் பண்ணினப்ரதிஜ்ஞாநுரூபமாக வியாக்கியைகள் உள்ளது என்றத்தை உபபாதித்தருளினவர், "நம்பிள்ளை செப்புநெறி" என்று ப்ரஸ்துதமாய் ஸகல திவ்ய ப்ரபந்த வ்யாக்யாநார்த்தங்களையும் தனக்குள்ளே உடைத்தாம்படியிருப்பதாய் ஏகச் ச்ரவணத்தாலே எல்லாம் ச்ரவித்ததாம்படியான ச்ரேஷ்டத்தையு முடைத்தான ஈட்டினுடைய வரலாற்றையும் அருளிச்செய்ய வேணுமென்று திருவுள்ளம்பற்றி அத்தையும் இரண்டு பாட்டாலே எல்லாரும் அறியும்படி "இவரீடளித்தற் கேய்ந்தமாதவர்" என்று சொல்லுகிற அடைவே அருளிச் செய்கிறுர். (சீரார்வடக்குத் திருவீதிப்பிள்ளை) இவர்க்குச் சீரார்ந்திருக்கையாவது: ஆசார்ய ப்ரஸாதத்தாலே அவர் அருளிச்செய்த அர்த்தவிசேஷங்களை யெல்லாம் தெரிந்தெழுதி எல்லார்க்கும் உபகரிக்கும்படியான ஜ்ஞாநாதி குணபூர்த்தியை உடையராயிருக்கை. அன்றிக்கே, திருவீதிக்கு விசேஷணமான போது "சீரார் நெடுமறுகு" என்னுமாபோலே இவர் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயால் பூர்ணமாயிருக்கிற என்றுமாம். (வடக்குத்திருவீதிப்பிள்ளை) நடுவில் திருவீதிப்பிள்ளையும் உண்டாகையாலே அவர்களில் வ்யாவ்ருத்தி. அவர் எழுந்தருளியிருக்கிற

துக்கு வடக்குத்திருவீதியிலே யாய்த்து இவர் எழுந்தருளியிருக்கிறது. அதுதான் ராஜன் துறைக்கு அருகான ஆதிகேசவப்பெருமாள் கோயிலுக்கு அடுத்து அணித்தாயிருக்கும். இப்படி வ்யாவ்ருத்தமான ஸ்தலத்திலே யாய்த்து இப்படி வ்யாக்யாநம் செய்துகொண்டு எழுந்தருளியிருப்பது. ஆகையால் அதுவே நிரூபகமாய்த்து இவர்க்கும், இவர் ஆசார்யரான நம்பிள்ளைக்கும். மாடத் திருவீதிப்பிள்ளையென்றிறே நிரூபகம். "கோயிலில் வாழும் வைட்டணவன்" என்னுமா போலே. இப்படி ஜ்ஞாநவர்த்தகமான தேசத்தை யிட்டு நிரூபிக்கும்படியாக இருக்கிற இவர் (எழுது ஏரார் தமிழ் வேதத் திடுதன்னை தாருமெனவாங்கி) அதாவது "நம்பிள்ளைசெப்பு நெறிதன்னை" யிறே இவர் எழுதியது. ஆகையாலே எழுதின மாத்ரத்தைக் கொண்டு பிள்ளான் முதலானோரோடே ஸஹபடிதராய்த்து. இத்தால் முழுதும் நம்பிள்ளையுடைய திவ்ய ஸூக்தியிறே. (ஏரார் தமிழ்வேதத்திடுதனை) "ஏரார்ந்த தமிழ்மறை" என்கிறப்படியே விலக்ஷணமான சப்தார்த்த ஸந்தர்ப்பங்களால் வந்த அழகின் மிகுதியையுடைத்தாய் திராவிடரூபமான வேதத்தினுடைய வ்யாக்யாநத்தை. திருவாய்மொழி ஈடு தான் ஆனைக்கோலம் செய்தாற்போலே அத்யாகர்ஷகமாயிறே யிருப்பது. அத்தைப்பற்ற ஏரார்ந்திருக்கை ஈட்டுக்கு விசேஷணமாகவுமாம். (ஈடுதனைத் தாருமென வாங்கி) இப்படி அதிமநோஹரமாம்படியான ஈடுமுப்பத்தாறுயிரத்தையும் எழுதி, நம்பிள்ளை ஸந்நிதியிலேவைக்க, அப்போது அத்தை அவிழ்த்துத் திருக்கண் சாத்தி, போரவும் உகந்து, ஆனாலும் நம்முடைய காலத்திலே நம்முடைய அநுமதியுமின்றிக்கே எழுதினீர், இப்படி எழுதின நம்முடைய க்ரந்தத்தைத் தாருமென்று அவர் திருக்கையில் நின்றும் வாங்கி, (முன் நம்பிள்ளை) முற்காலத்திலே நம்பிள்ளை. அதாவது சிஷ்யாசார்ய ஸம்வ்யவஹார க்ரமம் நன்றாக நடந்து போருகிற பூர்வகாலத்திலே அந்த க்ரமத்தை நன்றாக நடத்திப் போருகிற நம்பிள்ளை, (ஈயுண்ணிமாதவர்க்குத் தாங்கொடுத்தார் பின்) தம்முடைய ஸந்நிதியிலே வைத்தபின்பு. (ஈயுண்ணிமாதவர்க்குத் தாங்கொடுத்தார்) அதாவது ஈயுண்ணி என்கிற குடியிலே அவதரித்தவராய், தம்முடைய திருவடிகளிலே ஆச்ரயித்த அநந்தரம், மாதவப் பெருமாள் என்று தமக்கு ஆசார்யரான நஞ்ஜீயருடைய

திருநாமத்தைச் சாத்தப்பெற்றவராய், தமக்கு அத்யந்த அபிமத விஷயமாயிருக்கிற அவர்க்கு. (தாங்கொடுத்தார் பின்) "மாதவ சிஷ்யர்" என்றும் "ஸ்ரீமாதவனடிக்கன்பு செய்யும்" என்றும் அத்தையே நிரூபகமாக உடையராய் திருவாய்மொழிக்கு முப்பத்தாறுயிர க்ரந்த ஸங்க்யையாம்படி உபந்யஸித்தருளின தாம், இவர் பேறுபெறும்படி கொடுத்தார். தம்தாம் ஸ்வத்தைத் தம்தாம் வேண்டினவர்களுக்கு விநியோகிக்குமாபோலே "இத்தை ஒருவர்க்கும் ப்ரகாசியாதே அநுஸந்தித்துக்கொண்டு போரும்" என்று அவர் கையிலே காட்டிக்கொடுத்தார். மாதவப் பெருமாளுக்கு இந்த மஹைச்வர்யத்தைக் காட்டிக்கொடுத்தார். (பின்) அவர் திருமுன்பே வைத்த அகந்தாத்திலே (அதனைத்தான்) அப்படி அநுமதியின்றிக்கே எழுதின க்ரந்தத்தைத்தான். மூழூச்சொல் இருக்கிறபடி. ஆகையால் இப்படி சீரியதான அர்த்தத்தை ஸ்ரீமாதவரிடத்திலே மேல் எல்லார்க்கும் உதவும்படி சேமித்து வைத்தருளினாராய்த்து.

௪௯-ம் பாட்டு.

ஆங்கவர்பால்பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை
தாங்கொடுத்தார் தம்மகனார் தங்கையில்—பாங்குடனே
நாலூர்பிள்ளைக்கவர்தாம் நல்லமகனார்க்கவர்தாம்
மேலோர்க்கீந்தா ரவரே மிக்கு.

பதவுரை.

ஆங்கு-அவ்விடத்திலே, அவர்பால்பெற்ற-நஞ்சீயரிடத்திலே லபித்த, சிறியாழ்வானப்பிள்ளை-ஈயுண்ணி மாதவப்பெருமாள், தம்மகனார் தம்கையில்-தம் திருக்குமாரரான பத்மநாபப்பெருமாள் என்பவர் திருக்கையிலே, தாம்கொடுத்தார்-தாமே கொடுத்தருளினார், பாங்குடனே-தக்கபடியே, அவர்தாம்-அந்த பத்மநாபப்பெருமாள் என்பவர், நாலூர்பிள்ளைக்கு-நாலூர் பிள்ளை என்பவருக்கும், அவர்தாம்-அவரே, நல்லமகனார்க்கு-அவர் நல்ல திருக்குமாரரான நாலூராச்சான்பிள்ளைக்கும், அவர்தாம்-அவரே, மேலோர்க்கு-பிற்பட்ட மேலோருக்கும், மிக்கு-விசேஷித்து, ஈந்தார்-கொடுத்தருளினார்.

வ்யாக்யானம்.

நாற்பத்தொன்பதாம்பாட்டு.—இப்படி நம்பிள்ளையுடைய ப்ரஸாதத்தாலே (சிறியாழ்வானப்பிள்ளை) என்று திருநாமத்தை

யுடையரான ஈயுண்ணிமாதவப் பெருமாளுக்கு ப்ராப்தமான ஈடா னது, தம்முடைய ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையளவும் ஸம்ப்ரதாயமாக நடந்துவந்தபடியை அருளிச்செய்கிறார். (ஆங் கவர்பால் பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை) என்று. (ஆங்கு) அந்த திவ்ய கோஷ்டியாயிருக்கிற அவர் திருமுன்பே, அன்றிக்கே, வடக் குத்திருவீதிப்பிள்ளை திருக்கையில் நின்றும் வாங்கின அத்தசை யிலே என்னவுமாம், (அவர்பால்பெற்ற) அந்த கோஷ்டிக்கு நாயகமாய் அந்த ஈட்டுக்கு ப்ரதாந வக்தாவான நம்பிள்ளையிடத் திலே நிதிபெற்றாற்போலே "உறுபெருஞ்செல்வ" மதியாக வந்த அர்த்தத்தைப் பெற்றவராய்த்து இவர்தாம். ஒருதேசமும் தேசி கரும் கோசமுமிருந்தபடி. (சிறியாழ்வானப்பிள்ளைதாம்) இவரு டைய சிறுபேர் இருக்கிறபடி. இப்படியான இந்த நிதியைப்பெற் றுடைய (தாம்கொடுத்தார் தம்மகனார் தம்கையில்) ஸஞ்சிதங் காட்டுவாரைப்போலே மாதவப் பெருமாளான தாம், பத்மநாபப் பெருமாள் என்று நிரூபகமாயிருக்கிற தம்முடைய குமாரர் கை யிலே காட்டிக்கொடுத்தார். அதாவது: அவர்க்கு ஈடு முப்பத் தாறாயிரத்தையும் ப்ரஸாதித்தபின்பு அவர் திருக்கையிலே திருவா ராதநமாயிருந்த ஸ்ரீகோசத்தையுங் காட்டிக்கொடுத்தா ரென்கை. ஆகையிறே "மாதவபத்மநாப" என்றது. இப்படி இவர்கள் இரண்டுபேர்களுடைய காலத்திலும் ஓராண்வழியாய் உபதேசித் துக்கொண்டு, ஸ்ரீகோசத்தையும் ப்ரகாசிப்பியாமல் கோயிலாழ் வாரிலே திருவாராதநமாய்ப் பேணிக்கொண்டு பிள்ளையுடைய நியமநத்தின்படியே நடந்துபோந்ததாய்த்து திருவாய்மொழியின் ஈடுதான். இப்படி நிதியை நோக்கிக்கொண்டு போருமாபோலே இத்தை நோக்கிக்கொண்டு போந்ததுதான் பெருமாள் கோயிலில் பட்டர்கள் திருவீதியில் திருமாளிகையிலே யாய்த்து. (பாங்கு டனே நாலூர்பிள்ளைக்கவர்தாம்) அதாவது பத்மநாபப்பெருமாள் திருவடிகளிலே ஆச்ரயித்து, அவரை ப்ரணிபாத நமஸ்கார ப்ரிய வாக்குக்களாலே "குருக்களுக்கநுகூலராய்" அவரை மிகவும் உகக்கப்பண்ணி, இப்படி பல ஸாதந சுச்ரூஷையையுடையரா யிருக்கிற நாலூர்பிள்ளைக்கு ப்ரணிபாத ப்ரஸந்நராயிருக்கிற பத்ம நாபப்பெருமாள், ஈட்டை இவர் ஒருவர்க்குமே ஓராண்வழியாக முன்பு நடந்து போந்தபடியே ப்ரஸாதிப்பதாக இவரைப் போரு

ளாளப் பெருமாள், திருமுன்பேகொண்டுபுக்கு, ப்ரமாண புரஸ்ஸரமாகச் சூளரவுகொண்டு சொல்லவேணுமென்று ஸ்ரீசடகோபனை அர்ச்சகமுகேந இவர் திருமுடியிலே ஊன்றிவைக்க, அவர் அதனை ஒருவர்க்கும் வெளியிடாமைக்கு ஊன்றிவைக்கிற ஆகாரத்தை பாவஜ்ஞரான இவர் அறிந்து, பெருமாள் திருமுகமண்டலத்தைப் பார்த்து, தம் திருமுடியிலே வைத்த அந்தச் சடகோபனை "அருளாளர் திருவடியை யூன்றினவர்" என்னும்படி தாம் திருக்கையாலே ஊன்றி ஸம்ஜ்ஞைபண்ணின அது, ஸர்வஜ்ஞரான பெருமாள் திருவுள்ளத்திலே உற்று, இத்தை நீர் எல்லார்க்கும் ப்ரகாசிப்பியுமென்று அர்ச்சகமுகேந திவ்யாஜ்ஞையிட்டருள, அத்தைக்கேட்ட பத்மநாபரும் எண்ணினவாறு ஆகாமையாலே "திருவுள்ளமானபடி" என்று பின்பு உகப்புடனே, ப்ரஸாதித்தருளினரென்கை. இவர் இத்தை எல்லார்க்கும் வெளியிடவேணுமென்கிற தம்முடைய பரஸம்ருத்த்யைக ப்ரயோஜநதாரூபமான திருவுள்ளக் கருத்தாலே பேரருளாளப் பெருமாளைக் குறித்து, ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளைப் பண்ணியும் அநதிக்ரமண ஹேதுவான சரணக்ரஹணம் பண்ணியுமாய்த்து இவர் இப்படி அர்த்தித்தது. அவரும் அர்த்திதார்த்த பரிதாந தீக்ஷிதராகையாலே இப்படி செய்தருளினர் ஆகையிறே "సుమనః కోలేశ దేవాధిపాన్—ஸுமந:கோலேச தேவாதிபாந்" என்று அருளிச்செய்தது: அப்படியே ஜீயரைப் பிள்ளையும் அரங்கர் தம் தாளை ஊன்றுவித்திறே திருவாய்மொழியின் ஈட்டை ப்ரவர்த்திப்பித்தது. "చరణాబ్జ సమర్పణాద్దర్శయన్తు గ్రహాన్నార్థాన్ ద్రమిడోపనిషద్గిరాం—சரணாப்ஜஸமர்ப்பணாத் தர்சயந்து க்ரஹாநார்த்தாந் த்ரமிடோபநிஷத்கிராம்" என்னக்கடவதிறே. (நல்லமகனார்க்கவர்தாம்) அந்த நாலூர்பிள்ளையும் தம்முடைய திருவுள்ளக் கருத்தின்படியே பெருமாள் தலைக்கட்டியருளுகையாலே பெற்றுப் பேரிடும்படியான அந்த உபகாரத்துக்குத் தமக்குக் குமாரர் அவதரித்த உடனே "தேவப்பெருமாள்" என்று திருநாமம் சாத்த, இப்படி பேர் பெற்று ஸகல கலாபூர்ணராய், வளர்ந்து போருகிற (நல்லமகனை) ரான நாலூராச்சான்பிள்ளைக்கு இத்தை வர்த்திப்பித்துக்கொண்டு போருமென்று ஈட்டை ப்ரஸாதித்தருளினர். அவர் ஸௌமநஸ்யம் போலேயாய்த்து இவர் குணசாலியானதும், அன்றிக்கே, "இவரருளாளர் திருவடி

யூன்றினவர்'' என்றதுக்கு இவர் என்று பத்மநாபரைச் சொல்லி, அவருடைய அருளையுடையவரென்று நாலூர்பிள்ளையைச் சொல்லி திருவடியூன்றினவரென்று ஈட்டை ப்ரஸாதிக்கும்படி நாலூர் பிள்ளையாலே பேரருளாளப் பெருமாள், திருவடியூன்றப்பட்ட நாலூராச்சான்பிள்ளையைச் சொல்லி, அப்படி "திருவடியூன்றின தேவப்பெருமாள் கைக்கொண்டருளுந் திருமலையாழ்வார்'' என்று திருவாய்மொழிப்பிள்ளையைச் சொல்லுகிறதென்றும் அருளிச் செய்து போருவர்கள். இந்த யோஜனை, (மேலோர்க்கிந்தார வரேமிக்கு) என்கிறதுக்கு மிகவும் சேர்த்தியாயிருக்கும். (மேலோர்க்கிந்தாரவரே மிக்கு) என்று அதாவது, கீழிலவர்களைப்போலே ஓராண்வழியாய் நடத்திப்போருகையன்றிக்கே, தம்முடைய ஔதார்யத்தினாலே கோலவராஹப் பெருமாளாலே கொடுக்கப்பட்ட தேவப்பெருமாளான தாம், திருமலையாழ்வாரைக் கைக்கொண்டருளி, அவர் தொடக்கமாகத் திருநாராயணபுரத்தில் ஆய், பிள்ளை இவர்களுக்கும் ப்ரஸாதித்தருளினார். ஆகையிறே (மேலோர்) என்று பஹுவசநப்ரயோகம் பண்ணியருளிற்று. "త్రేతాప్రవర్త్య భువియః ప్రథయాంచకార–த்ரேதாப்ரவர்த்ய புவிய:ப்ரதயாம்சகார'' என்று அவர் தனியனிலுமுண்டிறே. "శ్రీశైలనాథగురుమాతృగురూత్తమాభ్యాం శ్రీసూక్తిదేశికవరేణచయస్త్రిదైవం–ஸ்ரீசைலநாதகுருமாத்ரு குருத்தமாப்யாம் ஸ்ரீஸூக்தி தேசிகவரேணசயஸ்த்ரிதைவம்'' என்றும் சொல்லக்கடவதிறே. (அவரேமிக்கு) என்கையாலே இவர்களுடைய அர்த்தித்வமும் மிகையென்னலாம்படி தம்முடைய ஔதார்யத்தினாலே தாமே கைக்கொண்டருளி, அருளிச்செய்தார் என்னுமது தோற்றுகிறது. அவ்வளவுமன்றிக்கே, அருளிச்செயலனைத்துக்கும் திருவாய்மொழிப்பிள்ளைக்கு நாலூராச்சான்பிள்ளை ப்ரஸாதித்தருளினதுக்கு த்யோதகமாக "மாற்றுத்தாய்'' என்கிறபாட்டின் வ்யாக்யாநத்திலே ஜீயர்தாமே ஸூசிப்பித்தருளினார். ஜீயர்தாம் அருளிச்செய்தருளின பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யாநம் பலவிடங்களிலும் "நாலூர் பிள்ளை ப்ரஸாதித்ததாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்வர்'' என்றிறே அருளிச்செய்தருளுவது. பிதா புத்ரர்களுக்குத் திருவாய்மொழிமுகேந வுண்டான சிஷ்யாசார்ய ஸம்பந்தம் கூரேசபட்டார்யர் இடங்களிலும் அபயப்ரதராஜ தந் புத்ரர்களிடங்களிலும்

க்ருஷ்ணபாத லோகாசார்யர் இடங்களிலும், மாதவ பத்மநாபர் இடங்களிலும் கோலேச தேவாதிபர் இடங்களிலும் தர்சிப்பிக்கலாயிருக்கும். "தேவப்பெருமாள் கைக்கொண்டருளும் திருமலையாழ்வா" ராலே "திருமலையாழ்வார் தீவினையோர்தம்மைக் குருவாகி வந்துய்யக்கொண்டு" என்னும்படி அங்கீக்ருதரான ஜீயரும், "ఆర్యశ్రీశైలనాథ ప్రథితకథకజిత్సూక్తి భాష్యోమహిమ్నా—ஆர்யாச்ச்ரீசைலநாதாதிகதசடஜித்ஸூக்தி பாஷ்யோமஹிம்நா" என்றும், "ఆశిశ్రియదయం భూయశ్శ్రీశైలాధీశదేశికః అశేషానశ్రుణోద్దివ్యాన్ ప్రబన్ధాన్ బన్ధనచ్ఛిదః—ஆசிச்ருயதயம்பூய ஸ்ரீசைலாதீச தேசிக: அசேஷாச்ருணோத் திவ்யாந் ப்ரபந்தாந் பந்தநச்சித:" என்னும்படி திருவாய்மொழி முதலான அசேஷ திவ்ய ப்ரபந்த வ்யாக்யாநங்களையும் அவர் உபதேசமுகத்தாலே லபித்தருளி, அநந்தரம் அவற்றை ஸர்வ லோகப்ரசார முண்டாம்படி நடத்தியருளினாரிறே. "యేచాప్యసౌమ్య వరయోగివరాచ్చటారి శ్రీసూక్తిభాష్యమథితత్ప్రథితం విదేనుః తాన్ భట్టనాథముని వాన మహాద్రియోగి వాధూలవంశ్య వరదార్యముఖాన్ భజామః—ஏசாப்ய ஸௌம்ய வரயோகி வராச்சடாரி ஸ்ரீஸூக்திபாஷ்ய மதிதத்ப்ரதிதம் விதேநு: தாந்பட்டநாத முநிவாநமஹாத்ரியோகி வாதூலவம்ச்ய வரதார்ய முகாந்பஜாம:" என்னக்கடவதிறே.

௫0-ம் பாட்டு.

நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
என்ப ரவர்த மேற்றத்தால்—அன்புடையோர்
சாற்றுதிருநாமங்கள் தானென்று நன்னெஞ்சே
ஏத்ததனைச்சொல்லி நீ யின்று.

பதவுரை.

நம்பெருமாள்—நம்மாழ்வார்—நஞ்சீயர்—நம்பிள்ளை,—என்பர்-என்று சொல்லுமவர்களான, அன்புடையோர்-அன்புடையவர்கள், அவரவர் தம்-அவரவர்களுடைய, ஏற்றத்தால்-வைபவாதிசயத்தாலே, சாற்று-சொல்லப்பட்ட, திருநாமங்கள்தான் என்று-திருநாமங்களாகுமென்று, நல்நெஞ்சே-நல்லமனசே, நீ—, அதனை-அந்த வைபவத்தை, இன்று-இப்போது, சொல்லி-எடுத்துச்சொல்லி, ஏத்து-துதிப்பாயாக.

வ்யாக்யாநம்.

ஐம்பதாம்பாட்டு.—இனி வகுளபூஷண திவ்ய ப்ரபந்த வ்யாக்யாந அநந்தரம் அதில் தாத்பர்யமான ஸ்ரீவசநபூஷணார்த்த நிஷ்

டாக்ரமங்களையும் அருளிச்செய்ய வேணுமென்று அதுக்கு அடி கோலுகிறார். அது எங்ஙனே யென்னில், இஃது ப்ரஸ்துதமான நம்பெருமாள் தொடக்கமான அவர்களுக்கு அதிசயமான திருநாமங்கள் வருகைக்கு ஹேதுவையும் அந்த ப்ரஸங்கத்திலே நம்பிள்ளையென்று ப்ரஸ்துதரானவர்க்கு லோகாசார்யரென்று திருநாமம் வருகைக்கு ஹேதுவையும் அந்தத் திருநாமமானது பிள்ளை லோகாசார்யருக்கு ப்ராப்தமாய் அவரடியாக எங்கும் வந்து பரந்தபடியையும் ஒரோரு பாட்டாக மூன்று பாட்டிலே அருளிச்செய்கிறார். அதில் இப்பாட்டில் மூன்பு சொன்ன (நம்பெருமாள்) தொடக்கமானருக்கு அதிசயமான திருநாமங்கள், வருகைக்கு அடி இன்னதென்கிறார் (நம்பெருமாள்) என்றுதொடங்கி. அதாவது: "இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்" என்னும்படி ஆசார்யர்களுக்கு அநுபாவ்யரான நம்பெருமாள். (நம்மாழ்வார்) "மூகில் வண்ண னடியிணையை யடைந்தருள் சூடியுய்ந்த". நம்மாழ்வார். (நஞ்சீயர்) நம்பெருமாள் குமாரரான பட்டராலே விஷயீக்ருதரான நஞ்சீயர். (நம்பிள்ளை) நஞ்சீயராலே விசேஷாபிமாநம் பண்ணப்பெற்றவராய், "நம்பிள்ளை கோஷ்டியோ? நம்பெருமாள் கோஷ்டியோ?" என்று விகல்பிக்கும்படி அத்தலைக்கு மங்களாசாஸநம் பண்ணுகைக்கு ஆள்தேடுகையால் வந்த மஹாஸம்ருத்தியையுடைய நம்பிள்ளை. (என்பர்) என்று சொல்லுவர்கள். (என்பரன்புடையோர்) என்று கூட்டக்கடவது. (அவரவர்தம் ஏற்றத்தால் அன்புடையோர் சாற்று திருநாமங்கள் தான் என்று) அவரவர்களுடைய ஆதிக்யத்தாலே அவர்களிடத்திலே அதிஸ்நேஹத்தையுடையவர்கள் அவர்கள் ஏற்றமறிந்து உகந்து சாத்தின திருநாமங்கள். (தானென்று) இவையும் சில அதிசயமான திருநாமங்கள் இருந்தபடி என்தான் என்று, (இன்றதனைச் சொல்லி நீ ஏத்து) என்று மேலே அந்வயம். (அன்புடையோர் சாத்துகை) யாவது: "இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்" என்றும் அருளிச்செய்தாரிறே. மூன்பொருகாலத்திலே ஒரு கலபையிலே க்ரூரராயிருப்பார் சிலர் பெருமாளையும் அத்தேசத்திலுண்டான எம்பெருமான்களையும் கொண்டுபோந்து, "கெட்டேன்" என்னும்படி வாரி, வடக்கே கொண்டுபோக,

அப்போது, பெருமாள் திருவடிகளுக்குப் போர நல்லராயிருக்கிற ராஜகண்ட கோபாலரென்கிற விண்ணப்பஞ்செய்வார், "எங்ஙனே தரிக்கேனுன்னைவிட்டு" என்கிறபடியே பெருமாளைப்பிரிய க்ஷமரன்றிக்கே "இருநிலங்கைதுழா" விக்கொண்டு போய், அங்கே சென்று, அவனைக்கண்டு தம்முடைய "நுடங்குகேள்வியிசை" என்னலாம்படியான பண்களாலே அவனைப் பண்படுத்த, அவனும் அதிப்ரீதனாய் உமக்கு வேண்டுவது என்னென்ன, "நம்முடைய பெருமாள் இங்கேவந்தார் அவரைத் தரவேணும்" என்ன, ஆகில் "கொண்டுபோம்" என்று பல விக்ரஹங்களையுங் கொண்டுவந்து காட்ட, அப்போது அவர்கள் நடுவே தேடிக்காணாமல், "சிந்திக்குந்திசைக்கும்" இத்யாதியிற்படியே க்லேசித்திருக்க, அப்போது அவனுடைய பெண்பிள்ளை அழகியமணவாளப் பெருமாளான இவரைத் தன் அந்த:புரத்திலே ஆதரித்துக்கொண்டுபோரா நிற்க, அச்சேதியை அறிந்த அவன் அவளை, அறியாமல் கொண்டுவந்து, "இவரோ உம்முடைய பெருமாள்" என்று காட்டிக்கொடுக்கக் கண்டு "ஶ்ரீரங்கநாத மம நாத—ஸ்ரீரங்கநாதமமநாத" என்றும், "அரங்கமாளியென்னாளி" என்றும், "என்னரங்கத்தின்னமுதர், குழலழகர்வாயழகர் கண்ணழகர்" என்றும் சொல்லுகிறபடியே அழகிய மணவாளப் பெருமாளை அதி ப்ரீதியுடனே "இவர்தாம் நம்பெருமாள்" என்றணைத்துக்கொண்டு, அதி த்வரையுடனே கோயிலேற எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தாரென்று ப்ரஸித்தமிறே. அப்போது அனைவரும் பெருமாள் அன்றென்று சங்கித்ததுக்கு ஆயி ஆழ்வார் பிள்ளையும் "இவர் நம்முடைய பெருமாளாம்" என்று மேலெழுத்திட்டருளினாராம். அன்றுதொடங்கி, அவர்க்கு அதுவே நிரூபகமாய்த்தென்றும் அருளிச்செய்வர்கள். இனி, நம்மாழ்வார் என்று திருநாமமாகைக்கு அடி, முற்காலத்திலே பெருமாள், அல்லாத ஆழ்வார்களிற் காட்டிலும் ஆழ்வாரை நம்மாழ்வார் என்று அபிமானித்தருளி, பெரிய திருவத்யயநத்துக்கும் அப்படியே திருமுகம் எழுதித் திருநகரிக்குப் போகவிட்டருளுவரென்றும் உண்டிறே. அதுவுமன்றிக்கே, ஒருகால் மலைநாட்டிலே பெருமாள் வலசையாக எழுந்தருளினபோது, மற்றும் உண்டான திருப்பதியில் எம்பெருமான்களும் ஆழ்வாரும் அங்கே யாத்ருச்சிகமாக ஸங்கதராக, அப்போது, பெருமாள், ஆழ்வாரை, "பல

ரடியார்முன்பருளிய" என்கிறபடியே மிகவும் க்ருபைபண்ணி யருளி, "நம்முடைய ஆழ்வார் நம்மருகேவாரும்" என்று தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸநத்திலே வைத்துக்கொண்டு, முத்தின் சட்டை, வட்டமணை முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்து, "தம்மையே யொக்க வருள்செய்தார்" என்றும் அருளிச்செய்து போருவர்கள். அத்தைப்பற்ற "நஞ்சடகோபனைப்பாடினையோ வென்று நம்பெருமாள் விஞ்சியவாதரத்தாற்கேட்ப" என்றுய்த்து அவனும் சொன்னது. அதுவுமன்றிக்கே, பெரிய முதலியார், மற்றை ஆழ்வார்களிற் காட்டில் அங்கே விசேஷ ப்ரதிபத்தி பண்ணி, த்வயபுரஸ்ஸரமாகத் திருவாய்மொழி முதலான ப்ரபந்தங்களையெல்லாம் அவர் ப்ரஸாதத்தாலே பெற்று, அந்த வ்யாவ்ருத்தி தோன்ற-நம்முடைய ஆசார்யர் என்னுமோபாதி "நம்முடைய ஆழ்வார்" என்றுய்த்து அபிமாநித்துக்கொண்டு போருவது. அத்தைப்பற்றவிறே "నఃకులపతేర్వకుళాభిరామం—ந:குலபதேர் வகுளாபிராமம்" என்று அருளிச்செய்தது. இனி நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் அநவரதபரிசீலநத்தாலே அபிஷிக்தரான நஞ்சீயருக்கு இக்காம மாகைக்கு அடி, இவர் பட்டர் திருவடிகளை ஆச்ரயித்த அநந்தரம், மேல்காட்டிலே ஸங்யஸித்து, அங்குண்டான ப்ரிக்ரஹங்களையடைய ஸவாஸநமாகப் பரித்யஜித்து, கோயிலேறவந்து, பட்டர் திருவடிகளிலே ஸேவித்து நிற்கக்கண்டு, போரவுமுகந்து "நம்முடைய ஜீயர்வந்தார்" என்று கட்டி எடுத்துக்கொண்டு உபலாலித்த அன்று தொடங்கி, வேதாந்திகளுக்கு "நஞ்சீயர்" என்று திருநாமமாய்த் தென்கை. இனி இவர்க்கு அத்யந்த அபிமதராய், நம்மாழ்வாருடைய அவதாரம் என்னலாம்படியான நம்பிள்ளைக்கு இத்திருநாமம் வந்தபடி-நஞ்சியர் திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிர க்ரந்த ஸங்க்யையாக ஒரு வ்யாக்யாநம் செய்தருளி, அந்தப் பட்டோலையை நன்றாக எழுதிக்கொண்டு வரும்படிக்குத் தம் திருவடிகளை ஆச்ரயித்த வரதராஜரான இவர் திருக்கையிலே கொடுத்தருள, இவர் ஊரேறப் போகிறபோது ஆற்றிலே ஒழுகிப்போக, பின்பு ஓர் அலேகத்திலே அதின்படி ஒன்றும்-தப்பாதபடி எழுதிக்கொண்டுவந்து, நஞ்சியர், ஸந்நிதியிலே வைக்க, அத்தை அவிழ்த்து, திருக்கண்சாத்தியருளி, அதுமிகவும் நன்றாயிருக்கையாலே, இது ஏது என்று கேட்ட

ருள, இவரும் தத் ஹேதுக்களை யெல்லாம் விண்ணப்பம் செய்யக் கேட்டு, இது ஒரு புத்தி விசேஷம் இருந்தபடி என்னென்று மிகவும் உகந்தருளி, "நம்முடைய பிள்ளை—திருக்கலிகன்றிதாஸர்" என்று அருளிச்செய்ய, அன்றுதொடங்கி, "நம்பிள்ளை" என்று திருநாமமான இது லோகப்ரஸித்தமிறே. (அவரவர்தமேற்றத்தால் அன்புடையோர் சாற்று திருநாமங்கள்) இதுவாய்த்து. (நன்னெஞ்சே) இந்தத் திருநாமங்களின் வாசியறிந்து, உகந்திருக்கிற நெஞ்சே! (ஏத்ததனைச் சொல்லி நீ யின்று) இந்தத் திருநாமங்களை அநுஸந்திக்கைக்கு ப்ராப்த காலமான இன்று, இதின் சுவடு அறிந்த நீ இவையும் சில திருநாமங்கள் இருந்தபடியே என்று வாயாரச்சொல்லி ஸ்தோத்ரம்பண்ணு. அநாதிகாலம் இத்தை அநுஸந்தியாத இழவு தீர ருசிபிறந்த இன்று "ప్రత్యక్షే గురవస్తుత్యాః—ப்ரத்யக்ஷே குரவஸ்துத்யா:" என்றும், "గురోర్నామసదాజపేత్—குரோர்நாமஸதாஜபேத்" என்றும் "சொல்லுவோமவன் நாமங்களே" என்றும் "என்மனம் ஏத்தியன்றி ஆற்றகில்லாது" என்றும் சொல்லுகிறபடியே ஸ்துதிரூபமான அநுகூல வ்ருத்தி பண்ணியே ஸ்வரூபம் பெறப்பார்.

ருக-ம் பாட்டு.

துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் தம்முகப்பால்
என்ன வுலகாரியரோ வென்றுரைக்கப்—பின்னை
உலகாரியனெனும்பேர் நம்பிள்ளைக்கோங்கி
விலகாமல்நின்றதென்றும் மேல்.

பதவுரை.

துன்னு-பொருந்திய, புகழ்-வைபவத்தையுடைய, கந்தாடைத்தோழப்பர்—, தம் உகப்பால்-தம்முடைய ப்ரீதியினாலே, என்ன-நீரென்ன, உலகாரியரோ-லோகாசாரியரோ? என்று உரைக்க-என்று சொன்னதினாலே, பின்னை-பிற்பட்டகாலத்தில், உலகாரியன் என்னும்-லோகாசார்யரென்னும், பேர்-திருநாமமானது நம்பிள்ளைக்கு—, ஓங்கி-விர்த்தியடைந்து, விலகாமல்-நீங்காமல் மேல்-மேலாக, நின்றது-நிலைபெற்றது.

வ்யாக்யானம்

ஐம்பத்தொன்றும்பாட்டு —இனி இவர்களில் தூர்யரான நம்பிள்ளைக்கு அதிலும் அத்யந்த விலக்ஷணமான லோகாசார்யர்

என்று திருநாமம் வருகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (துன்னுபுகழ் இத்யாதியால்). அவராகிறார், அபிஜந வித்யா வ்ருத்தங்களாலுண்டான யசஸ் ஸம்ருத்தியை யுடையராய், பச்சைவாரணப்பெருமாள் என்னும் திருநாமத்தை யுடையராய், முதலியாண்டானுடைய திருப்பேரனாராய் கந்தாடையாண்டானுடைய குமாரராய் இருப்பார் ஒருவரிறே. ஏவம்பூதரானவர், செய்தபடி சொல்லுகிறது: (தம்முகப்பால்) என்று. அதாவது, நம்பிள்ளையுடைய ஜ்ஞாந ஸம்ருத்தியையும், சிஷ்ய ஸம்பத்தையும் கண்டு, அஸஹிஷ்ணுவாய் அஸூயை கொண்டாடி அவரைப் பெருமாள் திருவோலக்கத்திலே பரிபவித்து, பின்பு, திருமாளிகையிலே எழுந்தருள அநுகூலையாயிருக்கிற அவர் தேவியார், இத்தைக்கேட்டு, அநுதாபஹேதுவாகச் சில வார்த்தை சொல்ல, அப்படி சொன்ன அவளுடைய வார்த்தையைக் கேட்டு, "ప్రమాదాద్బుద్ధితోవాపి యదాగః క్రియతే సతా అనుతప్తస్తతానేవ క్షామయేన్నన్యథా శమః—ப்ரமாதாத் புத்திதோவாபி யதாக:க்ரியதேஸதா அநுதப்தஸ்துதாநேவ க்ஷாமயேந்நாந்யதா சம:" என்கிறபடியே அஸூயையால் வந்த கலக்கம் தெளிந்து, அத்யந்தம் அநுதாபத்துடனே கெடுத்தவிடத்திலே தேடும்படி அவரை க்ஷாமணம் பண்ணுவதாக ஸஹகாரிகளுடனே புறப்பட்டுவர, அவ்வளவிலே, "అహోరపిసక్రోధ మర్చయన్నచ్యుతప్రియమ్ ప్రబోధ్యవివిధైర్యత్నైః ప్రాజ్ఞోధితః ప్రసాదయేత్-அஹோராபிஸக்ரோத மர்ச்சயந்நச்யுத ப்ரியம் ப்ரபோத்ய விவிதைர்யத்நை: ப்ராஜ்ஞோதித: ப்ரஸாதயேத்" என்கிறபடியே தம்மை உகப்பிப்பதாகத் தம் திருமாளிகை வாசலிலேவந்து, கைப்புடையிலே கிடக்கிற நம்பிள்ளையுடைய அத்யந்த நைச்யமான உக்தி வ்ருத்திகளைக் கண்டு, கேட்டு, மிகவும் ப்ரீதராய் இது ஒரு பரிமாற்றம் இருந்தபடி என் என்று தம்முடைய ஆதராதிசயத்தாலே இவரைப் பார்த்து, தேவரீர் இத்தனை நாளும் சிறிது பேர்க்கு ஆசார்யராய் இருந்தீர்; இப்போது லோகத்துக்கெல்லாம் ஆசார்யராக ப்ராப்தராகாநின்றீர் என்று, (என்ன உலகாரியரோ வென்றுரைக்க) என்ன லோகாசார்யரோ என்று அருளிச்செய்ய, "లోకాచార్యాభిధానం ధాతుః కలిజిద్దాససూరయే శ్యామేశస్య చరణా కరణైః శ్రీభరాత్రయే దయాయాందేవరాజస్య దాశరథ్యార్యసన్తతేః అభిష్టం

[illegible] [illegible] — லோகாசார்யாபிதாம்தாது: கலிஜித்தாஸ ஸஹ்ராயே ச்யாமேபேசஸ்யசரணௌ கரணை ஸ்த்ரிபிராச்ரயே தயாயாம் தேவராஜஸ்ய தாசரத்யார்ய ஸந்ததே: அபிவ்ருத்தி கரம்வந்தே ஹரிதத்விபதேசிகம்" என்னக்கடவதிறே. (பின்னை புலகாரிய னென்னும்பேர்) இத்யாதி. அப்படி அவராலே பேர் பெற்றபின்பு, லோகாசார்யர் என்னும் திருநாமம் உச்ச்ராயத்தை யுடைத்தாய், ஸர்வ லோகத்திலும் நம்பிள்ளைக்குப் பேராமல் நின் றது. ஆச்ரயம் போந்திருக்கையாலே பேரானது பேராமலிருக் கிறபடி. இத்தால் இவர் லோகாசார்யத்வம் கூரகுலத்திலவர்க ளும் வாதூல வம்சயரும் அநுவர்த்தித்து ஆச்ரயித்தபோதே ஸர்வ லோக ஸம்ப்ரதிபந்ந மென்றதாய்த்து. இப்பாட்டில் சொல்லு கிற அர்த்தமும் இதின் கீழ்மேல் சொல்லுகிற அர்த்தங்களும் எல்லாம் அந்திமோபாய நிஷ்டையிலே அஸ்மத் பரமாசார்ய ரான பெரிய பட்டர்பிரான் ஜீயர் ஸுஸ்பஷ்டமாக அருளிச்செய் தருளினர், அதிலே கண்டுகொள்வது.

ருஉ-ம் பாட்டு.

பின்னைவடக்குத் திருவீதிப்பிள்ளை யன்பால்
அன்னதிரு நாமத்தை யாதரித்து—மன்னுபுகழ்
மைந்தர்க்குச் சாத்துகையால் வந்து பரந்ததெங்கும்
இந்தத் திருநாம மிங்கு.

பதவுரை.

பின்னை-பிற்பாடு, வடக்குத்திருவீதிப்பிள்ளை-நம்பிள்ளை சிஷ்யரான வடக்குத்திருவீதிப்பிள்ளை, அன்பால்-ப்ரீதியினலே, அன்ன-அப்படிப்பட்ட, திருநாமத்தை—, ஆதரித்து-விரும்பி, மன்னு-நிலைபெற்ற, புகழ்-வைபவத் தையுடைய, மைந்தர்க்கு-தம்முடைய திருக்குமாரருக்கு, சாத்துகையால்-சாத்தினபடியாலே, இந்தத் திருநாமம்-இந்த லோகாசார்யர் என்னும் திரு நாமம், வந்து-க்ரமமாக வந்து, இங்கு-இவ்வுலகத்தில், எங்கும்-எவ்விடத் திலும், பரந்தது-பரவியது.

வ்யாக்யானம்.

ஐம்பத்திரண்டாம்பாட்டு.—இனி இந்த லோகாசார்யர் என் னும் திருநாமமானது லோகமெங்கும் வந்து பரந்தது இன்னத் தாலே யென்று தத் ஹேதுவை தர்சிப்பித்தருளுகிறார் (பின்னை) என்று தொடங்கி, அதாவது: நம்பிள்ளைக்கு லோகாசார்யர் [illegible] திருநாமம் நன்றாக நடந்து செல்லுகிற அக்காலத்திலே

அதிவிரக்தராய் ஆசார்ய கைங்கர்யமே அநவரதம் செய்து கொண்டு போருகிற வடக்குத்திருவீதிப்பிள்ளைக்குத் தந்நியோக மடியாக, தந் ஸம்வத்ஸரத்திலே ஒருகுமாரர், திருவவதரிக்க, அநந்தரம் ஆசார்யாபிமாந நிஷ்டரான அவர், (அன்பால் அன்ன திருநாமத்தை ஆதரித்து) அன்புடையோர் சாத்தப்பட்டதானை யாலே தாமும் அப்படியே அன்பாலே அவர் திருவடிகளில் ஸ்நே ஹத்தாலே அவாங் மநஸ வைபவமான அந்தத் திருநாமத்தை ஆதரித்து, (மன்னுபுகழ் மைந்தர்க்குச் சாத்துகையால்) திருநாமம் சாத்துகைக்குப் போரும்படியான பொருந்தின புகழையுடைய தம் குமாரருக்கு. அதாவது: நம்பூரு வரதருடையவும் திருவத்தியூர் வரதருடையவும் திருவவதாரமாகையாலே "ஏற்கும் பெரு புகழ்" உடைய தம் குமாரருக்கு. இப்படி மன்னுபெரும்புகழை யுடைய மஹாத்மாவான மைந்தர்க்கு அநுரூபமாகச் சாத்துகையாலே. இப்படி க்ருஷ்ணபாதராலே கீர்த்திக்கப்படுகையால் தந் ஸூநுவான இவருடைய இந்தத் திருநாமமானது, இங்கு எங்கும் வந்துபரந்தது. ஒருபேர் வெள்ளமிட்டபடி. இவருடைய இந்தப் பிள்ளைலோகாசார்யர் என்னும் திருநாமமானது இந்த லோகமடைய ஏறிப்பாய்ந்து, பரந்து பலித்தது. கிண்ணகம் உடைபட்டவாறே காடுமேடுகளெங்கும் வெள்ளம் பாய்ந்து பரக்குமா போலே இப்பேர் வெள்ளமானது, அஜ்ஞர் ஜ்ஞாநிகள் விபாகமற எல்லாரும் அறிந்து அநுஸந்தித்து, உஜ்ஜீவிக்கும்படி எங்கும் விஸ்த்ருதமாய்த்து. ஜீயர்தாமும் "வாழியுலகாசிரியன்" என்கிற திருநாமத்தைத் தாமும் பலகாலும் அநுஸந்தித்தருளி, தமக்கு அந்தரங்கரானவர்களுக்கு உஜ்ஜீவநத்துக்குடலாக உபதேசித்தருளியும் இதில் விமுகராயிருப்பாரையு முட்பட "இப்படி எளிதும் இனிதுமான திருநாமமிருக்க, இத்தை அநுஸந்தித்து உஜ்ஜீவியாமல் அநர்த்தப்பட்டுப் போவதே" என்று வெறுத்தருளு வராம்.

ருக-ம் பாட்டு.

அன்னபுகழ் முடும்பை யண்ண லுலகாசிரியன்
இன்னருளால் செய்தகலை யாவையிலும்—உன்னில்
திகழ் வசநபூடணத்தின் சீர்மை யொன்றுக்கில்லை
புகழல்லவிவ் வார்த்தை மெய்யிப்போது.

பதவுரை.

அன்ன-அத்தன்மையான, புகழ்-வைபவத்தையுடைய, மூடும்பை-மூடும்பை யென்னும் நகரத்துக்கு நிர்வாஹகராய், அண்ணல்-புருஷச்ரேஷ்டரான, உலகாசிரியன்-லோகாசார்யர், தம்முடைய, இன்-இனிமையான, அருளால்-க்ருபையாலே, செய்த-அருளிச்செய்த, கலை-சாஸ்த்ரங்கள், யாவையிலும்-எல்லாவற்றிலும், உன்னில்-யோசித்துப்பார்த்தால், திகழ்-விளங்குவதான, வசநபூடணத்தின்-ஸ்ரீவசநபூஷண மஹாசாஸ்த்ரத்தின், சீர்மை-வைபவம், ஒன்றுக்கு-வேறொரு சாஸ்த்ரத்துக்கு, இல்லை-இல்லையேயாகும், இப்போது—, இவ்வார்த்தை-நான் சொல்லும் இவ்வார்த்தை, புகழ் அல்ல-புகழ்ந்து சொல்லுவதல்ல, மெய்-ஸத்யமேயாகும்.

வ்யாக்யானம்.

ஐம்பத்துமூன்றும்பாட்டு.—இப்ப்ரபந்தாரம்பத்திலே "தாழ்வாதுமில்குரவர்" என்றும் "அவர்கள் உரைத்தவைகள்" என்றும் ஏதத் விவரணமான "ஆழ்வார்களேற்றம்" என்கிற பாட்டிலே "அவர்கள் செய்த வியாக்கியைகளுள்ளதெல்லாம்" என்றும் அருளிச்செய்தவற்றில், சேஷமானதான பிள்ளைலோகாசார்யருடைய வைபவத்தையும் அவராலே அருளிச்செய்யப்பட்டதாய் "வகுளபூஷண சாஸ்த்ரஸாரம்" என்றும் "[illegible]—ஸாங்காகில த்ரவிட ஸம்ஸ்க்ருதரூபவேதஸாரார்த்த ஸங்க்ரஹம்" என்றும் சொல்லுகிறபடியே திருவாய்மொழியினுடையவும் மற்றை அருளிச்செயல்களினுடையவும் அர்த்தத்தை ப்ரதிபாதிக்குமதாய் பூர்வோக்தமான அருளிச்செயல்களின் வ்யாக்யாந அர்த்தங்களையும் பொதிந்துகொண்டிருப்பதாய் அதுதான் பகவதபிப்ராயம் என்னுமது தோற்ற பகவதவதார விசேஷமான அவராலே அருளிச்செய்யப்பட்டதுமாய் ஸக்ரமமாக த்வயார்த்த ப்ரதிபாதகமுமாய் சரமபர்வ நிஷ்டையை முடிவாம்படி அத்தை முடிபோலே உடையதுமாய், அத்தாலே அஸத்ருசமாயிருப்பதான ஸ்ரீவசநபூஷணத்தினுடைய வைபவத்தையும் பஹுமுகமாக அருளிச்செய்வாரான இவர், இப்பாட்டில் இப்படி லோகாசார்யர் என்று லோகப்ரஸித்தரான இவர் லோகோஜ்ஜீவனார்த்தமாகத் தம்முடைய க்ருபையாலே செய்தருளின ரஹஸ்யப்ரபந்தங்களிற் காட்டில், ஸ்ரீவசநபூஷணத்துக்குண்டான சீர்மையை அருளிச்செய்கிறார் (அன்னபுகழ் மூடும்பையண்ணலுலகாசிரியன்) என்று. "[illegible]—தஸ்யநாமமஹத்யச:"

என்கிறபடியே திருநாமமடியாக வந்ததாயிருப்பதான எண்ணி றந்த யசஸ்ஸையுடையராய், "முடும்பையிறைவன்" என்னும் படி முடும்பை யென்னும் மாநகரத்துக்கு நிர்வாஹகரான லோகா சார்யர். அன்றிக்கே முடும்பை யுலகாசிரியனான அண்ணலென்னுதல். முடும்பை-குடிப்பேர். கீழே "ஈயுண்ணிமாதவர்" என்றாற்போலே இவரையும் (முடும்பையுலகாசிரியன்) என்கிறது. ஜ்ஞாநாதிகருடைய ஸம்பந்தமுள்ளது அடங்கலும் அடிக்கழஞ்சு பெற்றிருக்குமிறே. (உலகாசிரிய னின்னருளால் செய்தகலையாவை யிலும்) இவர் அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தம்முடைய அஹேதுக மான க்ருபையாலேயாய்த்து அசேஷ திவ்ய ப்ரபந்தங்களையும் அருளிச்செய்தது. அண்ணலான முறையாலேயிறே இவற்றை இன்னருளாலே செய்து போந்தது. அவைதான் அநேகங்களாகை யாலே (யாவை) என்னுமித்தனை. (யாவையிலும்) என்றதுக்கு இப் படி அருளிச்செய்த அசேஷ ரஹஸ்யங்களிலும் வைத்துக்கொண்டு, ஒரு ரஹஸ்யத்துக்கும். (உன்னில்) நன்றாக ஆராய்ந்து நிரூபிக்கில். (திகழ் வசநபூடணத்தின் சீர்மை யொன்றுக்கில்லை) அத்யுஜ்வலமான ஸ்ரீவசநபூஷணத்தினுடைய கௌரவம் ஒன்றுக் கில்லை. அவை பல என்னுங்காட்டில் அவற்றில் ஒன்றுதான் அர்த்த பூர்த்தியையுடைத்தான இதினுடைய பெருமைக்கு ஒப் பாகவல்லதோ? அதாவது: ஆர்ஷவசநங்களான அத்யாத்ம சாஸ் த்ரங்களிற் காட்டில், மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செயல்கள் மேலாய், அத்தைக்காட்டிலும் ஆழ்வார்கள் அருள்பெற்று அவர்கள் அருளிச்செயலில் தாத்பர்யங்களை வெளியிடுகிற ஆசார்யர்கள் திவ்ய ஸூக்திகள் மேலாய், அவற்றிற்காட் டிலும், ஆசார்யர்கள் அருளையுடைய இவருடைய மந்த்ராக்ர்ய மான திவ்ய ஸூக்திகளாயுள்ள அசேஷரஹஸ்யங்களும் மேலாய், அவற்றிற்காட்டிலும் அதிசயிதார்த்த கௌரவத்தை யுடைத்தாய், "இதிஹாஸ ச்ரேஷ்ட" இத்யாதியிற் படியே கீழ் உக்தமான அர்த்தங்களையும், அநுக்தமான அர்த்தங்களையும் ப்ரகாசிப்பித்துக் கொண்டிருக்கையால், வந்த பெருமையை யுடைத்தாகையாலே ஸ்ரீவசநபூஷணம் ஸ்வபர ப்ரபந்தங்கள் எல்லாவற்றிலும் அதிசயி தமாயிருக்கத் தட்டில்லை. ஆகையாலேயிறே இவர் இப்படி அஸக்ருதமாக அருளிச்செய்தது. ஆசார்யர்கள் திவ்யஸூக்தி

களிலும் இவர் திவ்ய ப்ரபந்தங்கள் அதிசயிதமாகிறது—இவற்றைக் கொண்டே அவற்றின் தாத்பர்யம் அறியவேண்டுகையாலே. (புகழலவிவ்வார்த்தை) "புகழ்வில்லை" என்னுமாபோலே இப் ப்ரபந்தத்தை விசேஷமாகச் சொல்லுகிற இவ்வார்த்தை கேவலம் அர்த்தவாதமாய் ஸ்துதிபரமாயிருப்ப தொன்றன்று. (மெய்யிப் போது) இப்போது இதின் வைலக்ஷண்யத்தை நிரூபித்துச் சொல்லுகிற இப்ப்ரபந்த விஷயமான வார்த்தை ஸத்யமே. இவர் தாம் பொய்யிலாதவ ராகையாலே (மெய்யிப்போது) என்று இவ்வர்த்தத்தினுடைய ஆப்திக்குடலாக ஸத்யம் பண்ணி ஸாதித் தருளுகிறார். (வசநபூடணத்தின் சீர்மை யொன்றுக்கில்லை.) என்கிற இவ்வார்த்தை (மெய்) "ஸத்யம் ஸத்யம்" என்னுமா போலே. இத்தால் இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் பல வென்னுமதுவும் அவற்றிலும் ஸ்ரீவசநபூஷணம் அஸத்ருசமான வைபவத்தையுடைய தென்னுமதுவும் த்யோதிப்பிக்கப்பட்டது.

ருச-ம் பாட்டு.

முன்னங்குரவோர் மொழிந்த வசநங்கள்
தன்னைமிகக் கொண்டுகற்றோர் தம்முயிர்க்கு—மின்னணியாச்
சேரச்சமைத்தவரே சீர்வசநபூடணமென்
பேரிக்கலைக்கிட்டார் பின்.

பதவுரை.

முன்னம்-முற்காலத்தில், குரவோர்-பூர்வாசார்யர்கள், மொழிந்த-அருளிச்செய்த, வசநங்கள் தன்னை-வசநங்களை, மிக-விசேஷமாக, கொண்டு-சேர்த்து, கற்றோர் தம்-வாசித் தறிந்தவர்களுடைய, உயிர்க்கு-ஆத்மாவுக்கு, மின்-ப்ரகாசமுடைய, அணியா-ஆபரணமாக, சேர-சேரும்படி, சமைத்து-செய்துவைத்து, அவரே-அந்தப் பிள்ளைலோகாசார்யர் தாமே, பின்-பிற்பாடு, சீர்-வைபவமுடைய, வசநபூடணம் என்-ஸ்ரீவசந பூஷணம் என்னும், பேர்-திருநாமத்தை, இக்கலைக்கு-இந்த மஹா சாஸ்த்ரத்துக்கு, இட்டார்-இட்டருளினர்.

வ்யாக்யாநம்.

ஐம்பத்துநாலாம்பாட்டு.—ஏவம்வித வைலக்ஷண்யத்தையுடைய இப்ப்ரபந்தத்துக்கு வக்தாவானவர் தாமே, தததநுகுணமாகத் திருநாமம் சாத்தினபடியை அருளிச்செய்கிறார், (முன்னங் குரவோர்) என்று தொடங்கி. அதாவது: பூர்வகாலத்திலே

பிள்ளை லோகாசார்யருக்கு அவ்வருகுண்டானவர்களாய், நமக்கு நாதரான பூர்வாசார்யர்கள், ஸர்வாத்மாக்களுடையவும், ஹிதத்தைக்குறித்து அருளிச்செய்த திவ்யஸூக்திகள் தன்னை மிகவும் தத் ப்ரசுரமாம்படி இதுக்கு ஆப்தப்ரமாணமாக அங்கீகரித்தாய்த்து இவர் இத்தை ப்ரபந்தீகரித்த தென்கை. (மொழிந்த வசநங்கள்) ஜ்ஞாதவ்யார்த்த ப்ரகாசகமாக அருளிச்செய்த திவ்ய வசநங்களை. அவர்கள் தாம் பலர் ஆகையால் ஆப்திக்குடலான அவர்கள் வசநங்களும் பலவாயிருக்கிறபடி. (வசநங்கள் தன்னை மிகக் கொண்டு) "ధర్మజ్ఞస్సమయః ప్రమాణం వేదాశ్చ—தர்மஜ்ஞஸ்ஸமய: ப்ரமாணம் வேதாச்ச" என்கிறபடியே அல்லாத ப்ரமாணங்கள் அநேகங்கள் உண்டாயிருக்கவும் அதில் அநுஷ்டாதாக்களான இவர்களுடைய மந்த்ராக்ர்யமான திவ்ய ஸூக்திகளாகையால் அத்தை இதுக்கு மூக்ய ப்ரமாணமாக அங்கீகரித்து, அந்த வசந ப்ரசுரமாயிறே இத்தை அருளிச்செய்தருளிற்று. ரத்நபூஷணம் சமைப்பார், பல ரத்நங்களை முந்துறச் சேர்த்துக்கொண்டு சமைக்குமாபோலே இவரும் வசநபூஷணம் சமைக்கிறவராகையாலே அர்த்தவத்தான வசநங்களை மிகவுங்கொண்டு கூட்டினபடி. "సువ్యాహృతాని మహతాం సుకృతాని తతస్తతః సఞ్చిన్వన్ధీర ఆసీత శిలహారీ శిలంయథా— ஸுவ்யாஹ்ருதாநி மஹதாம் ஸுக்ருதாநி ததஸ்தத: ஸஞ்சிந்வந்தீர ஆஸீத ஶிலஹாரீ ஶிலம்யதா" என்னக்கடவதிறே. இப்படி இவற்றைக் கொண்டு செய்கிறது ஆர்க்கு என்னில், (கற்றோர்தம் முயிர்க்கு) கற்றோர்க்கு வரிசைகொடுக்கைக்காக. அதாவது: தங்களுக்கு ஹிதைஷிகளாயிருக்கிற ஆசார்யர்களுடைய ஸந்நிதியிலே ஜ்ஞாதவ்ய ஸகலார்த்தங்களையும், நன்றாகக் கற்றுக்கேட்டிருக்கிறவர்களுடைய ஸ்வரூபத்துக்கு, "நின்திருவெட்டெழுத்துங்கற்று, அறியக்கற்று வல்லார்" என்னக்கடவதிறே. (மின்னணியா) ஏவம் விதரான அதிகாரிகளுடைய ஸ்வரூப ஔஜ்வல்யத்தை உண்டாக்கும்படியான ஒளியையுடைய பூஷணமாக. (உயிர்க்கு மின்னணியா) அநித்யமான உடலுக்கு பூஷணம் சமைப்பார் நடுவே இவர் நித்யமான உயிருக்கு பூஷணம் சமைத்தாரிறே. (உயிருக்கு மின்னணியா) கௌஸ்துபத்துக்கும் கௌஸ்துபமென்னலாம்படி யிருக்கை. "வைகுண்ட ப்ரியகண்ட பூஷண" மாயிறே இருப்பது. (மின்னணியாச் சேரச்சமைத்த

வரே) ஔஜ்வல்யரூபமான ஆபரணமாய்ச் சேரும்படியென்னுதல். ஸ்வரூபத்துக்குச் சேரும்படியென்னுதல். கீழ்ச்சொன்ன வசநங்களெல்லாம் அந்யோந்யம் ஸந்தர்ப்பமாம்படி சமைத்தவரே, பேரிட்டார். சமைக்க என்கிறது—பண்ண என்றபடி, “ஆரஞ்சமைக்க” என்றிறே இவர்கள் சாதிப்பேச்சிருப்பது. (சமைத்தவரே சீர்வசநபூடண மென் பேரிக்கலைக்கிட்டார்பின்) அதாவது: ஆபரண நிர்மாணகர்தாமே அந்த ஆபரணத்துக்கு அநுகுணமானதோர் அபிதாநத்தைக் கற்பிக்குமாபோலே வசந ஸந்தர்ப்ப ரூபமான வசநபூஷணத்தை நிர்மித்த அந்தப்பிள்ளை லோகாசார்யர்தாமே ஸ்ரீவசநபூஷணம் என்கிற இந்த அதிசயிதமான திருநாமத்தை இந்த ப்ரபந்தத்துக்கு சாத்தியருளினாரென்கை. (பின்) சேரச்சமைத்த பின் என்னுதல். அந்த ரஹஸ்யங்களை அருளிச்செய்த பின்பு என்னுதல். (அவரேபேரிட்டார்) “పితాపుత్రస్యనామకుర్యాత్—பிதாபுத்ரஸ்யநாமகுர்யாத்” என்கிறபடியே தமக்கு அதிசயமான திருநாமத்தைத் தமப்பனார் ஆதரித்துச் சாத்தினாற்போலே இத்தை ஈன்ற தாயான தாமும் அப்படியே இதுக்கு அதிசயமான திருநாமத்தைச் சாத்தியருளினாராய்த்து. இப்ப்ரபந்த மூலமாகவிறே இவருடைய ஜ்ஞாந ஸந்தாநம் அவிச்சிந்நமாய் நடந்து செல்லுகிறது. (வசநபூடணமென்பேர்) “ரத்ந ப்ரசுரமான பூஷணத்தை ரத்நபூஷணம் என்னுமாபோலே ஆசார்யவசந ப்ரசுரமாய் அநுஸந்தாதாக்களுக்கு ஔஜ்வல்யகரமாயிருக்கையாலே இதுக்கு வசநபூஷணம் என்று திருநாமமாய்த்து” என்று ஜீயர் தாமே இதின் வ்யாக்யாந ப்ரவேசத்திலே அருளிச்செய்தருளினாரிறே. (வசநபூடண மென்பேரிக்கலைக் கிட்டார்) இந்த “வசநபூஷண திவ்ய சாஸ்த்ர” த்துக்கு இப்படி திவ்யமாயிருப்பதொரு நாமத்தை நிர்த்தேசித்தருளினார். முகமறிந்தவன் கோத்த முத்துத்தாழ்வடத்தை “இதொரு கோவை இருந்தபடி என்” என்று அதின் வாசி அறிந்தவர்கள் கொண்டாடுமாபோலே இதுவும் “వాఙ్మణిసరగ్రైవేయభూషాత్మకం—வாங்மணிஸரக்ரை வேயபூஷாத்மகம்” என்னும்படி வசந ஸந்தர்ப்பத்தை யுடைத்தாகையாலே. (இக்கலை) என்று இவர்க்கு ஈடுபாடாயிருக்கிறது.

ருரு-ம் பாட்டு.

ஆர்வசந பூடணத்தி னாழ்பொரு ளெல்லாமறிவார்
ஆரதுசொன்னேரி லநுட்டிப்பார்—ஓரொருவர்
உண்டாகி லத்தனைகா ணுள்ளமே யெல்லார்க்கும்
அண்டாத தன்றோ வது.

பதவுரை.

உள்ளமே-மனமே, வசநபூடணத்தின்-ஸ்ரீவசநபூஷண மஹா சாஸ்த்ரத்தின், ஆழ்பொருள் எல்லாம்-கம்பீரமான அர்த்தவிசேஷங்களை யெல்லாம், அறிவார்-அறிந்துகொள்ளுமவர்கள், ஆர்-ஆரிருக்கிறார்கள்? அது-அந்த ஸ்ரீவசநபூஷணம், சொல்-சொல்லுகிற, நேரில்-க்ரமத்திலே, அநுட்டிப்பார்-அநுஷ்டிக்குமவர்கள், ஆர்-ஆரிருக்கிறார்கள்? ஓரொருவர்-அதின் பொருளையறிந்து அவ்வாறே அநுஷ்டிக்குமவர் எங்கேனும் ஓரொருவர், உண்டாகில்-உண்டாயிருப்பார்களானால், அத்தனைகாண்-அவ்வளவேயுள்ளது, அது-அதின்பொருளை அறிந்து அநுஷ்டித்தல், எல்லார்க்கும்-எல்லாருக்குமே, அண்டாதது அன்றோ-கிட்டாததல்லவோ?

வ்யாக்யாநம்.

ஐம்பத்தஞ்சாம்பாட்டு.—கீழ் வசநபூஷணம் என்று திருநாமம் சாத்தும்படியான இதின் பெருமையை அருளிச்செய்தார். இதில் ஏதத் அர்த்த தர்சிகளுடையவும் ஏதத் ப்ரதிபாத்ய அநுஷ்டாதாக்களுடையவும் அருமையைத் தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார். (ஆர்வசநபூடணத்தி னாழ்பொருளெல்லா மறிவாரார்) ஸ்ரீவசநபூஷணத்தினுடைய அகாதமான அர்த்தத்தை அதிலே அவகாஹித்து உள்புகுந்து உள்ளதெல்லாம் அறிவாரார்? எத்தனை அதிசயித ஜ்ஞாநராயிருப்பார்க்கும் இத்தை ஸ்வயத்நத்தாலே அறியவென்றால் துரவகாஹமுமாய் துஸ்தரமுமாயிறே யிருப்பது. முதலடியிலே அல்லாதவற்றில் இதுக்குண்டான வாசியறிந்து, இத்தைப் பாடம் பண்ணுவார், அரிதாயிருக்கும். அதொருபடி செய்தார்களாகில், அர்த்தமறிகை அரிதாயிருக்கும். அதுவும் பெருவருத்தத்தோடே கூட மேலெழ ஒருபடி சிறிது அறிந்தார்களாகிலும் ஆழ்பொருளெல்லா மறிவார் மிகவும் தேட்டமாயிறே யிருப்பது. (ஆழ்பொருள்) ரத்நாகரமானது, "மலைகளும் மாமணியும் மலர்மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற அலைகடல்" என்னும்படி ஆழ்கடலான தனக்குள்ளே

மணிமுக்தாதிகளான சிறிய பதார்த்தங்களைக் கொண்டிருக்கும்; அதுக்கு தேசிகரான முழுக்குவரிறே முழுகியெடுப்பார். மற்றை யார்க்குக் கரையருகும் செல்லவொண்ணாதாயிருக்கும். அப்ப டியே "வசநபூஷணவாரிராசி" யான இதுவும் "மிக்கவேதியர் வேதத்தினுட்பொரு" ளான "ஆசார்யாபிமாநமே உத்தாரகம்" என்கிற அகாத அர்த்தத்தை யுடைத்தாயிருக்கும். இதுவும் "அறிவித்தே ஆழ்பொருளை" என்னும்படி, தேசிகர் அறிவித்தா லாய்த்து அறியலாவது: "వాక్యసంగతిరిత్యాది శ్రుతం. వినామహతామప్యశ క్యాని—வாக்யஸங்கதி ரித்யாதி ச்ருதம்விநா மஹதாமப்யசக்யாநி" என்றிறே அறிகையிலுள்ள அருமையிருப்பது. அங்கும் "செழுங் கடலமுதினிற்பிறந்த" அவள் ப்ரயோஜநமாயிருக்கும். இங்கும் "புருஷகாரவைபவம்" தொடங்கி, "ஆசார்யாபிமாநம்" ஈறாக ஆறு ப்ரகரணத்தாலும் சொல்லுகிற அர்த்தங்களெல்லாம் ஆழ் பொருள்களாய் இருந்ததேயாகிலும் சரம ப்ரகரணத்தில், சரமோ பாயத்துக்குச் சேஷமாயிறே யிருப்பது. ஆகையிறே, "திருமா மகள் தன் சீரருளேற்றமும்" என்று தொடங்கி, "மன்னியவின்ப முமாகதியுங் குருவென்னு நிலைபெறு மின்பொருடன்னையும்" என் றிறே பொருள் முடிவாக அருளிச்செய்தது. பெருவிலையனான ஆபரணத்துக்கு நாயகக்கல் போலேயாய்த்து, வசநபூஷணத்துக்கு இப்ப்ரதேசம் நாயகரத்நமாயிருக்கும்படி. "இத்தனையும் அரு ளிச்செய்கையைப் பற்ற அதிஷ்டிக்கையிட்டுக் கொண்டுவந்தது. கீழ் அடங்கலும் மேல் அங்கலும் இதின் நிஷ்டையை ஸ்தாபிக் கிறது" என்றிறே "ஆசார்யாபிமாநமே உத்தாரகம்" என்கிற இடத்துக்கு ஜீயர் வ்யாக்யாநம் செய்தருளிற்று. ஆகையால் இதுவே ஆழ்பொருளாகக்கடவது. "வேதமொருநான்கினுட் பொருள்தந்த மெய்ப்பொருள்" என்று தொடங்கி, "தீதில்சரணா கதிதந்த தன்னிறைவன் றாளேயரணாகு மென்னுமது" என்றிறே அருளிச்செய்தார். அன்றிக்கே, "பேறுதருவிக்குமவள் தன் பெருமை" என்றுதொடங்கி, "நல்குருவின் வண்மையோ டெல் லாம் வசநபூடணமதில் தேறிடநமக்கரு" ளுகையாலே, ஆறு ப்ர கரணத்தில் உக்தமான அசேஷார்த்தங்களும் ஒரு சேதநனுடைய உஜ்ஜீவநத்துக்கு ஒன்றோன்றே ஜ்ஞாதவ்யமாக வேண்டுகையாலே, எல்லாம் ஆராய்ந்தறியவேணுமென்று (ஆழ்பொருள்) என்கிறு

ராகவுமாம். முந்தின யோஜனையில், (ஆழ்பொருளெல்லாம்) என்கிறதுக்குச் சேர, மற்றை அர்த்தங்களெல்லாம் ஆச்ரயணவிதி சேஷங்களாய் அறியப்படுமேதாயிருக்கும். தன்னை அறியும்போது, உக்தலக்ஷணயுக்தனான தான் என்றறியவேணும். ஆசார்யனை அறியும்போது ஆறு ப்ரகரணத்தாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற ஷட்பத நிஷ்டனாக அறியவேணும். ஆகையால், ஆழ்பொருளெல்லாம் அறியவேணும், இதில் அர்த்தங்கள்தான் சாப்தமாக மேலெழத் தோன்றியிருந்ததே யாகிலும் இதுக்கெல்லாம் "ஸர்வார்த்தாந்விபரீதாம்ச" என்னும்படி விபரீதார்த்தத்தைக் கற்பித்து, அநர்த்தத்தைச் சூழ்த்துக்கொள்வார் ஒழிந்து, இதில் யதார்த்த ஜ்ஞாநத்தையுடையராய், இத்தை விச்வஸித்து, உஜ்ஜீவிப்பார் அரிதாயிறே யிருப்பது. "ஆமாறறிவுடையாராவதரிதன்றே" என்னக்கடவதிறே. ஆகையாலே, (அறிவாரார்) என்கிறார். இனிமேல் இதின் அநுஷ்டாதாக்களின் அருமையை அறிவிக்கிறது (ஆது சொன்னெறி லநுட்டிப்பார்) என்று. அறிவாரைக்கிடைக்கை அரிதாயிருக்க, அநுஷ்டிப்பாரைக் கிடைக்கை அரிது என்னுமிடம் சொல்லவேணுமோ? அநுஷ்டாநமாவது: அதற்காம் நிலையிலே நிற்கை. அதாவது: "மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்கிற ஆசார்யாபிமாந நிஷ்டையை உடையராயிருக்கை யென்கை. அதில் ஸர்வார்த்தமும் ஸங்க்ரஹிதமாயிறே யிருப்பது. (அது சொன்னெறி லநுட்டிப்பாரார்) தத் விபரீதங்களை அநுஷ்டித்துப் போருமதொழிய ததுக்தார்த்தத்தின்படி நேரே நெறியே ஆசரித்துப் போருவாரார்? வசநபூஷண வழியிலே வழிபடுவார் உண்டாவது அரிதாயிறே யிருப்பது. அல்லாத சாஸ்த்ரங்களை அறிந்து அநுஷ்டிப்பார் உண்டாகிலும், இந்த திவ்ய சாஸ்த்ரத்தின்படி அநுஷ்டிப்பார் அரிதிறே. ஆகையாலே அருளிச்செய்தவர் தாமே, அதின்படியாய் "ஊனமற ஆசரித்திருக்கும் நாளை நினைந்து" என்று அந்தப் பரம ரஹஸ்ய ப்ரதிபாதகமான அர்த்தத்தின்படி அஸங்குசிதமாக அநுஷ்டிக்கும்படியையும் தத் பலமாக ஆசார்யாநுஸ்மரணத்தையும் அருளிச்செய்தாரிறே. இதின் ஆழ்பொருளை யறிந்தும் அது சொன்னெறி லநுஷ்டித்தும் போருவார், உலகாரியனருள் தப்பாமலெய்திய தரத்தையுடைய ஜீயர் தாம் ஒருவருமிறே யுள்ளது.

இனி இந்த மஹாப்ருதிவியிலே எல்லாம் ஸம்பாவிதங்களா யிருக்கத் தாத்ருசரான இவர்களைக் கிட்டாதோவென்று தம் திருவுள்ளத்துக்குக் கருத்தாக, (ஓரொருவ ருண்டாகி லத்தனைகா ணுள்ளமே) என்கிறார். இத்தை அறியவும் அநுஷ்டிக்கவும் அருமருந்துபோல ஓரொரு மஹாத்மாக்கள் உண்டாகில், உண்டாமத்தனைகாண். (ஓரொருவர்) ப்ரதிவாதி பயங்கரமண்ணனும் அவர்க்கு ஸப்ரஹ்மசாரிகளாய் செந்தமிழ்சேர் பட்டர்பிரான் ஜீயரன்றித் தேவுமற்றறியாத அழகியமணவாள ஜீயரும், தத் பரதந்த்ரரிறே. "அண்ணனை யெண்ணில் மற்றொருவரை யெண்ணுதென்னணிவிரலே" என்று ஸ்ரீவைஷ்ணவ தாஸரான அண்ணுமதிக்கும்படியான மதுரகவிதாஸர், அண்ணன்போல்வார் ஒருவர் உண்டாகில் உண்டா மத்தனை. "స మహాత్మా సుదుర్లభః-ஸமஹாத்மாஸுதுர்லப:" என்றும் "సుదుర్లభా భాగవతా హి లోకే-ஸுதுர்லபா பாகவதாஹிலோகே" என்றும், "తత్రాపి దుర్లభం మన్యే వైకుంఠప్రియదర్శనం-தத்ராபிதுர்லபம் மந்யே வைகுண்ட ப்ரியதர்சநம்" என்றும் சொல்லுகிறபடியே பகவத் பராயிருப்பார்கள்தான் தேட்டமாயிறேயிருப்பது. இனி அநுகூலரான ஆசார்யபரதந்த்ரர் அத்யந்த அபூர்வராயிறேயிருப்பது. பகவத் பாரதந்த்ர்யத்துக்கு "రామో రామో రామ ఇతి-ராமோ ராமோ ராம இதி" என்று ஒரு நாடாக உண்டாய்த்து. ஆசார்ய பாரதந்த்ர்யத்துக்கு பரதாநுஜரான ஸ்ரீசத்ருக்நாழ்வான் ஒருவரிறேயுள்ளது. "உண்டபோதொரு வார்த்தையும், உண்ணாதபோதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே, அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவருண்டிறே. வடுகநம்பி ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையரென்பர்." என்றிப்படி "గురుభక్తోత్తమోత్తమః-குருபக்தோத்த மோத்தம:" என்னும்படி குருபக்தராகையாலே உத்தமோத்தமராய் ஸ்ரீமாங்களான அதிகாரிகள் ஓரொருவரையிறே அருளிச்செய்தது. (உண்டாகில்) என்கிற யதிசப்தத்தாலே ஓரொருத்தர் தானும் துர்லபமென்று தோற்றுகிறது. இப்படி அலப்யலாபமானது கிட்டிற்றாகில் அவ்வளவு காண். (உள்ளமே) வசநபூஷண பூஷிதமான மநஸ்ஸே! அதில் அகாதமான அர்த்தத்தை அறிந்து, தநுக்தமான அநுஷ்டாநத்தையும் ஆசரித்துக்கொண்டு போருமவர்களை ஆதரித்துக்கொண்டு

போருவாய் நீயேயன்றோ? என்? ஓரொருத்தர்க்கொழிய எல்லார்க்கும் இது உண்டாகாதோ என்ன, (எல்லார்க்கு மண்டாததன்றோவது) தாங்களும் தங்களிலே வைஷ்ணவர்கள் என்றிருக்கில், எல்லார்க்கும் அதில் கம்பீரமான அர்த்தத்தை ஸ்வயத்நரூப ஜ்ஞாநத்தாலே அறியவும், தத்ப்ரதிபாத்யமான விலக்ஷணாநுஷ்டாநத்தை ஸ்வயத்நரூபமான சக்தியாலே அநுஷ்டிக்கவும் அசக்யமாயிருப்ப தொன்றன்றோ? (அண்டாதது) அடங்காதது. அத்தாலும் அசக்யமானது என்றபடி. ஆர்க்கும் அந்நேர் நிற்கை அரிதாயிறே யிருப்பது. (அது) என்று அர்த்தத்தில் துரவகாஹத்வமும் அநுஷ்டாநத்தில் அசக்யத்வமும் தோற்றியிருக்கிறது. "లోకాచార్యకృతే లోకహితే వచనభూషణే-తత్త్వార్థదర్శినో లోకే తన్నిష్ఠాశ్చ సుదుర్లభాః-జగదాచార్యరచితే శ్రీమద్వచనభూషణే తత్త్వజ్ఞానం చ తన్నిష్ఠాం దేహి నాథ యతీంద్ర మే—லோகாசார்யக்ருதே லோகஹிதே வசநபூஷணே தத்வார்த்த தர்சிநோ லோகே தந்நிஷ்டாச்ச ஸுதுர்லபா: ஜகதாசார்யரசிதே ஸ்ரீமத் வசநபூஷணே தத்வஜ்ஞாநஞ்சதந்நிஷ்டாம் தேஹிநாத யதீந்த்ர மே" என்றும் சொல்லக்கடவதிறே.

௫௬-ம் பாட்டு.

உய்ய நினைவுடையீ ருங்களுக்குச் சொல்லுகின்றேன்
வையகுரு முன்னம்வாய்மொழிந்த—செய்யகலை
யாம்வசந பூடணத்தி னாழ்பொருளைக் கற்றதனுக்
காம்நிலையில் நில்லுமறிந்து.

பதவுரை.

உய்ய-உஜ்ஜீவிக்கும்படியாக, நினைவு உடையீர்-எண்ணமுடையவர்களே! உங்களுக்குச் சொல்லுகின்றேன்—, வையகுரு-பிள்ளை லோகாசார்யர், முன்னம்-முற்காலத்தில், வாய்மொழிந்த-அருளிச்செய்த, செய்ய-செவ்வையான, கலை ஆம்-சாஸ்த்ரமாகிய, வசநபூடணத்தின்-ஸ்ரீவசநபூஷணத்தின், ஆழ்-கம்பீரமான, பொருளை-அர்த்தவிசேஷங்களை, கற்று-அப்யஸித்து, அதனுக்கு-அப்படி கற்றதற்கு, ஆம்-தகுந்ததான, நிலையில்-அநுஷ்டாநத்திலே, அறிந்து-தெளிவுடனே, நில்லும்-நிற்பீர்களாக.

வ்யாக்யாநம்.

ஐம்பத்தாறும்பாட்டு.—கீழ் "ஓரொருவருண்டாகிலத்தனை காணுள்ளமே" என்னும்படி அதிகாரிகள் ஸங்குசிதராயிருக்கிறபடி.

யைக்கண்டு, ஸர்வரும் வசநபூஷண அதிகாரிகளாம்படி திருத்து வோமென்று, திருவுள்ளம்பற்றி அபிமுகராயிருக்கிறவர்கள் ஆபி முக்யமே பற்றாசாக இதில் அர்த்தநிஷ்டையுடையராம்படி அவர் களைக் குறித்துப் பரோபதேசம் பண்ணியருளுகிறார். (உய்ய நினை வுடையீர்) உஜ்ஜீவிக்க வேணுமென்கிற மநஸ்ஸையுடையவர்களே, "மநமுடையீர்" என்கிறபடியே மநஸ்ஸஹகாரமாகிற ஸம்பத்தை யுடைய நீங்கள் இந்த ஸம்பத்தின்மேலே எந்த அதிகாரத்தை ஆர் ஜித்துக்கொள்ளப் போகிறீர்கோள். ஈச்வரன் படியைப் பார்த்தா லும் ஆபிமுக்யத்துக்கு அவ்வருகே "அந்யந்நபேக்ஷதே—அங்யங்நபேச் சதி" என்னும்படியிறே இருப்பது. திருமந்த்ரத்தினுடைய தாத் பர்யமான இப்ப்ரபந்த அப்யாஸ அநுஷ்டாநங்களுக்கும் ச்ரத்தை யேயிறே வேண்டுவது. ஆகையால் இவ்வளவு ஆநுகூல்யமுடைய (உங்களுக்குச் சொல்லுகின்றேன்) உங்கள் உஜ்ஜீவநத்திலே ஊன்றியிருக்கிற நான் உங்கள் கார்யம் பலிக்குந்தனையும் இந்தப் பரமார்த்தத்தைச் சொல்லாநிற்கிறேன். சொல்ல உபக்ரமித்தல் சொல்லிமுடித்தல் செய்யவில்லை. நீங்கள் அதிலே நிலைநிற்குந் தனையும் நான் சொல்லுகைதவிரேன். ஆகில் நீர் சொல்லப்புகு கிற அந்த ரஹஸ்யந்தான் ஏது என்னில், (வையகுரு முன்னம் வாய்மொழிந்த) பூர்வாசார்யர்களைப்போலே அர்த்தத்தின் சீர்மை யைப் பார்த்து, ரஹஸ்யமாக உபதேசித்துக்கொண்டு போருகை யன்றிக்கே, பிள்ளை லோகாசார்யர் தம்முடைய கரைபுரண்ட க்ருபையாலே பின்புள்ளாரும் உஜ்ஜீவிக்கும்படி முற்காலத்திலே "மொழிபட்டோடும்" என்னும்படி தம்முடைய அநுபவத்துக்குப் போக்குவீடாக அருளிச்செய்தருளின. (செய்யகலையாம் வசந பூடணத்தி னாழ்பொருளை) அநுகூலர்க்கு ஸ்வார்த்த ப்ரகாசத் தைப்பண்ணிக் கொண்டிருப்பதான ஆர்ஜவத்தையுடைத்தாய் சாஸ்த்ரரூபமாயிருப்பதான ஸ்ரீவசநபூஷணத்தினுடைய கம்பீர மான அர்த்தத்தை. (கற்று) ஸத்ஸம்ப்ரதாய நிஷ்டரான ஸதா சார்யர்கள் ஸந்நிதியிலே அவர்கள் அப்யஸிப்பிக்க அப்யஸித்து, தத் பலமாக (அதனுக்காம் நிலையில் நில்லுமறிந்து) அந்த அப்யஸ் தமான அர்த்தத்துக்கு அநுகுணமான நிஷ்டையிலே அதினு டைய கௌரவத்தையறிந்து நில்லுங்கோள். உங்களுக்கு உஜ்ஜீ வநம் ஸித்திக்கும். (ஆழ்பொருளைக் கற்றதனுக்காம் நிலையில்

நிற்கை) யாவது: "ஆசார்யாபிமாநமே உத்தாரகம்" என்கிற அகாத அர்த்தத்தை ஸ்வாசார்யர்கள் ஸந்நிதியிலே ஸேவித்து அதின் கௌரவத்தையறிந்து அதுக்கு அநுகுணமான நிஷ்டையிலே நிஷ்டராயிருக்கை யென்றபடி. "கேட்டிருக்கையாயிருக்கும்" என்றும் "கேட்டிருப்பார்" என்றும் சொல்லக்கடவதிறே. இத்தால் ஸ்ரீவசநபூஷணார்த்த நிஷ்டையே உஜ்ஜீவந மென்றதாய்த்து.

ருஎ-ம் பாட்டு.

தேசிகர்பால் கேட்ட செழும் பொருளைச் சிந்தைதன்னில்
மாசறவே யூன்றிமனனஞ்செய்—தாசரிக்க
வல்லார்கள் தாம்வசந பூடணத்தின் வான்பொருளைக்
கல்லாத தென்னோ கவர்ந்து.

பதவுரை.

தேசிகர்பால் - ஆசார்யர்களிடத்தில், கேட்ட - தாங்கள் கேட்ட, செழும்-செழுமையான, பொருளை-அர்த்தவிசேஷங்களை, சிந்தைதன்னில், மனத்தில், மாசு அற-தோஷம் நீங்கும்படி, ஊன்றி-ஸ்திரப்படுத்தி. மனனம் செய்து-சிந்தனை பண்ணி, ஆசரிக்க வல்லார்கள் தாம்-அநுஷ்டிக்கவல்லவர்கள் தாங்கள், வசநபூடணத்தின்-ஸ்ரீவசநபூஷணத்தின், வான்-உயர்ந்த, பொருளை-அர்த்தவிசேஷங்களை, கவர்ந்து-அபேக்ஷையுடனே, கல்லாதது-கற்காதது, என்னோ-யாதுக்காகவோ ?

வ்யாக்யாநம்.

ஐம்பத்தேழாம்பாட்டு.—"கற்றதனுக்காம் நிலையில் நில்லுமறிந்து" என்று அந்வயத்தாலே இதில் அர்த்தத்தை ஸ்தாபித்தவர், (கல்லாததென்னோ கவர்ந்து) என்று வ்யதிரேகத்தாலும் இதில் அர்த்தத்தை ஸ்தாபித்தருளுவாராய், அபிமுகராய், செய்திரேமென்று ஆறியிருந்த, கீழிலவர்களைக் குறித்து, இவர்கள் இத்தை அபிநிவேசத்துடன் அதிகரியாமைக்கு அடியொன்றும் காண்கிறிலோமென்று, ஸ்வவிசாரமாகப் பேசியருளுகிறார். (தேசிகர்பால் கேட்டசெழும்பொருளை) ஸ்வபர ஹிதபரராயிருக்கிற தேசிகர்கள் ஸந்நிதியிலே "ப்ரச்நகால ப்ரதீக்ஷ"ராய், ச்ரவித்த ச்லாக்யமான அர்த்தத்தை (சிந்தைதன்னில் மாசறவே) ஸம்சயவிபர்யய ரூபமான மநோமாலிந்யாதிகள் ஸவாஸநமாகப் போம்படி. (ஊன்றமனனஞ்செய்து) "ச்ருதஸ்யார்த்தஸ்ய யுக்த்யாநுசிந்தநம் மநநம்-ச்ருதஸ்

யார்த்தஸ்ய யுக்திதோநு சிந்தநம்மநநம்" என்கிறபடியே அந்த ச்ருதமான அர்த்தத்தை ஹ்ருத்கதமாக "மாசற்றுல்மனனம்" என்னும்படி மநநம்பண்ணி. (ஆசரிக்கவல்லார் தாம்) உத்தமான அநுஷ்டாநத்தில், ஒன்றும் நழுவாமல், ஆசரிக்கவல்ல சக்தியை யுடைய தாங்கள். (வசநபூடணத்தின் வான்பொருளை) தங்கள் அநுஷ்டாநத்துக்கு அநுக்ரமணிபோலே யிருக்கிற ஸ்ரீவசநபூஷணத்தினுடைய சீரியதான அர்த்தத்தை, கனத்தபொருளை. (கல்லாத தென்னோ கவர்ந்து) குருவான அர்த்தத்தை குருக்கள் ஸந்நிதியிலே அபிநிவேசத்துடன் இவர்கள் அதிகரியாமைக்கு ஹேது வென்னோ? "மாநிதியாம் வசநபூடண முண்டே அதின்படியை யூனமறவாசரித்து" என்னும்படி மஹா நிதிபோலேயிருக்கிற இத்தைப் பெற்றுவைத்து, அந்தன் நிதிகண்டாற்போலே அபேக்ஷையோடே அதிகரிக்கவேண்டியிருக்க, அத்தை உபேக்ஷித்து, "வரில்பொகடேன், கெடில் தேடேன்" என்றிருக்கிறது ஏதோ? இவர்கள் தங்களுக்கு ஜ்ஞாந சக்த்யாதிகள் உண்டாய் இதுக்கு அர்த்த பூர்த்தியும் உண்டாயிருக்க, இத்தை மேல்விழுந்து மண்டி அதிகரியாமைக்கு அடியறிய அரிதாயிருக்கிறது. அறிகைக்கும் அநுஷ்டிக்கைக்கும் ஈடான ஜ்ஞாந சக்திகள் தங்களுக்கு இல்லை யென்ன வொண்ணாது. அநுஷ்டேயார்த்த ப்ரகாசகமான இதுக்கு அர்த்தபூர்த்தி இல்லையென்ன வொண்ணாது. ஆயிருக்க, இப்படி யிருக்கிறது அபிநிவேசமாந்த்யமிறே என்றத்தைத் தாம் நிரூபிக்கிற முகத்தாலே இது உண்டாம்படி திருத்தியருளுகிறார். "[Grantha script]—கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத்" என்னும்படி சாஸ்த்ராநுஷ்டாந யோக்யமாயிறே மநுஷ்ய ஜந்மந்தானிருப்பது. இத்தால் இவ்வர்த்தம் பெற்றபோது பெறுகிறோமென்று ஆறியிராமல் ஸத்வரராய் ஸமக்ரமான இச்சையாலே ஸாதித்தறிய வேணுமென்று கருத்து.

ருஅ-ம் பாட்டு.

சச்சம்பிரதாயந் தாமுடையோர் கேட்டக்கால்
மெச்சும் வியாக்கியைதா னுண்டாகில்—நச்சி
அதிகரியு நீர் வசந பூட்டணத்துக் கற்ற
மதியுடையீர் மத்தியஸ்தராய்.

பதவுரை.

சச்சம்பிரதாயம் தாம் உடையோர்-ஸத்ஸம்ப்ரதாயத்தில் அந்வயமுடையவர்கள், கேட்டக்கால்-கேட்பார்களாளுல், மெச்சும்-யாவரும்புகழும், வியாக்கியைதான்-வ்யாக்யாநம் தான், உண்டாகில்-உண்டாயிருக்குமாளுல், நச்சி-விரும்பி, வசநபூடணத்துக்கு-ஸ்ரீவசநபூஷணத்துக்கு, அற்ற-தீர்ந்த, மதி உடையீர்-அறிவுடையீரான, நீர்-நீங்கள், மத்தியத்தராய்-நடுநிலைமையுடைய மத்யஸ்தராய், அதிகரியும்-அறிந்துகொள்வீர்களாக.

வ்யாக்யாநம்.

ஐம்பத்தெட்டாம்பாட்டு.—"உய்ய நினைவுடையீர் என்று கீழே இவராலே உபதேசிக்கப்பட்டவர்கள் இந்த உபதேசம், பலித்தவாறே, "வசநபூடணத்தி ளுழ்பொருளைக்கற்று" என்றும் "வசநபூடணத்தின் வான்பொருளைக் கல்லாததென்னே" என்றும் இப்படி அதின் அர்த்தத்தை நாங்களும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி அந்வய வ்யதிரேகங்களாலே பலகாலும் அருளிச் செய்யாநின்றீர், நாங்கள் அதில் அர்த்தக்ரஹணம் பண்ணும் உபாயம் என்னென்ன, ஆகில், ஸத்ஸம்ப்ரதாய நிஷ்டராலே ச்லாகநீயமான வ்யாக்யாநம் உண்டாகில் அத்தை அதிகரித்து அம்முகத்தாலே அறியுங்கோள் என்கிருர். அன்றிக்கே, அபேக்ஷாநிரபேக்ஷமான தத் அர்த்தவிஷயமாக வ்யாக்யாநம் உண்டாகில் அத்தையும் நிருபணமுகேந அறிந்து ஆதரியுங்கோள் என்கிருராகவுமாம். (சச்சம்பிரதாயந் தாமுடையோர் கேட்டக்கால்) அதாவது "ஓதி ஓதுவித்து ஆதியாய்வரும்" என்கிறபடியே விச்சேதியாத ஸத்ஸம்ப்ரதாயத்திலே ஸம்பந்தத்தையுடையராய், தம்மைப்போலே, "వాక్యాలఙ్కృత వాక్యాని వ్యాఖ్యాతారమ్—வாக்யாலங்க்ருத வாக்யாநி வ்யாக்யாதாரம்" என்றும் "వాక్యసఙ్గతివాక్యార్థ తాత్పర్యాణియథాశ్రుతం వ్యాకుర్వన్నేవపూర్వేషాం వర్తమానఃపదేపదే స్వమనీషికయానైవ కల్పయన్కిఞ్చిదప్యయమ్ క్లుప్తాన్సర్వాన్గురుత్వేన కూటార్థానదీదృశత్—வாக்ய ஸங்கதி வாக்யார்த்த தாத்பர்யாணியதாச்ருதம் வ்யாகுர்வந்நேவபூர்வேஷாம் வர்த்தமாந: பதேபதே ஸ்வமநீஷிகயாநைவ கல்பயந்கிஞ்சிதப்யயம் குப்தாந்ஸர்வாந்குருத்வேந கூடார்த்தாநதீத்ருசத்" என்றும் சொல்லுகிறபடியே வசநபூஷண வ்யாக்யாந விசக்ஷணராய் ஆசார்ய ஸந்நிதியிலே அநவரத ச்ரவணத்தை யுடையராயிருக்குமவர்கள் ச்ரவித்தக்காலென்கை. ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களெல்லாம் விசதமாகக்

கைவந்திருக்கும்படியான மதிப்பையுடையரா யிருக்கும் தாங்கள் கேட்டக்கால், (மெச்சும் வியாக்கியைதானுண்டாகில்) அதாவது: ஸீதாசரிதமான ஸ்ரீராமாயணத்தைக் கேட்ட விசேஷஜ்ஞரெல்லாம் "అహోగీతస్యమాహాత్మ్యమ్—அஹோ கீதஸ்யமாஹாத்ம்யம்" என்று ஆதரித்தாற்போலேயும் "செவிக்கினிய செஞ்சொல்" ஆன திருவாய்மொழியை "கேட்டாரார் வானவர்கள்" என்னுமாபோலேயும் சுத்தஸம்ப்ரதாய ப்ரவர்த்தகரானவர்கள் இத்தைக்கேட்டு இதுவும் ஒரு வ்யாக்யாந மிருந்தபடியே என்று ஈடுபட்டுக்கேட்குமதான வ்யாக்யாநம் தானுண்டாகில். அன்றிக்கே, (மெச்சும் வியாக்கியைதான்) என்று மதிப்பரானவர்கள் மதிக்கும்படியான வியாக்கியைதான் என்னவுமாம். (வசநபூடணத்துக்கற்ற மதியுடையீர்) என்று வசநபூஷணத்திலே அற்றுத்தீர்ந்த மதியுடையீர் என்னவுமாம். "వచోభూషావ్యాఖ్యా రుచిర వరయోగీంద్ర రచితా వచోభిస్సర్వేషాం వరనిగమసారైస్సుబహుళా గంభీరా వాక్యార్థైరపి ఫలితసత్సంగతిగణైః ప్రసన్నాసేస్వార్థం ప్రకటయతు తస్యైవ కృపయా—வசோபூஷா வ்யாக்யா ருசிர வரயோகீந்த்ர ரசிதா வசோபிஸ்ஸர்வேஷாம் வரநிகமஸாரைஸ் ஸுபஹுளா கம்பீரா வாக்யார்த்தைரபி பலிதஸத்ஸங்கதி கணை: ப்ரஸந்நாமே ஸ்வார்த்தம் ப்ரகடயது தஸ்யைவ க்ருபயா" என்னக்கடவதிறே. (ஆகில்) என்கிற யதிசப்தத்தாலே அதினுடைய தௌர்லப்யம் தோற்றுகிறது. இப்படி அலப்யமானது லபித்ததாகில், (நச்சியதிகரியும் நீர்) வசநபூஷணாதிகாரிகளாய் உஜ்ஜீவிக்க வேணுமென்கிற இச்சையையுடைய நீங்கள் இத்தை விருப்பத்துடனே அதிகரியுங்கோள். "கல்லாதவென்னோ கவர்ந்து" என்னவேண்டாத படியாய்த்து இப்போது இவர்க்கு. (வசநபூடணத்துக்கற்ற) வசநபூஷணத்துக்கு மெச்சும் வியாக்கியையாய் இருக்குமதானவற்றை. (மதியுடையீர் மத்தியத்தராய்) நச்சி அதிகரிக்குமிடத்து, விவேகபரிகரமான மநஸ்ஸையுடைய நீங்கள் மத்யஸ்தபாவனையாலே அர்த்தத்தின் சீர்மையை ஆராய்ந்து பார்த்து, உங்கள் அதிகாரபூர்த்திக்கு உடலாக அதிகரியுங்கோள். இத்தால் ஸத்ஸம்ப்ரதாய ஸம்யுக்தரான ஆசார்யர்களாலே ஆதரணீயமான வ்யாக்யாநமே ஸத்பரிக்ராஹ்ய மென்றதாய்த்து. (சச்சம்பிரதாயந் தாமுடையோர் கேட்டக்கால் மெச்சும் வியாக்கியைதான்) என்றது நாலூராச்சான் பிள்ளை ஸந்நிதி

யிலே திருவாய்மொழி ஈடுதொடங்கி அதின் தாத்பர்யமான ஸ்ரீவசநபூஷணார்த்தத்தையும் திருநாராயண புரத்தில் ஆய், திருவாய்மொழியாசார்யர், ஆயி சிஷ்யரான நல்லப்பநாயன் இவர்களை தர்சிப்பிக்கிறது. "மாறில் முடும்பையுலகாரியன் வசனக்கலனும், மாறன்கருத்தின் மணவாளன் வார்த்தையும் வல்லிருக்கைச், சிறும்படி திருத்தாழ்வரைத்தாதன் றெரிக்கெனக்குத், தேறும்படியுரைத்தான் றிருத்தாள்களென் சென்னியதே" என்றும், "ఆచార్య హృత్సంజ్ఞనిబన్ధనస్య వ్యాఖ్యామకార్షీత్ - ஆசார்ய ஹ்ருத்ஸம்ஜ்ஞ நிபந்தநஸ்ய வ்யாக்யாமகார்ஷீத்" என்றும் சொல்லக்கடவதிறே. ஸ்ரீவசநபூஷண ஆசார்ய ஹ்ருதயங்களாகிற திவ்ய ப்ரபந்தங்களுக்கு ப்ரதம வ்யாக்யாநம் செய்தவர் திருநாராயண புரத்தில் ஆயியிறே. அவரை அடியொத்தியிறே மற்றை வ்யாக்யாநங்கள் உண்டானது. அவர்களோபாதி நாலூராச்சான் பிள்ளை அவர் ஸந்நிதியிலே திருவாய்மொழி ஈடு தொடக்கமான ஸகல ப்ரபந்தங்களுக்கும் ஸ்ரீவசநபூஷணாதி திவ்ய ரஹஸ்யங்களுக்கும் அர்த்தம் கேட்டார் என்று ப்ரஸித்தமிறே. அவரும் ஒரு வ்யாக்யாநம் ஸ்ரீவசநபூஷணத்துக்குப் பண்ணினாரென்னுமதுவும் ப்ரஸித்தமிறே. "అధిష్ఠిత * చతుర్గ్రామాచార్యదేవ పతేర్గురోః సాహార్థై ర్లేఖరేయేన సర్వేచ ద్రావిడాగమాః—அதிஷ்டித * சதுர்க்ராமாசார்ய தேவபதேர்குரோ: ஸாஹார்த்தைர் லேபிரே யேந ஸர்வேச த்ராவிடாகமா:" என்னக்கடவதிறே.

ருகூ-ம் பாட்டு.

சீர்வசநபூடணத்தின் செம்பொருளைச் சிந்தைதன்னால்
தேறிலுமாம் வாய்கொண்டு செப்பிலுமாம்—ஆரியர்காள்
என்றனக்கு நாளு மினிதாகா நின்றதையோ
உந்தமக்கெவ்வின்ப முளதாம்.

பதவுரை.

ஆரியர்காள்-ஆரியர்களே! சீர்-வைபவத்தையுடைய, வசநபூடணத்தின்-ஸ்ரீவசநபூஷண மஹா சாஸ்த்ரத்தின், செம்-செவ்வையான, பொருளை-அர்த்தவிசேஷங்களை, தேறிலுமாம்-அறிந்தாலும், வாய்கொண்டு-வாயைக்கொண்டு, செப்பிலுமாம்-சொன்னாலும், என்றனக்கு-எனக்கு, நாளும்-எப்போதும், இனிது ஆகாநின்றது - இனிமையுடையதாயிராநின்றது,

* சதுர்க்ராமாசார்ய தேவபதி என்பது நாலூராச்சான் பிள்ளையை.

ஐயோ!—உந்தமக்கு-உங்களுக்கு, எவ்வின்பமுளதாம்-எவ்விதமான இன்பமுடையதாயிருக்கும்.

வ்யாக்யாநம்.

ஐம்பத்தொன்பதாம்பாட்டு.— "ஸ்ரீவசநபூஷணமாம் தெய்வக்குளிகை பெற்றோம் பாருலகைப் பொன்னுலகாப் பார்க்கவல்லோம்" என்கிறபடியே தம்முடைய பரமக்ருபையாலே பரோபதேசம் பண்ணி ஸத்கார ஸஹவாஸ யோக்யராணரையும் திருத்தி, இனி தம் உபதேச நிரபேக்ஷமாகவே திருந்தின ஸதாநுபவ யோக்யரான ஆசார்யர்களைப் பார்த்து இதின் ரஸ்யதையை அவர்களுடனே பேசி அநுபவிக்கிறார். அன்றிக்கே தம் உபதேசம் கேட்டுத் திருந்தினவர்களை (ஆரியர்காள்!) என்று கௌரவ்யதை தோற்ற அருளிச்செய்கிறாராகவுமாம். "ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள் பண்டே" என்றும் "ஆரியர்காள் கூறும்" என்றும் அருளிச்செய்தாற்போலே இவர்தாம் தம்முடைய சிஷ்ய ப்ரசிஷ்யர்களை மத்குரு என்றும் நம் இறைவரென்றுமிறே அருளிச்செய்து போருவது. (ஸ்ரீவசந பூடணத்தின் செம்பொருளை) அந்யர்க்கு ஆழ்பொருளாய் அரிதாய் இருக்குமது தமக்குச் "செம்பொருள்" என்று செவ்விதாயிருக்கிறபடி. (செம்பொருளைச் சிந்தைதன்னால் தேறிலுமாம் வாய்கொண்டு செப்பிலுமாம்) நெஞ்சாலே நிரூபிக்கிலுமாம்; வாக்காலே அநுஸந்திக்கிலுமாம். இதில் ஒரு நிர்ப்பந்தமில்லை. ஏதேனும் ஒரு காரணத்தாலே அநுஸந்திக்கப் பெறிலும் நித்யாபூர்வமான போக்யமாயிருக்கும். "ஸாரார்த்தஸங்க்ரஹம்—ஸாரார்த்தஸங்க்ரஹம்" ஆகையாலே ஸதாநுஸந்தாநம் பண்ணுகிற மநஸ்ஸுக்கு இனிதாயிருக்கும். "மஹாரஸவாக்யஜாதம்—மஹாரஸவாக்யஜாதம்" ஆகையாலே வாக்குக்கு இனிதாயிருக்கும். இவர், மனத்தாலும் வாயாலும் கவர்ந்து அநுபவிக்கிறார். கீழிலவர்களையிறே கல்லுங்கோள்! சொல்லுங்கோள்! என்று விதிக்கவேண்டுவது. தமக்கு அங்ஙனன்றிக்கே, இது பள்ளமடையாயிருக்கிறபடி. "கற்றதனுக்காம் நிலையில் நில்லும்," "சிந்தை தன்னால் கல்லாததென்னோ கவர்ந்து" என்னக்கடவதிறே. (ஆரியர்காள் என்றனக்கு நாளும் இனிதாகா நின்றதையோ) "செஞ்சொற்கவிகாள்" என்னுமாபோலே இதில் அநுபவத்துக்கு தேசிகராயிருக்குமவர்களே! என்கிறார். (என்றனக்கு நாளும் இனி

தாகாநின்றது) உங்களைப்போலே பேரளவுடையன் அன்றிக்கே, "அடியேன் சிறியஞானத்தன்" என்கிறபடியே, அத்யல்ப ஜ்ஞாநத்தை யுடையனாயிருக்கிற எனக்கு. "அப்பொழுதைக் கப்பொழுதென் னாராவமுதமே" என்கிறபடியே "தொண்டர்க்கமுது" ஆன வகுளபூஷண வாகம்ருதத்தினுடைய ஸாரமான வசநபூஷணமானது நித்யாபூர்வமுமாய் நிரதிசயபோக்யமுமாய் இராநின்றது. "விதிவாய்க்கின்று காப்பாரா ரய்யோ" என்னுமாபோலே ஹர்ஷப்ரகர்ஷத்தா லுண்டாமதொரு பாசுரம் (ஆரியர்காளுந்தமக் கெவ்வின்பமுளதாம்) ஆர்யபோகமாயிருக்கிற இதடியாகத் ததேகபோகராயிருக்கிற உங்களுக்கு எவ்வளவு ஆநந்தம் உண்டாம். அங்கே உண்டான ஆநந்தம் இவர்க்கு இதடியாக இங்கே உண்டாகிறபடி. அதுதான் "இன்பமிகுவிண்ணா" டிறே. (உந்தமக்கெவ் வின்பமுளதாம்) எனக்கு என்னளவிலே யாயிருக்குமாபோலே உங்களுக்கும் உங்கள் அளவுகளிலே யாயிராதோ? "వైదేహి రమసే కచ్చిచ్చిత్రకూటే మయా సహ - வைதேஹி ரமஸே கச்சிச்சித்ரகூடே மயா ஸஹ" என்னுமாபோலே "சிஷ்யனைக்கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற்போலே" கண்டு, அவர்களோடே அதில் அநுபவ ரஸ்யதையை அநுபாஷித்தருளுகிறு ராகவுமாம். இதுதான் "எங்ஙனே சொல்லிலுமின்பம் பயக்கும்" திருவாய்மொழியில்படியாய்த்து. இத்தால் இதினுடைய நிரதிசய போக்யதாதிசயத்தால் உண்டான வைபவம் சொல்லிற்றாய்த்து.

௬0-ம் பாட்டு.

தன்குருவின் றாளிணைகள் தன்னிலன்பொன் றில்லாதார்
அன்புதன்பால் செய்தாலு மம்புயைகோன்—இன்பமிகு
விண்ணாடுதானளிக்க வேண்டியிரா னாதலால்
நண்ணாரவர்கள் திருநாடு.

பதவுரை.

தன்குருவின்-தன் ஆசார்யனுடைய, தாள் இணைகள் தன்னில்-திருவடிகள் இரண்டில், அன்பு ஒன்று இல்லாதார்-ப்ரீதி சிறிதும் இல்லாதவர்கள், தன்பால்-ஈச்வரனான தன்னிடத்தில், அன்பு செய்தாலும்-பக்தி செய்தாலும், அம்புயைகோன் தான்-கமலவாஸிநியான பெரிய பிராட்டியாருக்கு நாயகனான எம்பெருமான்தான், இன்பம் மிகு-இன்பம் அதிகரித்த, விண்ணாடு-பரமபதத்தை, அளிக்க-கொடுப்பதற்கு, வேண்டிரான்-இச்சையு

டையனு யிருக்கமாட்டான், ஆதலால்—, அவர்கள்-ஆசார்ய ப்ரேமமில்லாதவர்கள், திருநாடு-பரமபதத்தை, நண்ணார்-அடையமாட்டார்கள்.

வ்யாக்யாநம்.

அறுபதாம்பாட்டு.—ஆகக் கீழ் பிள்ளை லோகாசார்யராலே நிர்மிதமான ரஹஸ்யங்களில், ஸ்ரீவசநபூஷணத்துக் குண்டான அப்ரதிம வைபவத்தையும் அதுக்கு ஸ்ரீவசநபூஷணமென்று திருநாமமாகைக்கு அடியையும் ஏதத் அர்த்தாபிஜ்ஞரும் அநுஷ்டாதாக்களும் ஏகைக புருஷரென்னுமத்தையும் ஏதத் அர்த்த க்ரஹணவிஷயமாகப் பரோபதேசம் பண்ணியருளியும் இதின் அர்த்தத்தை அபிநிவேசத்துடன் அதிகரியாமைக்கு ஹேது சிந்தனையும் ஏதத் விஷயமாக விலக்ஷண பரிக்ரஹ வ்யாக்யாநம் உண்டாகில் அது அங்கீகாரம் என்னுமத்தையும் இதுதான் ஸ்வபர விபாகமற நிரதிசய போக்யமாயிருக்கு மென்னுமத்தையும் தர்சிப்பித்தாராய் நின்றார். இனி வசநபூஷணமாகிற இத்திவ்ய ப்ரபந்தத்திலே "வேதார்த்த மறுதியிடுவது" என்றுதொடங்கி, "அத்தாலே அது முற்பட்டது" என்னுமளவாக, ப்ரதிபாத்ய அர்த்தங்களுக்கெல்லாம் ப்ரமாணங்களை ஒருங்கவிட்டு, "இதிஹாஸ ச்ரேஷ்டம்" என்றுதொடங்கி, "ஸ்வதந்த்ரனை உபாயமாகத் தான்பற்றினபோதிறே இப்ப்ரஸங்கந்தானுள்ளது" என்று உக்தார்த்தத்தை இதுக்குக் கீழ் நிகமித்து, "அவர்களைச் சிரித்திருப்பா ரொருவருண்டிறே அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக்கடவோம்." என்று சரம ப்ரமேயத்துக்குச் சரம ப்ரமாணத்தை ஒருங்கவிட்டாற்போலே இவரும் அருளிச்செயல்களினுடையவும் ஏதத் வ்யாக்யாநங்களினுடையவும், தாத்பர்யரூபமாய் சரம ப்ரகரண பர்யந்தமான அந்த வசநபூஷணத்தைக் கீழ் அடங்கலும் அருளிச்செய்த அர்த்தங்களுக்கும் மேல் அருளிச்செய்யப்புகுகிற சரமபர்வ நிஷ்டாக்ரமங்களுக்கும் ஆப்ததமமான ப்ரமாணமாக அங்கீகரித்தபடியே அதில் தாத்பர்யமான சரமபர்வ நிஷ்டாக்ரமங்களைச் சரமத்திலே இப்பாட்டுத்தொடங்கி, மேலெல்லாம் தர்சிப்பித்தருளுகிறார். இதில் முதல் பாட்டில் தங்களுக்கு அஸாதாரண சேஷியான ஆசார்யன் விஷயத்தில் அல்பமும் பக்தியின்றிக்கே யிருக்குமவர்கள் ஸாதாரண சேஷியான ஸர்வேச்வரன் விஷயத்திலே பக்தியைப்பண்ணிலும், பக்தி க்ருதனை அவன்

ருன் அவர்களுக்கு ப்ராப்ய லாபத்தைப்பண்ண இச்சித்திரான் ஆகையாலே அவர்கள் ப்ராப்யத்தை ப்ராபியார்கள் என்கிறார். (தன் குருவின் றாளிணைகள் தன்னில) "மருளாமிருளோட மத்த கத்துத் தன்றா ளருளாலே வைத்தவவ" ராய், தனக்கு வகுத்த விஷயமான ஆசார்யனுடைய அங்க்ரியுகளந்தன்னிலே யாய்த்து ப்ரபத்திபண்ண ப்ராப்தம். "ஆவன்றாளையே யுன்னுவதே சாலவுறும்" என்றிறே இருப்பது. ஆகையால் "...—தஸ்மாத்பக்திர்குரௌகார்யா" என்கிறபடியே, அவன் விஷயத்திலே அதி ஸ்நேஹத்தைப் பண்ணவேண்டியிருக்க, அத்தைச்செய்யாதே, (அன்பொன்றில்லாதார்) பக்த்யைகதேசமு மில்லாதார். "அந்தாமத்தன்பு செய்து" என்று ஈச்வரனுங்கூட அதிஸ்நேஹம் பண்ணும் விஷயத்திலே யாய்த்து இவர்கள் அபிநிவேசலேசமும் இன்றிக்கே யொழிகிறது. அது இன்றிக்கே யொழிந்தால் ஆவதென்? பகவத்பக்தி யுண்டானால் என்ன, (அன்புதன்பால் செய்தாலும்) ஸ்வ விஷயத்திலே பக்தி ஜநகனானவன் இடத்திலன்றிக்கே, அன்பனான தன் விஷயத்திலே அன்பைச்செய்தாலும், "பிறர்க்கரிய வின்னபாதகத்தி" என்றும் "அரும்பெறலன்பு" என்றும், சொல்லும்படியான பெறுதற்கரிதான பக்தியை, சரம பர்வ விஷயத்திலன்றிக்கே, ப்ரதம பர்வமான ஸ்வவிஷயத்திலே பரிபூர்ணமாகப் பண்ணினாலும் அப்படிப்பட்டவர்கள், தன் ப்ரஸாதத்துக்குப் பாத்ரமன்றிக்கே யொழிகையால் (அம்புயைகோன் இன்பமிகு விண்ணாடுதானளிக்க வேண்டியிரான்) ஆசார்ய விஷயீகாரமடியாக உண்டான பிராட்டி புருஷகாரபலத்தாலே "ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு, வானங்கொடுக்குமவனான மாதவன்" ஆசார்ய விஷயத்தில் ஆதரம் மட்டமாயிருக்குமவர்களுக்கு ப்ராப்ய ப்ரதாநத்தில், ப்ரீதியின்றியிலே யொழியும். (ஆதலால் நண்ணாரவர்கள் திருநாடு) இப்படி கொடுக்குமவன் கொடாதொழிந்தால், "தெளிவிசும்பு திருநாடு" ஆன ப்ராப்யதேசத்தை ப்ராபியார்கள். "ப்ராப்யலாபம் ப்ராபகத்தாலே" என்னக்கடவதிறே. (இன்பமிகு விண்ணாடு) "அந்தமில் பேரின்பம்" என்றும் "நலமந்தமில்லதோர் நாடு" என்றும் சொல்லுகிறபடியே நிரதிசயாநந்த மயமான ஸ்ரீவைகுண்டத்தை ஸ்வவிஷயத்தில் ஆபிமுக்யலேசமே பார்த்து, மோக்ஷ ப்ரதாநத்திலே

நிக்ஷித்திருக்குமவன்றான், அவர்கள் விஷயத்தில் ஔதார்யத்தைப் பண்ண இச்சியான். (விண்ணாடு தானளிக்க வேண்டியிரான்) தான் விண்ணாட்டில் சாலவிரும்பும் விஷயத்தில் விருப்பமின்றிக்கே யொழிகையால், பரம வ்யோம சப்தாபிதேயமான பரம பதத்தை அநுக்ரஹிக்க இச்சியான். ஆகையால் "கிடந்த ஊழியான் பாதம் மருவாதார்க்குண்டாமோ வான்" என்கிறபடியே அவர்களுக்குத் திருநாடு ஸித்திக்கை அரிதாயிருக்கும். "வானவர் நாட்டை நீ கண்டுகொள்" என்று கொடுக்கும் உதாரனானவன் தான் கொடுக்க இச்சியாதொழிந்தால் இவர்களுக்கு ப்ராப்யத்தை ப்ராபிக்க விரகென்? "இழந்தேபோம் இத்தனையென்று மனத்துயிர்க்கும்" இத்யாதி. இத்தால் "ஆசார்ய ஸம்பந்தங்குலையாதே கிடந்தால்" என்றுதொடங்கி "இத்தை யொழிய பகவத் ஸம்பந்தம் துர்லபம்" என்னுமளவும் அருளிச்செய்த அர்த்தம் ப்ரதிபாதிக்கப்பட்டது.

சூக-ம் பாட்டு.

ஞான மனுட்டான மிவை நன்றாகவேயுடைய
னானகுருவை யடைந்தக்கால்—மாநிலத்தீர்
தேனார்கமலத் திருமாமகள் கொழுநன்
றானே வைகுந்தந் தரும்.

பதவுரை.

ஞானம்-ஜ்ஞாநமும், அனுட்டானம்-அநுஷ்டாநமும், இவை-ஆகிய இவைகள், நன்றாகவே-செம்மையாகவே, உடையனான-உண்டானவனான, குருவை-ஆசார்யனை, அடைந்தக்கால்-ஆச்ரயித்தால், மாநிலத்தீர்-பெரிய பூமியிலுள்ளவர்களே! தேன் ஆர்-தேன் பொருந்திய, கமலம்-தாமரைப் புஷ்பத்திலிருக்கும், திருமாமகள் கேள்வன்-பெரிய பிராட்டியாருக்கு நாயகனான எம்பெருமான், தானே—, வைகுந்தம்-ஸ்ரீவைகுண்டத்தை, தரும்-கொடுப்பன்.

வ்யாக்யாநம்.

அறுபத்தொன்றாம்பாட்டு.—இனி கேவல ஸதாசார்ய ஸம்பந்த மாத்ரத்தாலே ஸ்ரீயப்பதியான ஸர்வேச்வரன்றானே, ஸ்ரீவைகுண்டத்தைத் தந்தருளுமென்கிறார். (ஞானமனுட்டாநம்) இத்யாதியால். ஞானமாவது: உபாய அத்யவஸாய ரூபமாயும் உபேயத்வரா விஷயமாயும் உண்டான அறிவு. அனுட்டானமாவது:

ததநுகுணமாக "அலர்மேல் மங்கையுறை மார்பா உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்றும் "வழுவிலாவடிமை செய்ய வேண்டும்" என்றும், "நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக்கொண்டருளே" என்றும் சொல்லப்படுகிற உபாயோபேய அநுஷ்டாநமென்கை. இதிறே வாக்ய த்வயத்தில் ப்ரதிபாதிக்கிறது. ஆகையால் ஷட்பத நிஷ்டனான ஸதாசார்யனையிறே இங்கு ஸமாச்ரயணீயனாக அருளிச்செய்கிறது. "இவனுக்காகத் தான் உபாயாநுஷ்டாநம் பண்ணி ரக்ஷிக்கவல்ல மஹாபாகவதன்" ஆகவேணுமிறே. (இவை) "இவையன்றே நல்ல இவையன்றே தீய இவையென்றிவை யறிவனேலும்" என்கிறபடியே ஸதஸத் விவேக பரிகரமான ஜ்ஞாநமென்றத்தாலே விடுமவற்றை விட்டு, பற்றுமவற்றைப் பற்றியும் போருகிற த்யாஜ்யோபாதேய ரூபமாயிருக்கிற அநுஷ்டாநங்களென்கிற இவையாகவுமாம். "ஆசார்யனுக்கடையாள மறிவுமநுஷ்டாநமும்" என்றும் "விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் வாஞ்சையும்" என்றிறே ஆசார்யர்கள் அருளிச்செய்தது. "స్వజ్ఞానం ప్రాపకజ్ఞానం ప్రాప్యజ్ఞానం ముముక్షుభిః జ్ఞానత్రయముపాదేయం—ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி: ஜ்ஞாந த்ரயமுபாதேயம்" என்னும்படி ஸ்வரூபாநுரூபமான உபாயோபேய விஷயஜ்ஞாநம். இப்படி த்வயார்த்த ப்ரதிபாதகமான ஸ்ரீவசநபூஷணத்தினுடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களை. (நன்றாகவேயுடையனான குருவை) இவற்றால் பரிபூர்ணனா யிருப்பானொரு பரம ஸத்வ நிஷ்டனை ஆச்ரயித்தாலாய்த்து கார்யகரமாவது. இவற்றில் ஒன்று குறையிலும் ஆச்ரயிக்குமவனுக்கு அந்த ஆச்ரயணபலம் தலைக்கட்டாது. காட்டுத் தீ சூழ்ந்தவிடத்து, அந்தனும் பங்குவும் கூடியிருந்தால் அப்ரயோஜகமாயிறேயிருப்பது. சக்ஷுஷ்மானுமாய், சரணவானுமாயிருப்பான் ஒருவனாலேயிறே அத்தைத் தப்பிப் பிழைக்கலாவது. ஆகையால் அநுஷ்டாந ஹீநமான ஜ்ஞாநமும் ஜ்ஞாநஹீநமான அநுஷ்டாநமும் அகிஞ்சித்கரமிறே. "జ్ఞానహీనం గురుం ప్రాప్య—ஜ்ஞாந ஹீநம் குரும்ப்ராப்ய" என்று தொடங்கி, "యథా పారం న గచ్ఛతి—யதா பாரம் நகச்சதி" என்னக்கடவதிறே. கண்ணும் காலும் உண்டானாலிறே ஒருவனைக் கரை யேற்றலாவது. "అన్ధేనస్వప్రయాణవత్—அங்

தோகந்த க்ரஹணவசக" இத்யாதி. "தன்னை அக்கரையேற்ற வல்ல ஜ்ஞாநாதி பரிபூர்ணனாயிருப்பானொருவன்" என்றிறே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்ததும். ஆகையாலே அஸங்குசித ஜ்ஞாநாநுஷ்டாநங்களை உடையவர்களையாய்த்து ஆசார்யர்களாக ஆச்ரயிப்பது. (குருவையடைந்தக்கால்) அஜ்ஞாந நிவர்த்தகனாய் ஆசாரப்ரவர்த்தகனாயிருக்கிற ஆசார்யனை "உபாயோபேய பாவேந தமேவ சரணம் வ்ரஜேத்—உபாயோபேய பாவேந தமேவசரணம் வ்ரஜேத்" என்கிறபடியே தனக்கு ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவும் அத்யவஸித்து ஆச்ரயித்தக்கால். (அடைந்தக்கால்) கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே "அஞ்சினான்புகலிடம்" ஆன ஆசார்யாபிமாநத்தை அவன் ப்ரஸாதத்தாலே ப்ராபிக்கப் பெற்றால். தங்களுக்காகச் ச்ரணவரணம் பண்ணி ரக்ஷிக்குமவனைத் தாங்கள் சரணமாக அடைந்தக்கால். (குருவை யடைந்தக்கால்) "குருரேவ பரம் ப்ரஹ்ம—குருரேவபரம் ப்ரஹ்ம" என்றும், "பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றும் சொல்லுகிறபடியே குருதரனை குருவை ஆச்ரயித்தக்கால். இப்படி அலப்யலாபமானது லபிக்கப் பெற்றால், அந்த ஆச்ரயண ராஜகுல மாஹாத்ம்யத்தாலே ஸ்ரீயப்பதியானவன், ஸ்வப்ராப்தியைப் பண்ணிக்கொடுக்கும். (அடைந்தக்கால் மாநிலத்தீர்) "ஏச வைஷ்ணவ ஸம்ச்ரய:—ஏசவைஷ்ணவஸம்ச்ரயா:" என்கிறபடியே அவனுடைய அபிமாநத்திலே அந்தர்ப்பாவத்தையுடையரானக்கால். (மாநிலத்தீர்) மஹாப்ருதிவியிலுள்ளவர்களே! "ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமான்" என்கிறபடியே அவனோடுண்டான அவர்ஜநீய ஸம்பந்தம் உடையவர்களாகையாலே உங்களை விடமாட்டுகிறிலன் "ஞாலத்தார் மந்தபுத்தியும்" என்றிறே அருளிச்செய்தது. இப்படி ப்ரதிபத்தியிலும் அதிஸுலபமான உபாயத்தையிறே நாம் உங்களுக்கு விதிக்கிறது. ஆனால் நீர் சொன்னபடி அடைந்தால் ஆவது என்னென்னில், (தேனார்கமலத் திருமாமகள் கொழுநன்றானே வைகுந்தந்தரும்) தேனார்கமலத் திருமாமகள் கொழுநன்றானே குருவாகையாலே ததாச்ரயணத்துக்கு "தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம்—தேநைவதேப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம்பதம்" என்கிறபடியே அந்தத் திருமாமகள் கொழுநன்றானே வைகுந்தந்தரும் என்கிறார். "திருமால் வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்"

என்றும் "அரவிந்தப்பாவையுந் தானும் அகம்படிவந்து புகுந்து" என்னும் சொல்லுகிறபடியே இவனிடத்திலே "என்னுள்ளம் மாலுக்கிடம்" என்னும்படி விசிஷ்ட அதிஷ்டானமாக எழுந்தருளியிருக்கையாலே அவன்றானேயென்று சொல்லலாமிறே, "ஆசார்யனைப்பற்றுகை காலைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி" என்றிறே அருளிச்செய்தது. இப்படி அவிநாபாவமுமாய் அநதிக்ரமண ஹேதுவுமாயிருக்கிற இவ்வுபாயத்தாலே "தேனார்மலர்மேல் திருமங்கை" என்னும்படியான பெரிய பிராட்டியார்க்கு வல்லபனானவன் அவள் சார்வான ஆசார்யாபிமாந நிஷ்டர்க்கு பலம் கொடுப்பது அவளுக்கு உகப்பாகையாலே "𑌯𑌸𑍍𑌯𑌾𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑍁𑌖𑌂—யஸ்யாவீக்ஷ்யமுகம்" என்று அவள் முகமலர்த்திக்காகக் கேவலம் ஸம்பந்தமாத்ரமே பற்றாசாகக்கொண்டு, தானே மேல்விழுந்து, ஸ்ரீவைகுண்டத்தைத் தந்தருளும். "𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑌪𑌰𑌂𑌧𑌾𑌮𑌸𑍍𑌵𑌯𑌂𑌨𑌯𑌤𑌿𑌮𑌾𑌧𑌵𑌃—ஸ்வயமேவ பரந்தாம ஸ்வயம் நயதிமாதவ:" என்னுமாபோலே. (தேனார் கமலத்திருமாமகள் கொழுநன்) தன்னோட்டைச்சேர்த்தியாலே மதுஸம்ருத்தியை யுடைத்தான தாமரைப்பூவைத் தனக்கு வாஸஸ்தானமாகவுடையளாய் ஸ்ரீயென்று திருநாமத்தை யுடையளான பெரிய பிராட்டியார், தனக்கு வல்லபனானவனை வசிகரித்து, ஸ்வஸம்பந்தமடியாக வுண்டான கடகத்வத்தையுடைய ஆசார்யனை ஆச்ரயித்தவர்களுக்கு, பலஸித்தியைப்பண்ணுவிக்குமவளாகையாலே அவளுடைய ப்ரீதிக்காகத் தான் ஏறிட்டுக்கொண்டு உபயநிரபேக்ஷனாய் "𑌅𑌹𑌂𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿—அஹம்மோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியே (திருமாமகள் கொழுநன்றானே) "திருமால் வைகுந்தம்" என்று சொல்லப்படுகிற தன்னதான வைகுந்த வான் போகத்தைத் தந்தருளும். (வைகுந்தந்தரும்) "வீடும் தரும்" என்கிறபடியே இருவருமான சேர்த்தியிலே நித்ய கைங்கர்ய நிரதனாய் வாழும்படியான பேற்றைப்பண்ணிக்கொடுத்தருளும்; இதில் ஸம்சயமில்லை. இப்பாட்டுத்தான் இப்ப்ரபந்தத்துக்கெல்லாம் உயிர் பாட்டிறே. ஆக இத்தால் "ஆசார்யாபிமாநமே உத்தாரகம்" என்னும் அர்த்தம் சொல்லிற்றாய்த்து.

சுஉ-ம் பாட்டு.

உய்யநினைவுண்டாகி லுங்குருக்கள் தம்பதத்தே
வையுமன்பு தன்னையிந்த மாநிலத்தீர்—மெய்யுரைக்கேன்
பையரவில் மாயன் பரமபத முங்களுக்காம்
கையிலங்கு நெல்லிக்கனி.

பதவுரை.

இந்த மாநிலத்தீர்-இந்த மஹாப்ருதிவியிலுள்ளவர்களே! உய்ய-உஜ்ஜீவிக்க, நினைவு உண்டாகில்-எண்ணம் உண்டாயிருக்குமானால், உம்குருக்கள் தம்-உங்கள் ஆசார்யர்களுடைய, பதத்தே-திருவடிகளிலே, அன்பு தன்னை-பக்தியை, வையும்-வைப்பீர்களாக, மெய் உரைக்கேன்-உண்மை சொல்லுகிறேன், பை அரவில்-படத்தையுடைய திருவநந்தாழ்வான்மீது அறிதுயிலமர்ந்த, மாயன்-எம்பெருமானுடைய, பரமபதம்-ஸ்ரீவைகுண்டமானது, உங்களுக்கு—,கை-கையிலே, இலங்கு-விளங்கும், நெல்லிக்கனி ஆம்-நெல்லிக்கனிபோல எளிதாகக்கிடைக்கும்.

வ்யாக்யாநம்.

அறுபத்திரண்டாம்பாட்டு.—ஆகக் கீழ் இரண்டு பாட்டிலும் ஆசார்ய ஸம்பந்தத்தாலும் அஸம்பந்தத்தாலும் பலிக்குமதான லாப அலாபங்களை தர்சிப்பித்தருளி, அர்த்த ஸ்திதி இதுவான பின்பு ; உங்களுக்கு உஜ்ஜீவந இச்சை உண்டாகில், கீழ்ச்சொன்னபடியே த்வயநிஷ்டராய், ஸ்தநந்தய ப்ரஜைக்கு வ்யாதி உண்டானால், அது தன் குறையாக நினைத்துத்தான் ஔஷதஸேவை பண்ணி, ப்ரஜையினுடைய நோயைப் போக்கும் வத்ஸலையான தாயைப்போலே தன்னை அழியமாறி ரக்ஷிக்கும், ஸதாசார்ய பரதந்த்ரரான தந்தாம் ஆசார்யர்கள் திருவடிகளிலே நிரதிசயப்ரேமத்தைப் பண்ணுங்கோள், மூக்த போக்யனானவனுடையதேசம் உங்களுக்கு அதிஸுலபமாகக் கிட்டும் என்கிறார். (உய்யநினைவுண்டாகில்) "ஸ்வோஜ்ஜீவநேச்சா யதிதே-ஸ்வோஜ்ஜீவ நேச்சாயதிதே" என்கிறபடியே உஜ்ஜீவிக்க வேணுமென்கிற இச்சாமாத்ரம் உண்டாகில், மனஸ் ஸஹகாரரூபமான ஸம்பத்து ஸம்பந்நமாய்த்தாகில், இனி அவர்களுக்கும் அருமை பெருமை என்கிற த்ருஷ்டதாரித்ர்ய ப்ரஸங்கமில்லையிறே. இவர்களைப்பார்த்தால் இதுதான் பரமபக்தியோபாதி அரிதாயிறே இருப்பது. இப்படி பெறுதற்கரிதான இச்சையையுடைய நாங்கள் செய்யவேண்டுவது என்னென்ன, (உங்குருக்

கோள். "எங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே காதல் செய்தொண்டர்" என்னும்படி ஸங்கத்தை உண்டாக்கும்படியாயிறே அவர்கள் இருப்பது. அன்றிக்கே (மாநிலத்திர்) என்று இருந்ததே குடியாக, எல்லார்க்கும் உபதேசத்தால் "యదికశ్చిన్ముముక్షుస్స్యాత్ -யதிகச்சின்முமுக்ஷுஸ்யாத்" என்று ஓரொருத்தர் தான் உண்டாகாதோ என்று ஸார்வாதிகாரமாக ஸம்போதித்தருளுகிறாராகவுமாம். நீர் இப்படி உபதேசியாநின்றீர் எங்களுடைய அல்பமான ஆநுகூல்யத்துக்கு அதிகமானபலம்ஸித்திக்கப்புகுகிறதோ என்ன, (மெய்யுரைக்கேன்) இவ்வர்த்தத்தில் ஸம்சயமில்லை என்னுமிடத்துக்கு நான் ஸத்யபூர்வகமாகச் சொல்லுகிறேன். "సత్యపూర్వమిదంవచః-ஸத்யபூர்வமிதம் வச:" என்னுமாபோலே. இப்படி ஆப்தனான நான் சொல்லுகையாலே பலஸித்தியில் கண்ணழிவில்லை. "பொய்யிலாதமணவாளமாமுனி" யான இவர், இப்படி (மெய்யுரைக்கேன்) என்கையாலே அமோகமாயிருக்கிற இவர் ப்ரத்யயமடியாக எல்லார்க்கும் பேறுதப்பாது என்று துணிந்திருக்கலாமிறே. (மாநிலத்திர்மெய்யுரைக்கேன்) என்கையாலே "రామేణాప్రతిజ్ఞాతం హర్యృక్షగణసన్నిధౌ-ராமேணாப்திஜ்ஞாதம் ஹர்யக்ஷகண ஸந்நிதௌ" என்று அந்தமஹாபரிஷத்திலே ஸத்யவாக்யரான பெருமாள், சபதம்கூறினாற்போலேயாய்த்து இவரும் இவர்கள் நடுவே சபதம் கூறினபடி. இனி இவர்கள் பெறப்புகுகிற பலவேஷம் இருக்கும்படியை அருளிச்செய்கிறார். அதுதான் பலபர்யந்தமாயிறே இருப்பது. (பையரவில்மாயன்) இத்யாதி. "பைத்தபாம்பணையான்திருவேங்கடம்" என்கிறபடியே அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனாயிருக்கிறவனுடைய ஸ்ரீவைகுண்டம் நித்யஸம்ஸாரிகளாயிருக்கிற உங்களுக்கு அடியிலே அன்புண்டாகையாலே "ஆகத்தணைப்பாரணைவரேயாயிரவாய் நாகத்தணையான் நகர்" என்றது அதிஸுலபமாய் அமோகமாக ஸித்திக்கும். (மாநிலத்திர் பையரவில் மாயன் பரமபத முங்களுக்காம்) "அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது" என்றும், "తయాసహాసీనమనన్తభోగిని-தயாஸஹாஸீநமநந்தபோகிநி" என்றும் "శేషభోగేశ్రియాసహాసీనం-சேஷபோகேஸ்ரீயாஸஹாஸீநம்" என்றும் "அநந்தன் பணமணிகள் தன்னிலொளி மண்டலத்தினிடையில் வடிவாரும் மாமலராள் வலவருகும் மற்றை

நிலமகளு மாய்மகளு மிடவருகுமிருக்க, நடுவாக வீற்றிருக்கு நாரணனை" என்றும் சொல்லுகிறபடியே பத்நீபரிஜநாதி பரிவ்ருதனு யிருக்கிறவனுடைய நித்ய விபூதியானது, இருள்தருமாஞாலத்திலே பத்தராயிருக்கிற உங்களுக்கு "బ్రహ్మణస్సాయుజ్యం సలోకతామాప్నోతి- ப்ரஹ்மணஸ்ஸாயுஜ்யம் ஸலோகதாமாப்நோதி" என்கிறபடியே ஸித்திக்கும். இதுதான் "ఏవంవిత్పాదేనాధ్యారోహతి-ஏவம்வித்பாதேநாத்யாரோஹதி" என்கிறபடியே பாதபீடத்திலே அடியிட்டு, ஏறி, மடியிலேயிருக்கும்படியாக லபிக்கும் பரமபோகிகளோடே ஸமாநபோகிகளாம்படியாயிறே இருப்பது, (பையரவில்மாயன் பரமபதமுங்களுக்காம்) ஸ்வஸம் ஸ்பர்சத்தாலே விகஸித பணத்தையுடையனாய் சைத்யமார்த்தவ ஸௌரப்யாதிகளை ப்ரக்ருதியாக உடையனான திருவநந்தாழ்வானை திவ்யஸிம்ஹாஸநமாக உடையனாய் திவ்ய மஹிஷீபரிவ்ருதனாய், அபரிச்சிந்நஸ்வரூப ரூபகுண விபூதிகளால் ஆச்சர்ய பூதனானவனுடைய "தன்னுடைச்சோதி" என்னும்படியான பரந்தாமமானது, உஜ்ஜீவநாபேக்ஷையுடைய உங்களுக்கு அயத்நமாகக் கைகூடும். ஏவம்வித மஹாபலமானது, லபிக்குமதுக்கு ஒருபலத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறதுமேல். (கையிலங்குநெல்லிக்கனி) என்று. அதாவது: "கையில்கனியென்னக்கண்ணனைக் காட்டித்தரிலும்", "வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே" என்கிறபடியே இவர்களுக்குக் கரதலாமலகம்போலே கைவசமாக ஸித்திருக்குமென்கை. "கையுறுநெல்லிக் கனியைக்காட்டி" என்னக்கடவதிறே. (கையிலங்குநெல்லிக்கனி) உள்ளங்கையிலே விளங்காநிற்கிற கருநெல்லிப்பழம் போலே கைவசமாம். அது கார்யஸித்தியைப் பண்ணிக்கொடுக்கும். இது ஸ்ரூபஸித்தியைப்பண்ணிக்கொடுக்கும். (பரமபதம்) "తద్విష్ణోః పరమం పదం సదా పశ్యన్తి సూరయః-தத்விஷ்ணோ: பரமம்பதம் ஸதாபச்யந்தி ஸூரய:" என்கிறபடியே நித்யஸூரிகளாலே நித்யாநுபாவ்யமா யிருக்கும்படி உங்களுக்கு ஸர்வகாலமும் கண்ணாரக் கண்டு அநுபவிக்கும்படியாயிருக்கும்படி. "கண்டறிதியே" என்னக்கடவதிறே. அதுதான் "నీలాఞ్జనాద్రినిభం-நீலாஞ்ஜநாத்ரிநிபம்" என்னும்படியான மைப்படி மேனியிறே. (பையரவில்மாயன் பரமபதம்) தன்னை ஆச்ரயித்தவர்களை அசேஷசேஷ வ்ருத்தியிலும் அந்விதராக்கி, அடிமை

கொள்ளு மவனுடையதாய் அவ்வடிமைக்கு வர்த்தகமாயிருப்ப தான பரமபதமானது,—(உங்களுக்காம்) உய்யநினைவுடைய உங் களுக்காம். நீங்கள் இச்சிக்கவும் வேண்டா. அவன்றானே தரவும் வேண்டா. நீங்கள் உங்களுக்கு வகுத்தபதத்திலே பற்றுண்டா யிருக்க "வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்" என்று அவர் களுக்குக் கையடைப்பாக்கிக் கொடுத்த அந்தப்பதம் கோல்விழுக் காட்டாலே உங்களதாயே யிருக்கும். "భుఙ్క్తే భోగానవిదితనృపస్సేవకస్యార్భకాదిః-புங்க்தேபோகா நவிதிதந்ருபஸ் ஸேவகஸ்யார்ப்பகாதி" என்றும் "நற்றாதை, சொம்புதல்வர்தம்மதன்றோ தாயமுறைதான்" என்றும் சொல்லக்கடவதிறே. (உங்களுக்காம்) ஏதேனும் ஜந்ம வ்ருத்த ஜ்ஞாநத்தையுடையராய் இருந்திகோளேயாகிலும் உஜ்ஜீ வநேச்சுக்களாய் ஆசார்ய விக்ரஹத்திலே விருப்பத்தையுடைய ராயிருக்கிற உங்களுக்கு உயரத்திலே யிருக்கிற மஹாபலமானது அடியிலேயிருக்க, மடியிலே விழும்படி கைகண்டபலமாயிருக்கும். (பரமபதமுங்களுக்காம்) அதில் ஒரு ஸந்தேஹமில்லை. ஸித்திர்ப் பவதி. "నిస్సంశయస్తు తద్భక్త పరిచర్యారతాత్మనాం-நிஸ்ஸம்சயஸ்து தத்பக்த பரிசர்யாரதாத்மநாம்" என்றும் "வேறாகவேத்தி யிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்" என்றும் "மதுர கவிசொன்ன சொல் நம்புவார்பதி வைகுந்தம்" என்றும் சொல் லக்கடவதிறே.

சுஉ-ம் பாட்டு.

ஆசாரியன்செய் உபகாரமானவது
தூய்தாகநெஞ்சுதன்னில் தோன்றுமேல்—தேசாந்
தரத்திலிருக்குமனந் தான்பொருந்தமாட்டாது
இருத்தலினியேதறியோம் யாம்.

பதவுரை.

ஆசாரியன்-தன்னுடைய ஆசார்யர், செய்-செய்த, உபகாரமான அது- உபகாரமானது, தூய்து ஆக-தோஷமில்லாததாக, நெஞ்சுதன்னில்-மனத் தில், தோன்றுமேல்-தோன்றுமானால், தேசாந்தரத்தில்-ஆசார்ய ஸேவை க்கு அசலான வேறுதேசத்தில், இருக்க-இருப்பதற்கு, மனம்தான்-மனமா னது, பொருந்தமாட்டாது-தங்கமாட்டாது, இனி-இப்படியான பின்பு, இருத்தல்-அப்படி ஆசார்ய ஸேவைக்கு அசலான வேறுதேசத்திலிருப் பது, ஏது-என்னகாரணமோ, யாம் அறியோம்-நாம் அறிந்தோமில்லை.

வ்யாக்யாநம்.

அறுபத்துமூன்றும்பாட்டு.—கீழ் மூன்றுபாட்டாலும் ஆசார்யனுடைய உத்தாரகத்வத்தை அருளிச்செய்தார். இப்பாட்டில் அவன் பண்ணின உபகாரத்தை அருளிச்செய்கிறார். (ஆசாரியன் செய் உபகாரம்) என்று தொடங்கி. ஜ்ஞாநப்ரதாநாதி உபகாரங்களாலே ரக்ஷித்துப்போந்த அந்த ஆசார்யன் செய்த மஹோபகாரமானது, தந்தாம் மநஸ்ஸிலே விசதமாக ப்ரகாசித்ததாகில், இப்படி க்ருதஜ்ஞனான சிஷ்யனுடைய மநஸ்ஸுதான் அவன் ஸந்நிதிக்கு அசலான தேசாந்தரத்தில் ஸக்தமாய் வர்த்திக்க க்ஷமமாகாது என்கிறார். (ஆசாரியன்செய் உபகாரமானவது) இவன் உஜ்ஜீவநத்துக்கு உடலாக ஸதாசார்யன் செய்த ஸத்ருசப்ரத்யுபகாரரஹிதமான அந்த மஹோபகாரமானது அதுதான் வாசாமகோசரமாகையாலே (அது) என்னுமத்தனை. அப்படிப்பட்ட அதுதான். (தூய்தாக நெஞ்சுதன்னில் தோன்றுமேல்) ஜ்ஞாநப்ரதாநம் தொடங்கி, மோக்ஷலாபபர்யந்தம் நடத்திப்போரும் உபகாரபரம்பரைகள். (உபகாரமானவது) "ఆత్మనోహ్యతినీచస్య యోగిధ్యేయపదార్హతామ్-కృపయైవోపకర్తారమాచార్యం సంస్మరేత్సదా – ஆத்மநோஹ்யதிநீசஸ்யயோகித்யேய பதார்ஹதாம் க்ருபயைவோப கர்த்தார மாசார்யம் ஸமஸ்மரேத்ஸதா" என்றும் "அத்தாநீ செய்தன அடியேனறியேனே" என்றும், "என்னைத் தீ மனங்கெடுத்தாய் மருவித்தொழும்மனமே தந்தாய் உனக்கென்செய்கேன்" என்றும் இப்படி ஈடுபடும்படி பெருநல்லுதவியான அந்த மஹோபகாரமானது மநஸ்ஸிலே நிர்மலமாக ப்ரகாசித்ததாகில், ஸங்கோசமற விசாலமாக ப்ரகாசித்ததாகில், ஆகில் என்கிற இத்தாலே க்ருதஜ்ஞதையிலுண்டான அருமை தோற்றுகிறது. க்ருதக்நராயிருப்பார் ஒழிந்து, க்ருதஜ்ஞராயிருக்குமவர்கள் தேட்டமாயிறே இருப்பது. இப்படியிருக்கிற இஸ்ஸம்ஸாரத்திலே "సర్వార్థస్స్వాత్మనః పుంసః కృతజ్ఞస్య మహాత్మనః–ஸர்வார்த்தஸ்ஸ்வாத்மந:பும்ஸ:க்ருதஜ்ஞஸ்யமஹாத்மந:" என்கிறபடியே க்ருதஜ்ஞராயிருப்பார், இவர் ஒருவருமிறேயுள்ளது. "தேசந்திகழுந் திருவாய்மொழிப்பிள்ளை வாசமலர்த்தாளடைந்து வைத்து" என்றும், "திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மைக் குருவாகிவந்துய்யக்கொண்டு" என்றும் "திருமலை

யாழ்வார் திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால், தருமதிகொண்டவர் தம்மையுத்தாரக ராகவெண்ணி, யிருமனமே" என்றும் "சீராருமாசாரியனாலேயன்றோ நாமுய்ந்தது" என்றும் "கூசாமலெப்பொழுதுங்கூறு" என்றும் இப்படி பஹுஜ்ஞராயிருக்கிற இவருடைய க்ருதஜ்ஞதையிருக்கிறபடி இதுவாய்த்து. இனி இப்படி தேசிகோபகார தர்சியாயிருக்கிற இவர்களுடைய மநஸ்ஸுதான் வஸ்தவ்ய ஸ்தலத்தைவிட்டு தேசாந்தரத்தில் ஸங்கத்தையுடையதாக மாட்டாது என்கிறார் (தேசாந்தரத்தி லிருக்க மனந்தான் பொருந்தமாட்டாது) என்று. அதாவது: ஆசார்ய ஸேவைக்கு அசலான தேசாந்தரத்தில் அர்த்தாதிகளில் அபேக்ஷையாலேயாதல் தேசவாஸாதிகளாலேயாதல் அங்கேவஸிக்க க்ருதஜ்ஞதாபல ப்ரத்யுபகார ஸாபேக்ஷமான மநஸ்ஸுதான் பொருத்தமுடையதாகமாட்டாது. இவர்கள் இருக்க இச்சித்தாலும் இவர்களுடைய மநஸ்ஸானது, "நின்னிடையே னல்லேனென்று நீங்கி" என்கிறபடியே இவர்களைவிட்டு "முந்துற்ற நெஞ்சு" ஆய், "போந்ததென்னெஞ்சு" என்னும்படி பொருந்தமுடையதாயிருக்கிற இது ஓரிடத்திலும் பொருத்தமுடையதாக மாட்டாது. ஆகையால் "உபகார ஸ்ம்ருதியாலே ஸஹவாஸம் ஸித்திக்கும்" என்கிறபடியே ஸஹவாஸிதராய் அவன் கண்வட்டம் விடாதே வர்த்தித்துப்போருமவர்களுடைய நெஞ்சு விச்லேஷித்துத்தரித்திருக்கமாட்டாதிறே. அப்படிப்பட்ட திருவுள்ளக்கருத்தை யுடையவர்கள், தெய்வவாரியாண்டான், நஞ்சீயர்போல்வார். இனி விச்லேஷித்திருக்க, மனந்தான் பொருந்தமாட்டாது என்பானென்? விச்லேஷித்திருக்குமவர்கள் உண்டாயிருக்கிறதே என்ன, (இருத்தலினியே தறியோம் யாம்) "ஆசார்யன் பண்ணின உபகாரத்தை அநுஸந்தித்திலனாகில், ஜ்ஞாநாம்சமடைய மறைந்து அஜ்ஞாநாம்சமே மேலிடும்" என்கிறபடியே "நிஷ்க்ருதியில்லாத பாபம்" என்னும்படியான க்ருதக்நதையாலே அத்தை அறியமாட்டாமல் விச்லேஷித்து, விடாயிற்றிருக்கிற இதுக்கு ஹேது ஏதோ அறியோம். பிரிந்திருக்கிறவர்கள் மநஸ்ஸே அறியுமத்தனை. (இனியேதறியோம்) அர்த்தஸ்திதி இதுவானபின்பு இதுக்கு நிதாநம் இல்லையென்று அறிந்து சொல்லுவாரார். பரதோஷங்களில் அஜ்ஞராயிருக்குமவராகையாலே இதுக்கு ஹேத்வந்தரங்களைத் தாம்

அருளிச்செய்யக்கூசி (இனியேதறியோம்) என்கிறார். "ஆசார்ய ஸ்வாஜீத-நித்யம் குருமுபாஸீத" என்கிற சாஸ்த்ர வசநத்துக்கு அநுகுணமுமன்றிக்கே, "ஸதாசார்யன் கண்வட்டம் விட்டால், நித்ய ஸம்ஸாரியாயேபோமித்தனை" என்கிற ஆசார்ய வசநத்துக்கு அநுகுணமுமன்றிக்கே யிருக்கிற இவர்கள் அநுஷ்டாநம் அறிவுடையார்க்கும் அறியப்போகாதாயிறே இருப்பது. அன்றிக்கே (யாமேதறியோம்) ஆசார்ய பதச்சாயையிலே யிருந்து, பல்லவிதாதிகளாம்படியான ஸ்வரூபவிகாஸத்தை யுடையனாய் தத்விபரீத அநுஷ்டாந யுக்தருடைய ஹ்ருதயஸ்திதிக்கு ஹேது இன்னதென்றறிந்து, அத்தைச் சொல்லுவதொன்று தெரிகிறதில்லை யென்றபடி. நாம் அத்தை அறியோம் என்றபடி. ஆகையால் இது ஸர்வஜ்ஞர்க்கும் துர்ஜ்ஞேயமா யிருக்கிறதாய்த்து. இவ்விடத்திலே நஞ்சீயர் திருவடிகளை ஆச்ரயித்து, தேசாந்தரத்திலே அகன்றுபோக உத்யோகித்த வைஷ்ணவனைக்குறித்து, ஜ்ஞாநாதிகராயிருப்பார் ஒருவர், உமக்கு ஜீயர் திருவடிகளை அகன்றுபோக வேண்டிற்றே யென்றுவெறுக்க, எங்கே இருந்தாலும் ஜீயர் அபிமாநம் உண்டேயென்று தேறி வார்த்தை சொல்ல, இத்தை ஜீயர் திருவடிகளுக்கு அந்தரங்கையாயிருப்பாள் ஒரு ஸாத்விகை அம்மையார் கேட்டு, ஆசார்ய விச்லேஷத்தில் நெஞ்சு இளையாமல் போகிறவரைப்பார்த்து, என்சொன்னாய் பிள்ளாய், "ஏனத்துருவாயுலகிடந்த ஊழியான் பாதம்நாளும் மருவாதார்க்குண்டாமோ வான்" என்கிறபாட்டின் வ்யாக்யாநத்திலே அருளிச்செய்த கதையை இவ்விடத்திலே அநுஸந்திப்பது" என்றார் என்று அஸ்மதாசார்யர் அந்திமோபாய நிஷ்டையிலே அருளிச்செய்தாரிறே.

௬௪-ம் பாட்டு.

தன்னாரியனுக்குத் தானடிமை செய்வதவன்
இந்நாடுதன்னி லிருக்குநாள்—அந்நேர்
அறிந்து மதிலாசையின்றி யாசாரியனைப்
பிரிந்திருப்பாரார் மனமே பேசு.

பதவுரை.

தன் ஆரியனுக்கு-தன்னுடைய ஆசார்யனுக்கு, தான்-சிஷ்யனானவன், அடிமை-கைங்கர்யங்களை, அவன்-அவ்வாசார்யன், இந்நாடுதன்னில்-இவ்வுல

கத்தில், இருக்கும் நாள்-இருக்குங்காலம் வரையில், செய்வது-செய்யக்கடவன், அந்நேர்-அந்த நேர்மைப்பாட்டை, அறிந்தும்-அறிந்திருந்தும், அதில்-அக்கைங்கர்யத்தில், ஆசை இன்றி-விருப்பமில்லாமல், ஆசாரியனை-தன்னுடைய ஆசார்யனை, பிரிந்திருப்பார்-விட்டிருப்பவர்கள், ஆர்-யாரோ? மனமே-என்மனஸே, பேசு-நீ இதை அறிந்து சொல்லுவாயாக.

வ்யாக்யானம்.

அறுபத்துநாலாம்பாட்டு.—கீழ் ஆசார்யன் பண்ணின உபகாரத்தை அநுஸந்தித்தால் அவனைப்பிரிய ப்ரஸங்கம் இல்லையென்றார். இதில் ப்ராப்யமான அவன் விஷயத்தில் கைங்கர்யத்தையுணர்ந்தாலும் பிரிய ப்ரஸங்கம் இல்லையென்கிறார். (தன்னறியனுக்குத் தானடிமை செய்வது) அதாவது: தாய்க்குச்சோறு இடுமாபோலே தனக்கு அஸாதாரண சேஷியான ஆசார்யனுக்குத் ததேக சேஷபூதனாய், தத் கைங்கர்யாதிகளே தனக்குத் தாரகாதிகளாயிருக்கிற தன்னுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களைச் செய்து, உஜ்ஜீவிப்பது. (அவனிங்காடு தன்னிலிருக்கு நாள்) அவன் இந்த விபூதியிலே எடுத்த திருமேனியோடே ஈச்வரேச்சையாலே எழுந்தருளியிருக்கும் நாளாயீத்து இவன் அடிமை செய்யலாவது: அங்நாட்டிலே போனல் எல்லாரும் "அயர்வறுமமரர்களதிபதி" யானவனுடைய அநுபவகைங்கர்யங்களிலே ஆழங்கால்பட்டு, குமிழ் நீருண்டு போமத்தனையிறே. ஆகையால் இவன் பதார்த்தங்களைக் கொண்டு உபஜீவிக்க இருக்கிற இந்நாட்டிலே எழுந்தருளியிருக்கும் போதாய்த்து, ப்ராக்ருத பதார்த்தங்களில் கிஞ்சித்கார முகத்தாலும் இவன் கரணங்கள் அடியாக உண்டான சிச்ருஷாதிகளாலு மாய்த்து அவன் அடிமைகொண்டருளுவது. "செய்யமரின்னடிசில் நிச்சலும் பாலோடு மேவீரோ" என்றும் "குருக்களுக்கநுகூலராய்" என்றும் சொல்லக்கடவதிறே. அவன் அந்நாட்டிலே, எழுந்தருளினல் இவன் இந்நாட்டிலே யார்க்கு அடிமைசெய்யப் புகுகிறன். "என்னைப் போலே வாய்புகும் சோற்றைப் பறிகொடாதே" என்றாரிறே நஞ்ஜீயர். (அந்நேரறிந்தும் அதில் ஆசையின்றி) அந்த நேர்பாட்டை சாஸ்த்ர வசநங்களாலும் ஸதாசார்ய உபதேசங்களாலும் அறிந்துவைத்து, இப்படி அடிமைக்குப் பாங்கான தேசகாலங்களையும் தேசிகரையும் பெற்றிருக்கிற நேர்பாட்டை அறிந்துவைத்து, அதிலே நேர்படலாயிருக்க, (அதிலாசையின்றி) இப்படி

வாய்த்திருக்கிற வகுத்த விஷயமான ஆசார்ய கைங்கர்யத்தில் அபிநிவேசமின்றிக்கே அதடியாக அவனைப்பிரிந்து, பிழைத்திருப்பாரார்? ப்ராவண்யகார்யமான அநுபவம் இல்லாதபோது, குலையும்படியான ஸத்தையையுடையராயிருக்கிற ஆசார்ய பரதந்த்ரரில் அவரை விச்லேஷித்து ஸத்தை பெற்றிருப்பாரார்? அங்கேர் அறியாமல் பிரிந்திருப்பார் உண்டாகில், அத்தனைபோக்கி, அத்தை அறிந்திருப்பாரில் பிரிந்திருப்பார் இல்லையிறே. ஈச்வரனைப்பிரிந்திருப்பார் உண்டாகிலும் ஆசார்யனைப் பிரிந்திருப்பார் அரிதாயிறே இருப்பது. அநாதிகாலம் ஈச்வரனையும் ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்திருந்த இவனை தத் ஸம்பந்தத்தையும் தத் கைங்கர்ய ருசியையும் உண்டாக்கி, கிட்ட இருந்து எல்லா அடிமைகளையும் கொண்டருளுமவனுயிருக்கிற இவனை விட்டுத்தரித்திருப்பார் ஆர்? அவர்களை எங்கே தேடுவது? சைதந்யம் உடையாரில் இப்படிப் பட்டவர்கள் இல்லையிறே. (மனமே பேசு) ஆசார்ய கைங்கர்யாதிகளாலல்லது தரியாத மநஸ்ஸே! உண்டாகில் இத்தை ஆராய்ந்து சொல்லிக்காண். "யதிராசா வெந்நாளு முன்றனக்கே யாட்கொள்ளுகந்து" என்று ஆதரித்துப் போருமவருடைய திருவுள்ளமிறே. ஆகையாலே தம் திருவுள்ளமறிய இல்லையென்கிறார். இதுதான் "பாதரேகாஸமர்பிரிகையாலே அவரிடத்தில் பரிவாலே தம் திருவுள்ளத்தில் பரிவுதோற்ற அருளிச்செய்தருளினது" என்று அருளிச்செய்வர். அந்த அநந்தரத்திலே "எந்தாயெதிராசா இந்தத்தனியிருப்பில் எந்தாயந்தன்னையினி நீக்கிக்-கந்தாடையண்ணனைப்போல் கண்கரிச்சலுண்டாக்கி, வந்தாரெனை நோக்குவாய்" என்றும் அருளிச்செய்தாராம். ஆக இத்தால் தத் பதஸேவைக தாரகராயிருக்கும் ஆசார்ய பாதந்த்ரரில் தங்களுக்கு எல்லாமாயிருக்கிற ஆசார்யனை விச்லேஷித் திருக்கமாட்டார்களென்று கருத்து.

௬௰-ம் பாட்டு.

ஆசாரியன் சிச்ச னாருயிரைப் பேணுமவன்
தேசாரும் சிச்சனவன் சீர்வடிவை—ஆசையுடன்
நோக்குமவனென்னு நுண்ணறிவைக் கேட்டுவைத்தும்
ஆர்க்குமங்கோர் நிற்கை யரிதாம்.

பதவுரை.

ஆசாரியன்-ஆசார்யனானவன், சிச்சன்-தன் சிஷ்யனுடைய, ஆர்-அருமையான, உயிரை-ஆத்மவஸ்துவை, பேணுமவன்-ரக்ஷிக்குமவனானவன், தேசு-தேஜஸ்ஸு, ஆரும்-பொருந்திய, சிச்சன்-சிஷ்யனானவன், அவன்-ஆசார்யனுடைய, சீர்-சிறப்பையுடைய, வடிவை-திருமேனியை, ஆசையுடன்-ப்ரீதியுடனே, நோக்குமவன்-காப்பாற்றுமவனானவன், என்றும்-என்றுசொல்லப்படும், நுண் அறிவை-ஸூக்ஷ்ம ஜ்ஞானத்தை, கேட்டுவைத்தும், தெரிந்திருந்தும், அங்கோர்-அந்த நேர்மைப்பாட்டில், நிற்கை-நிலைத்திருப்பது, ஆர்க்கும்-யாவருக்குமே, அரிது ஆம்-அருமையேயாகும்.

வ்யாக்யானம்.

அறுபத்தஞ்சாம்பாட்டு.—கீழ் இரண்டு பாட்டாலும் உபகாரஸ்ம்ருதி அதிசயத்தாலும் கைங்கர்யாபிநிவேசத்தாலுமுண்டான சிஷ்யனுடைய விச்லேஷ ராஹித்யத்தை யருளிச்செய்து, அதடியாக வுண்டான ஸஹவாஸத்தை யுடையரான இருவரும் ஸ்வஸ்வ கர்த்தவ்யங்களான ஸ்வரூப தேஹஸம்ரக்ஷணங்களைப் பண்ணிப் போரும்படியையும் இவ்வர்த்தம் ச்ருதமானாலும் அநுஷ்டானத்திலே அரிதாயிருக்கு மென்னுமத்தையும் அருளிச்செய்கிறார் இதில். (ஆசாரியன் சிச்சனாருயிரைப் பேணுமவன்) ஆசார்யனாகிறான், சிஷ்யனுடைய உஜ்ஜீவநத்துக்குடலாக. ஜ்ஞானப்ரதானாதி முகத்தாலே நல்வழியே நடத்திப்போரு மவனாகையாலே ஸ்வாசாஸ்யனான சிஷ்யனுடைய ஸ்வரூபத்தை ஸ்வோபதேசாதிகளாலே ஸர்வகாலத்திலும் அவஹிதனாய்க் கொண்டு, நிரபாயமாக ரக்ஷித்துக்கொண்டு போருமவனென்கை. (தேசாரும் சிச்சனவன் சீர்வடிவை ஆசையுடன் நோக்குமவன்) சிஷ்யனாகிறான், அவனாலே ஸுசிக்ஷிதமான ஸ்வரூப ஔஜ்வல்ய பூர்த்தியையுடையனாய் "ஆசார்யனைக் கண்டால் பசியன் சோற்றைக் கண்டாற்போலே" தனக்கு தாரகாதிகள் எல்லாமாய், சரம சரீரமாகையாலே ஸர்வேச்வரனுக்கு அத்யந்தாபிமதமாய் ஸர்வ மங்களாவஹமாயிருக்கிற ஆசார்யனுடைய திவ்ய விக்ரஹத்தைத் தது சித கைங்கர்யங்களாலே ஸர்வகாலத்திலும் அவஹிதனாய் அபிநிவேசத்துடனே இப்படியே நோக்கிக்கொண்டு போருமவனென்கை. "ஆசார்யன் சிஷ்யனுடைய உயிரை நோக்குமவன், சிஷ்யன் ஆசார்யனுடைய உடம்பை நோக்குமவன்" என்றும், "ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணக்கடவன், சிஷ்யன்

ஆசார்யனுடைய தேஹத்தைப் பேணக்கடவன், இரண்டும் இரு வர்க்கும் ஸ்வரூபமுமாய் பகவத் கைங்கர்யமு மாயிருக்கும்." என்றும் "இப்படி இது இருவர்க்கும் வ்யவஸ்திதமாயிருக்கும்" என்றும் இத்தை ஆசார்யர்கள் இருவரும் அருளிச்செய்தார்கள். (ஆசையுடன் நோக்குகையாவது) "అన్నుతోథ్యర్చయేద్గురుమ్—ஆத்ருதோ ப்யர்ச்ச யேத்குரும்" என்றும், "సర్వతపరమంభక్తిం—குர்வீதபர மாம்பக்திம்" என்றும் "శాస్త్రేన సాయచ్ఛ్రద్ధావాన్—சாஸ்தோகஸூய ச்ரத்தாவாந்" என்றும், சொல்லுகிறபடியே ராகப்ரேரிதனுய் அவர் திருமேனியில் புரையற ஸ்நேஹத்துடனே தத் தத் காலோ சித கைங்கர்யங்களாலே தத் விக்ரஹத்தை ஸர்வகாலத்திலும் நோ க்கிக்கொண்டு போருகையென்றபடி. அவனும், "స్నిగ్ధోహితపరస్సదా—ஸ்நிக்தோஹிதபரஸ்ஸதா" என்னும்படியிறே இவனிடத்திலிருப் பது. (ஆருயிர்) என்கையாலே ஜ்ஞாநாநந்தங்களை வடிவாக உடைத்தாயிருக்கிற ஸ்வரூபமானது ஈச்வரனுக்கு ஸ்ரீகௌஸ்து பத்தோபாதி ஸ்ப்ருஹணீயமுமாய் "அங்கண்ண னுண்ட வென்னு ருயிர்" என்னும்படி "అహమన్న—அஹமந்ந" மாகையாலே நிரதிசய போக்யமுமாய் இப்படி ஊணும்ஊணுமாயிருக்கு மென்னுமது தோற்றுகிறது. (சீர்வடிவு) என்கையாலே, "நன்கென்னுடலங் கைவிடான்" என்றும், "క్షణమపి తేయద్విరహోఽతిదుస్సహః—க்ஷணேபிதேயத் விரஹோதி துஸ்ஸஹ:" என்னும் ஈச்வரனுக்கு க்ஷணகால விச் லேஷமும் அஸஹ்யமாம்படியான அபிமத விஷயத்திலுண்டான அத்யந்த வ்யாமோஹம் தோற்றுகிறது. இப்படி ஈச்வர ப்ரீதி ஹேதுவான தேஹாத்ம ரக்ஷண தத்பரராய்ப் போருவர்கள் சச் சிஷ்ய ஸதாசார்யர்கள் என்று சொல்லப்படுகிற இந்த ஸூக்ஷ்ம ஜ்ஞாநத்தை சாஸ்த்ர முகத்தாலும் ஸதாசார்ய வசநத்தாலும் ச்ர வித்துவைத்தும் (ஆர்க்குமங்நேர் நிற்கையரிதாம்) எத்தனை அதிச யித ஜ்ஞாநராய் இருக்குமவர்களுக்கும் அந்த அரிதான அநுஷ் டாநத்திலே நிஷ்டையுடையராகை துர்லபமிறே. அது சால அரு மையுண்டு என்றபடி. (கேட்டுவைத்து மார்க்கு மங்நேர் நிற்கை யரிதாம்) செவிக்கினிதாயிருக்கு மவற்றைக் கேட்கலாமத்தனை போக்கி, நான் என்கிற ஜ்ஞாதாக்களுக்கும் அதின் உக்தக்ரமத் தின் அநுஷ்டாநத்தில் நிஷ்டையை யுடையராகை துர்லபமிறே. ஆகையால் ஆசார்ய ப்ரஸாதத்தாலே அயத்நமாக லபிக்குமத்தை ஸ்வயத்நத்தாலே லபிக்க அரிதாயிறே இருப்பது.

சுசு-ம் பாட்டு.

பின்பழகராம் பெருமாள் சீயர் பெருந்திவத்தி
லன்பதுவுமற்று மிக்கவாசையினல்—நம்பிள்ளைக்
கானவடிமைகள் செய் யந்நிலையை நன்னெஞ்சே
ஊனமற வெப்பொழுது மோர்.

பதவுரை.

பின்பழகராம் பெருமாள் ஜீயர்—, பெரும்-பெரிதாகிய, திவத்தில்-பரமபதத்தில், அன்பு அதுவும்-ப்ரீதியும், அற்று-இல்லாமல், மிக்க-விசேஷித்த, ஆசையினல்-ப்ரேமத்துடனே, நம்பிள்ளைக்கு-தம்முடைய ஆசார்யரான நம்பிள்ளைக்கு, ஆன-ஏற்ற, அடிமைகள்-கைங்கர்யங்களை, செய்-செய்த, அந்நிலையை-அந்த நிஷ்டையை, நல் நெஞ்சே-நல்ல மனசே, ஊனம் அற-குறைவில்லாமல், எப்பொழுதும் - எந்தக்காலத்திலும், ஓர் - அறிந்து கொள்ளு.

வ்யாக்யாநம்.

அறுபத்தாறும்பாட்டு.—"ஆர்க்குமந்நேர் நிற்கையரிதாம்" என்றீர். இதுக்கு ஒருத்தர்தாம் இல்லையோ வென்று தம் திருவுள்ளத்துக்குக் கருத்தாக, அதில் இவ்வநுஷ்டாநத்துக்கு ஒருவர் உண்டு என்று அவரைத் தர்சிப்பித்தருளுகிற முகத்தால் இவ்வநுஷ்டாநத்தை ஆதரித்துப்போரு என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிருர், (பின்பழகராம் பெருமாள் சீயர்) என்று தொடங்கி. கீழே ஸ்வரூப ரக்ஷணத்தையும் தேஹரக்ஷணத்தையும் ப்ரஸ்தாபித்து, அதில் ஆத்ம ரக்ஷணத்துக்கு உறுப்பான ஆசார்யத்வத்தை இட்டுவைத்துத் தமக்கு ஆதரணீயமான தேஹரக்ஷணத்துக்கு உறுப்பான சிஷ்ய லக்ஷணத்தில் அருமையை அருளிச்செய்கிருர். (பின்பழகராம் பெருமாள் சீயர்) என்று. அவராகிருர், லோகாசார்யரான நம்பிள்ளைக்கு அத்யந்த அபிமத விஷயமாய் அவர் ஸந்நிதியிலே ஸகல அர்த்தங்களையும் கேட்டு அந்த ச்ருதமான அர்த்தத்தின்படியே- "எல்லாம் வகுத்த இடமே" என்று ததேக நிஷ்டராய், அவரை க்ஷணகாலமும் பிரியாதே, தத் கைங்கர்ய நிரதராய்ப் போருகிற (பின்பழகராம் பெருமாள் சீயர்) என்கை. தாத்ருசமான அதிகாரிபூர்த்தியை யுடையவர், (பெருந்திவத்திலன்பதுவுமற்று) "பெரியவான்" என்றும், "எம்மாவீடு" என்றும், சொல்லுகிறபடியே நிரதிசய ஸுகரூபமாயிருந்துள்ள த்ரிபாத் விபூதியாகிற ப்ராப்ய தேசத்தை ப்ராபிக்க

வேணுமென்கிற ப்ராவண்யமு மற்று, அதாவது: "மாகவைகுந் தங்காண்பதற்கென்மனமேக மெண்ணும்" என்றும் "வானுலகந்தெளிந்தேயென்றெய்துவது" என்றும்சொல்லுகிறபடியே எல்லாராலும் விரும்பப்படுவதான தேசத்திலும் விருப்பமற்று, "குருவேர் பரம்பின திருமுக மண்டலத்தில் ஸேவையையும், சுற்றிச் சுழற்றிப் பரிமாறுகிற கைங்கர்யத்தையும் விட்டு அடியேனுக்குப் பரமபதத்துக்குப்போக இச்சையிருந்த தில்லையிறே" என்றருளிச்செய்து போருவரென்கை. இப்படி அதில் ஆதரமும் மட்டமாம்படி அதிலும் இஷ்டமாயிருப்பதான விஷயத்தைச் சொல்லுகிறது, (மிக்க வாசையினால் நம்பிள்ளைக் கானவடிமைகள் செய்) என்று. அதாவது: "தேசாரும் சிச்சனவன் சீர்வடிவை ஆசையுடன் நோக்குமவன்" என்கிறபடியே அந்தத் தேசவிசேஷத்திலுண்டான ஆதரத்தையெல்லாம் தமக்குத் தேசிகரான நம்பிள்ளை விஷயத்தில் கைங்கர்யத்திலேயாய்த்து, இவர் ஒருமடைப்படுத்திக்கொண்டு போருவதென்கை. ஆகையால் இவர்க்கொரு தேசவிசேஷமும் ருசியாதிறே, (நம்பிள்ளைக்கானவடிமைகள் செய்யநிலையை) தம்முடைய ஆத்மரக்ஷணத்திலே அநவரதம் அவஹிதராய், பரமபதம் தம்முடைய சிறுமுறிப்படி செலுத்தும்படி யிருப்பாராய், தமக்கு வகுத்த விஷயமாயிருக்கிற நம்பிள்ளைக்கு "ఇచ్ఛా ప్రకృత్యనుగుణరూపచారైస్సదోచితైః—இச்சாப்ரக்ருத்யநு குணருபசாரைஸ்ஸதோசிதை:" என்கிறபடியே தத்ததவஸ்தோசிதமாகச் சுழற்றிப்பரிமாறுகை முதலான ஸகலவித கைங்கர்யங்களும் அவர் உகக்கும்படி செய்துகொண்டு போந்த லோக விலக்ஷணமான நிஷ்டையை. (நன்னெஞ்சே) "நன்னெஞ்சே நம்பெருமான்" என்றும் "நெஞ்சமே நல்லை நல்லை" என்றும் சொல்லுகிறபடியே அந்தச் சரமபர்வ நிஷ்டையை ப்ரார்த்தித்துக்கொண்டு போருகிற விலக்ஷணமான நெஞ்சே! விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களில் வாஞ்சையையுடைய நெஞ்சே! (ஊனமற எப்பொழுது மோர்) அப்படியே சரமபர்வமான ஆசார்ய கைங்கர்ய நிஷ்டையை ப்ராபித்துக்கொண்டு ஸங்கோசமற ஸர்வகாலத்திலும் அநுஸந்தித்துப் போரு. அஸக்ருதாவ்ருத்தி அபேக்ஷிதகார்யமிறே. இவர்தாம் "அந்நிலையை" என்றும் "தன்னிலையை" என்றும் பலகாலும் அபேக்ஷித்தருளுவராய்த்து. அதாவது:

வடுகநம்பி தன்னிலையிறே. இப்படி யிருக்கிற இவருடைய ஆசார்யாபிமாந நிஷ்டையை "தேவுமற்றறியேன்" என்றிருக்கும் ஸ்ரீமான்களான அதிகாரிகள், "ஆழ்வார் திருமகளாராண்டாள்" என்று தொடங்கி, திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளிலே நம்முடைய ஜீயர் என்னுமளவாக இத்தையும் அப்படியே அந்திமோபாய நிஷ்டாக்ரேஸரரான அஸ்மத் பரமாசார்யரும் அருளிச்செய்தாரிறே. "சேஷித்வ, சரண்யத்வ, ப்ராப்யத்வங்கள் மூன்றும் பிள்ளை விஷயத்திலே அநுஸந்தித்து, ததேக நிஷ்டராய் எழுந்தருளியிருக்கிற ஜீயர்" என்று யதிராஜவிம்சதி வ்யாக்யாந ப்ரவேசத்திலே அப்பிள்ளையும் அருளிச்செய்தாரிறே.

கூஎ-ம் பாட்டு.

ஆசாரியர்க ளனைவருமுன் னாசரித்த
ஆசாரந்தன்னை யறியாதார்—பேசுகின்ற
வார்த்தைகளைக்கேட்டு மருளாதே பூருவர்கள்
சீர்த்திநிலைதன்னை நெஞ்சே சேர்.

பதவுரை.

ஆசாரியர்கள் அனைவரும்-பூர்வாசார்யர்கள் எல்லாரும், முன்-முற்காலத்திலே, ஆசரித்த-அநுஷ்டித்துக்காட்டின, ஆசாரந்தன்னை-அநுஷ்டாநங்களை, அறியாதார்-அறிந்துகொள்ளாதவர்கள், பேசுகின்ற - சொல்லுகின்ற, வார்த்தைகளைக்கேட்டு—, மருளாதே-சலநமடையாமல், பூருவர்கள்-பூர்வாசார்யர்களுடைய, சீர்த்தி - ச்ரேஷ்டமான, நிலைதன்னை - நிஷ்டையை, நெஞ்சே-மனமே, சேர்-அடைவாயாக.

வ்யாக்யானம்.

அறுபத்தேழாம்பாட்டு.—கீழே "ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனான குருவை யடைந்தக்கால்" என்றும், "ஆனவடிமைகள் செய்யும் நிலையை" என்றும் ஆசார்யனையே உபாயோபேயமாக அருளிச்செய்யாநின்றீர் அல்லாதாரடைய பகவானையே ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவும் ஸ்வீகரியா நின்றார்கள், இவை இரண்டிலும் வழி எது என்று தம் திருவுள்ளத்துக்குக் கருத்தாக, வாக்யத்வயோக்த உபாயோபேயங்கள் தான், சரமபர்வ பர்யந்தமாயல்லது இராமையாலே அதில் தாத்பர்ய மறியாதார் வார்த்தையன்றோ அது "அத்ரபரத்ராசாபி—அத்ரபரத்ராசாபி"ப்

படியே அங்கோடு இங்கோடு வாசியற அசார்யன் திருவடிகளில் உபகார ஸ்ம்ருதியாவதாத்ம பாவியாமையாலே அங்கே போனா லும் ஆசார்யனுடைய உகப்பே பெரும்படியன்றோ அத்தலைக்கு அடிமை செய்து போருவது. ஆகையாலே ஏதத் விருத்தமான வார்த்தையைக்கேட்டு, நீ அஜ்ஞதை அடையாதே அஜ்ஞாந நிவர்த் தகமான பூர்வர்களுடைய விலக்ஷணமான அநுஷ்டாநத்தை அநு விதாநம்பண்ணப்பார் என்கிறார். (ஆசாரியர்க ளனைவரும்) இத் யாதி. அவர்கள் தான் ஒருவர் இருவர் அன்றிக்கே, ஸ்ரீமதுரகவி கள் நாதமுனிகள் தொடக்கமாய் ஸ்ரீசைலேசராளவாக உண்டான நம்முடைய ஆசார்யர்கள் அனைவரும் பிற்பாடரான நமக்கும் அநுஷ்டேயமாம்படி முற்காலத்திலே "பிடித்தார் பிடித்தாரைப் பற்றி" என்னும்படி பரம்பரையாகத் தந்தாம் ஆசார்யன் திருவடி களில் பண்ணும் கைங்கர்யமே தங்களுக்கு உபேயமாகவும் அவன் திருவடிகளே உபாயமாகவும் எல்லாரும் ஏககண்டராக அருளிச் செய்து, அப்படியே "[illegible]—ஆசரதித்யாசார:" என்று ஆசரித்துக்கொண்டு போருகிற அந்தப்பரிசுத்தமான அநுஷ்டா நந்தன்னை. (அறியாதார்) அவர்களிடத்திலே உபஸந்நராய் அந் தேவாஸிகளாய் இருந்து, அப்யஸித்து, கண்டு, கேட்டு, அறியா தார். (பேசுகின்ற வார்த்தைகளை) "கூறும் சமயங்கள்" என்றாற் போலே, கேவலயுக்திஸாரமேயாய், நிரர்த்தகமாய், ஆபாதப்ரதீத மாய் தங்கள் துர்ஹ்ருதயத்துக்குத் தோற்றிற்றொன்றைச் சொல் லும் (வார்த்தைகளைக்கேட்டு மருளாதே) அப்படி அடியற்றிருப்ப தான ப்ரதிபக்ஷபாஷணங்களைக்கேட்டு, ப்ரமியாதே. அவர்கள் தான் ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோமென்று ப்ரமித்தும் உத்க்ருஷ்டராக ப்ரமித்தும் போருவர்கள். ஆகையாலே அவர் கள் வார்த்தையும் ப்ரமத்துக்கு உடலாயிருக்குமிறே. (கேட்டறி யாதார் பேசுகின்ற வார்த்தைக) ளாகையாலே அறிவுகேடான மருளை விளைப்பிக்குமதாயிருக்கும். "பூருவாசாரியர்கள் போத மநுட்டானங்கள் கூறுவார் வார்த்தைகளைக்கொண்டு நீர் தேறி" என்கிறபடியே அவர்கள்தான் தெருள்கொள்ளச் சொல்லுகிறார்க ளன்றே. ஆகையாலே அறியாதார் வார்த்தைகளைக்கேட்டு, புத்தி சலநம்பிறந்து, அலமாவாதே. (பூருவர்கள் சீர்த்திகிலை தன்னை நெஞ்சே சேர்) அதாவது மதுரகவி சரிதாநுகாரி மஹிதசாரித்ர

ராயிருக்கிற பூர்வர்களுடைய நிஷ்டையை மனஸ்ஸே! ஸுப்ரதிஷ்ட மாக அநுஸந்திக்கப்பார் என்கை. அதுக்குச் (சீர்மை) யாவது: "சீர்த்த மதுரகவி செய்கலை" யில் ப்ரதிபாதிக்கப்படுமதான சீரிறே. நிலையாவது-நிஷ்டை. அதுதான் திருமந்த்ரத்தில் பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதமபர்வத்தளவன்றிக்கே சரமபர்வ பர்யந்தமாக அநுஸந்தித்தபடியே அந்த பதத்ரயார்த்த நிஷ்டையை யுடையராயிருக்கும் இருப்பாய்த்து. இப்படி விலக்ஷணமாயிருப்பதான நிலையை அபேக்ஷித்திருக்கிற நமக்குப்பரிகரமான நெஞ்சே! அந்நிலையை உன்னிடத்திலே சேரும்படி பண்ணப்பார். அன்றிக்கே "அடைநெஞ்சமே" என்னுமாபோலே "அத்தைச்சென்று சேர்" என்கிறாராகவுமாம். சீரியதான அர்த்தத்தைப் பர்வத குஹரங்களிலே சேமித்துவைக்குமாபோலே அறியாதார் வார்த்தைகளால் அவிசால்யமாம்படி "மலைகலங்கிலும் மனங்கலங்காது" என்னும்படியான தம் திருவுள்ளத்திலே அந்தச் சீர்த்தநிலையைச் சேரப்பார்க்கிறாரிறே இவர் தாம். இத்தால் ச்ரேஷ்ட ஸமாசாரமே கர்த்தவ்ய மென்றதாய்த்து.

சூஅ-ம் பாட்டு.

நாத்திகரும் நற்கலையின் நன்னெறிசே ராத்திகரும்
ஆத்திகநாத்திகரு மாமிவரை—ஓர்த்துநெஞ்சே
முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டுநடுச்
சொன்னவரை நாளுந் தொடர்.

பதவுரை.

நாத்திகரும்-நாஸ்திகரும், நல்-நல்ல, கலையின்-சாஸ்திரங்களில் சொல்லப்படும், நல்-நல்லதான, நெறி-மார்க்கத்திலே, சேர் - சேர்ந்திருக்கும், ஆத்திகரும் - ஆஸ்திகரும், ஆத்திகநாத்திகரும் - ஆஸ்திகநாஸ்திகரும், ஆம்-ஆகிய, இவரை-இவர்களை, நெஞ்சே-மனமே, ஓர்த்து-ஆராய்ந்து, முன்னவரும்-முன்னே சொன்ன நாஸ்திகரும, பின்னவரும்- பின்னே சொன்ன ஆஸ்திகநாஸ்திகரும், மூர்க்கர் என-மூர்க்கத்தன முடையாரென்று, விட்டு-அவர்களை நீங்கி, நடு சொன்னவரை-இடையிலே சொன்ன ஆஸ்திகரை, நாளும்-எப்பொழுதும், தொடர்-பின் பற்றுவாயாக.

வ்யாக்யாநம்.

அறுபத்தெட்டாம்பாட்டு.—கீழில் பாட்டில் சிஷ்டாசாரமே ப்ரமாணம் என்று அங்கிகரித்து இப்பாட்டில் இப்படி ப்ராமாணிக

அநுரூபமான ஸ்வர்க்காதிரூப பல தத் ஸாதநங்களை ப்ரதிபாதிக்கிற சாஸ்த்ரங்களிலும் ஸ்வாஹங்கார கர்ப்பமான பகவதுபாஸநத்தை யும் தத் பலமான பகவதநுபவ கைங்கர்யங்களையும் ப்ரதிபாதிக்கிற சாஸ்த்ரங்களிலும் ப்ரதிபத்தி விளையவுங்கூடும். ததேக போக மான கைங்கர்ய தத் ஸாதநங்களை ப்ரதிபாதிக்குமதான நற்கலை யுண்டு ப்ரபத்தி சாஸ்த்ரம். அதில் நன்னெறியுண்டு ப்ராப்ய ப்ரா பகாநுஷ்டாநங்கள். அது தங்களுக்குக் கைவந்திருக்கும்படி யான ஆஸ்திக்யம் பிறக்கை அரிதாயிறே இருப்பது. அன்றிக்கே, (நற்கலை) என்று "சீர்த்த மதுரகவி செய்கலை" யான, கண்ணி நுண் சிறுத்தாம்பாய், அதில் (நன்னெறி) என்று "தேவுமற்றறி யேன்" என்றும், "மேவினேனவன் பொன்னடி" என்றும் "ஆள் புக்ககாதலடிமைப் பயனன்றே" என்றும் சொல்லுகிறபடியே சேஷத்வாதிகளைச் சொல்லுகிற மதுரகவிகளுடைய ஸந்மார்க்க மான சரமபர்வ நிஷ்டையாகவுமாம். இந்நிஷ்டையையுடைய பரமாஸ்திகர்கள்தான் "ஓரொருவர்" என்னும்படி அரிதாயிறே இருப்பது. (இவரை ஓர்த்து) கீழ்ச்சொன்ன நாஸ்திகாதி த்ரய ருடையவும் ஸ்வரூப ஸ்வபாவங்களை நன்றாக ஆராய்ந்து, (நெஞ்சே) இவர்களை விவேகித்துப் பற்றுகைக்கும் விடுகைக்கும் பரிகர மான நெஞ்சே! அஜ்ஞரையும் விசேஷஜ்ஞரையும் ஜ்ஞாநலவதுர் விதக்தரையும் நன்றாக விவேகித்து அவர்கள் ஸ்வரூப ஸ்வபாவங் களை அறிந்தபின்பு, (முன்னவரும் பின்னவரும் மூர்க்கரெனவிட்டு) முன் சொன்ன அப்ராமாணிகரான நாஸ்திகரையும் பின் சொன்ன பக்ஷபாதிகளான ஆஸ்திக நாஸ்திகரையும் சாஸ்த்ரமார்க்கத்தில் அடங்காத ஸாஹஸிகர் என்று கைவிட்டு, அதாவது, "యత్ప్రత్యక్షం తదేవాస్తి నాస్త్యన్యదితి నిశ్చితాః-అర్థకామపరాః పాపా నాస్తికా దేహకింకరాః—யத்ப் ரத்யக்ஷம் ததேவாஸ்தி நாஸ்த்யந்ய திதிநிச்சிதா: அர்த்தகாமபரா: பாபாநாஸ்திகா தேஹகிங்கரா:" என்று தொடங்கி, "విజ్ఞానలక్షణాంస్తాంస్తు సమ్యగ్వ్యవసితస్త్యజేత్—விஜ்ஞாநலக்ஷணாஸ்தாந்துஸ் ஸம்யக்வ்யவஸிதஸ் த்யஜேத்" என்கிறபடியே இப்படி மூர்க்கரான இவர்கள் இருவ ரையும் விட்டு, "விடுகை கண்டீர்விதி" என்கிறபடியே ஸவா ஸநமாகப் பரித்யஜித்தென்கை. இனி பற்றப்படுமவர்களைச்சொல் லுகிறது. (நடுச்சொன்னவரை நாளுந்தொடர்) என்று, ப்ராமா ணிகராகையாலே ததுபய வ்யாவ்ருத்தராய், மத்யஸ்தராயிருக்கிற

ளுய் ஆசார்ய பரதந்த்ரனுயிருக்கிற அதிகாரிக்கு ஆப்தராய் அங்கி கார யோக்யராய் அநுவர்த்தநீயராய் இருக்கும் அநுகூலர் படியையும் இதுக்கு அசலாய் அநங்கீகார விஷயமாயிருக்கும் அநுகூலர்படியையும் அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம் பற்றி, அது தன்னைத் தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச் செய்கிருர். (நாத்திகரும்) என்று தொடங்கி. நாத்திகராகிருர் உள்ளோடு புறம்போடு வாசியற நாஸ்திகராயிருக்குமவர்கள். ஆத்திகராகிருர் உள்ளோடு புறம்போடு வாசியற ஆஸ்திகராயிருக்குமவர்கள். ஆஸ்திகநாஸ்திகராகிருர் புறம்பு ஆஸ்திகரைப்போலேயும் உள்ளே நாஸ்திகராயு மிருக்குமவர்கள். அது தன்னை "அஜ்ஞான விஷய ப்ரவணன், கேவல நாஸ்திகனைப்போலே. ஜ்ஞானவானுன விஷய ப்ரவணன், ஆஸ்திகநாஸ்திகனைப்போலே" என்ற இடத்துக்கு "நாஸ்திகனுகிருன், தர்ம அதர்ம பரலோக சேதந ஈச்வரர்களுக்கு ப்ரதிபாதகமான சாஸ்த்ரத்தில் ப்ராமாண்யபுத்தி ஒன்று மின்றிக்கே ஸ்வைர ஸஞ்சார பரனுய்த்திரிகிற சுத்த நாஸ்திகன்" என்றும் "ஆஸ்திக நாஸ்திகனுகிருன், தர்ம அதர்ம ஸகல ப்ரதிபாதகமான சாஸ்த்ரத்தை ப்ரமாணம் என்று அறிகையாலே ஆஸ்திகனென்றும் சொல்லலாம்படி இருப்பானுய் அந்தச் சாஸ்த்ரமர்யாதையில் அடங்காதே தோற்றிற்றுச்செய்து திரிகையாலே நாஸ்திக ஸமநாயிருக்குமவன்" என்றும் இப்படி ஜீயர் தாமே வ்யாக்யாநம் செய்தருளினுரிறே. (நற்கலையின் நன்னெறி சேராத்திகர்) ஆவது "ஆஸ்திகோ தர்மசீலச்ச—ஆஸ்திகோ தர்மசீலச்ச" என்னும்படி தர்ம அதர்மாதி ஸகல ப்ரதிபாதகமான ஸச்சாஸ்த்ரத்தை ப்ரமாணம் என்று அறிந்து, அந்த மர்யாதையிலே நின்று அப்படியே அதில் உக்தமான ஸதநுஷ்டாநங்களையும் அநுஷ்டித்துக்கொண்டு போருகிற ப்ராமாணிகரான ஆஸ்திகர் என்கை. அன்றிக்கே, அத்யாத்ம சாஸ்த்ரங்களான ஸ்ரீகீதாதிகளில் ஓதப்படுகிற உபாயாத்யவஸாய ரூபமான ப்ரபத்திமார்க்கத்தாலே வழிபட்டிருக்கிற ஆஸ்திகருமென்று ஆகவுமாம். "ஆஸ்திகனுய் இவ்வர்த்தத்தில் ருசிவிச்வாஸங்களை உடையனுய் உஜ்ஜீவித்தல் நாஸ்திகனுய் நசித்தலொழிய" என்றிறே அருளிச்செய்தது. "நெறியறியாதார்" என்றுதொடங்கி, "இறையுரைதேருதவரும்" என்ருரிறே. ஆகையால் ஸ்வதந்த்ரனுக்கு

ஆஸ்திகரை. அந்த ஆஸ்திகர்வாசி அறிந்து ஆதரித்துப்போரும் நெஞ்சே! அவர்களை நித்யமாக அநுவர்த்திக்கப்பார். "அநுவ்ரஜா ம்யஹம்நித்யம்—அநுவ்ரஜாம்யஹம் நித்யம்" என்கிறபடியே அவர்கள் அடியைத்தொடர்ந்து திரியப்பார். (நடுச்சொன்னவரை நாலுந் தொடர்) மத்யமபதோக்தரை. அதாவது: ப்ரதம பதத்தில் கழி யுண்கிற தேஹாத்மாபிமாநிகளான நாஸ்திகரையும் சரமபதத்தில் சழியுண்கிற விஷய சபலரான ஆஸ்திகநாஸ்திகரையும் போலன் றிக்கே, மத்யமபதோக்தமான ததேகோபாயத்வத்தையும் ததீய பாரதந்த்ர்யத்தையும் உடையராய் அவர்களில் அத்யந்தவிலக்ஷ ணமாயிறே ஆஸ்திகர்படி யிருப்பதென்கை. ஆகையாலே ப்ரதி கூலரானவர்களுடைய க்ஷணகால மாத்ரமான ஸஹவாஸம் ஸத் தையை நசிப்பிக்குமாபோலே இவர்களுடைய க்ஷணகால மாத்ர மான ஸம்ச்லேஷமும் ஸத்தாதாரகமாயிருக்கையாலும் ஸத்தாஸம் ருத்திக்கு ஹேதுவாகையாலும் ஸர்வகாலமும் அவர்களைப் பின் சென்று பிழைக்கப்பார். அவர்கள் நன்னெறியை யுடையராகை யாலே, நீயும் அந்நெறியிலே நின்று, உஜ்ஜீவிக்கும்படி அவரை நாடோறும் உபஸத்திபண்ணு. இத்தால் அநுகூல ஸஹவாஸமும் ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும் சொல்லிற்றாய்த்து.

௬௯-ம் பாட்டு.

நல்லமண முள்ளதொன்றை நண்ணியிருப்பதற்கு
நல்லமண முண்டாம் நலமதுபோல்—நல்ல
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக்
குணமதுவேயாம் சேர்த்திகொண்டு.

பதவுரை.

நல்ல மணமுள்ளது ஒன்றை-நல்ல வாசனையுள்ள தொருபொருளை, நண்ணியிருப்பதற்கு-கூடியிருப்பதற்கு, நல்ல மணம் உண்டாம்-நல்ல வா சனையுண்டாகும், நலம் அதுபோல்-ஸ்வபாவம்போல, நல்ல குணம் உடை யோர் தங்களுடன்-நல்ல குணமுடையவர்களுடனே, கூடியிருப்பார்க்கு—, சேர்த்திகொண்டு-சம்பந்தத்தினாலே, அதுவேகுணம் ஆம்-அந்த நல்லகுண மே யுண்டாகும்.

வ்யாக்யாநம்.

அறுபத்தொன்பதாம்பாட்டு.—கீழில் பாட்டில் உக்தமான அநுகூல ப்ரதிகூலரானவர்கள், ஸஹவாஸத்தால் பலிக்குமத்தை

ஸத்ருஷ்டாந்தமாக இரண்டு பாட்டாலே அருளிச்செய்கிறார். அதில் இப்பாட்டில் அநுகூல ஸஹவாஸத்தால் பலிக்குமதைச் சொல்லுகிறது. (நல்லமணம்) இத்யாதியால். நல்ல மணமாவது: அல்லாதவற்றினுடைய பொல்லாத மணத்தையும் போக்கும்படியான ஸுகந்தத்தை யுடைத்தாயிருப்ப தொன்று. அதாவது: "ఆమోదవత్కుసుమ సంవలనేన యద్వదామోదవాన్భవతి కేశభరోప్యగన్ధః-ஆமோதவத்குஸுமஸம்வலநேந யத்வதாமோதவாந்பவதி கேசபரோப்யகந்த:" என்கிறபடியே ச்லாக்யமான பரிமளத்தையுடைய புஷ்பத்தைச் சேர்ந்திருப்பதொரு கேசபாரத்துக்குத் தன்னுடைய ஸ்வபாவமான சிக்குநாற்றம்போய், "மணங்கள் நாறும் வார்குழலார்" என்னும்படி பரிமள ப்ராசுர்யமுண்டாம் ந்யாயம்போல். (நல்லகுணம்) இத்யாதி. "நறியநன்மலர்" என்கிறபடியே சேஷத்வஜ்ஞாந பரிமளத்தையுடையராய், ஜ்ஞாந பக்த்யாதி ஸத்குணயுக்தராயிருக்குமவர்கள் தங்களுடனே ஸஹவாஸம் பண்ணியிருப்பார்க்கு அவர்களுடைய ஸஹவாஸ ரூபமான ஸம்பந்தங்கொண்டு, அஜ்ஞாநகந்த மின்றிக்கே, அந்த ச்லாக்யமான குணமேஸித்திக்கும். "ஒருசெய் நிரம்ப நீர் நின்றால்" என்றுதொடங்கி, "உருவுதல் தீரக்கடவதாயிருக்கும்" என்றிறே அருளிச்செய்தது. ஆக இத்தால் இவனுக்குண்டான ஸத்குணங்களும் ஸத்துக்களுடைய ஸஹவாஸத்தாலே ஸம்பவிக்கு மென்றதாய்த்து. பாகவத ஸம்ச்லேஷம் பகவத் ஸம்ச்லேஷத்தையும் பிறப்பித்து, அபாகவத விச்லேஷத்தையும் பிறப்பித்து இவனையும் கரைமரஞ்சேர்த்துவிடும்" என்றிறே ஆச்சான்பிள்ளை யருளிச்செய்தருளிற்று. "సత్సఙ్గాద్భవతి హి సాధుతా ఖలానాం-ஸத்ஸங்காதபவதிஹி ஸாதுதாகிலாநாம்" என்னக்கடவதிறே.

எ0-ம் பாட்டு.

தீயகந்தமுள்ள தொன்றைச் சேர்ந்திருப்பதொன்றுக்குத்
தீயகந்தமேறுந் திறமதுபோல்—தீய
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக்
குணமதுவேயாம் செறிவுகொண்டு.

பதவுரை.

தீயகந்தம் உள்ளது ஒன்றை-துர்க்கந்தமுள்ள தொருபொருளை, சேர்ந்திருப்பதொன்றுக்கு-சேர்ந்திருப்ப தொருபொருளுக்கு, தீயகந்தம்-துர்க்கந்

தம், ஏறும்-வ்யாபிக்கும், திறம் அதுபோல்-தன்மையைப்போல், தீயகுண முடையோர் தங்களுடன் - துர்க்குண முடையவர்களுடனே, கூடியிருப் பார்க்கு-சேர்ந்திருப்பவர்களுக்கு, செறிவுகொண்டு - சம்பந்தங்கொண்டு, அதுவேகுணம் ஆம்-அந்தத் துர்க்குணமேயுண்டாகும்.

வ்யாக்யானம்.

எழுபதாம்பாட்டு.—இதில் பரித்யாஜ்யரான ப்ரதிகூல ஸஹ வாஸத்தால் பலிக்குமதத்தை அருளிச்செய்கிறார். (தீயகந்தம்) இத் யாதியால். அதாவது: ஹேயகந்தாஸ்பதமாயிருப்பதொரு ஸாநாதி பதார்த்தத்துக்குக் கிட்ட இருப்பதொரு ஸுகந்த பதார்த்தத்துக் கும் தத் ஸம்ஸர்க்கத்தாலே அதிலுண்டான ஸுகந்தம்போய் ஹேய கந்தமானது நாள்தோறும் அதிலே ஏறிவரும் ப்ரகாரம்போல என் கை. அதுதான் ஸ்வஸமீபமாத்ர ஸம்பந்தத்தால் அல்லாதவற்றினு டைய ஸத்கந்தத்தையும் ஸவாஸகமாகப்போக்கி, தத்கந்தத்தைத் தந்து, தன் படியாய் ஆக்குமதாயிருப்ப தொன்றிறே. (தீயகுணமு டையோர்) இத்யாதி. அப்படியே ஹேயகுண யுக்தராய் இருக்கு மவர்களுடன் ஸம்ஸர்க்கித்தவர்களுக்கும் அந்த ஹேயகுணமுண் டாம். "அவர்களுடைய பிணக்கைக்கொண்டு அபாகவத ஸம்ச்லே ஷத்தையும் பாகவத விச்லேஷத்தையும் பிறப்பித்தும் பகவத் விச் லேஷத்தையும் பிறப்பித்து இவனையும் முடித்துவிடும்" என்றிறே இதுக்கும் ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தது. "[illegible] [illegible] — ஸதாமஸேவ நாந்நித்ய மஸதாம்ச நிஷேவணாத் க்ஷீயந்தே சாதகச்யந்தி ஜ்ஞாந வைராக்ய பக்தய:" என்னக்கடவதிறே. ஆக இத்தால் அஸத்துக் களானவர்கள் ஸஹவாஸத்தாலே சேஷத்வாதி குணங்கள் வேரோ டேபோம் "அஸந்நேவ—அஸந்நேவ" என்னும்படியிறேயாவது.

எக-ம் பாட்டு.

முன்னோர் மொழிந்த முறை தப்பாமற்கேட்டுப்
பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே—தன்னெஞ்சில்
தோற்றினதே சொல்லி யிது சுத்தவுபதேசபர
வார்த்தை யென்பார் மூர்க்கராவார்.

பதவுரை.

மூர்க்கராவார்-மூர்க்கத்தன முடையரானவர்கள், முன்னோர்-பூர்வா சார்யர்கள், மொழிந்த-அருளிச்செய்த, முறை-க்ரமங்களை, தப்பாமல்-தவ

றாமல், கேட்டு-பெரியோரிடத்திற் கேட்டு, பின்-பிற்பாடு, ஓர்ந்து-ஆராய்ந்து பார்த்து, தாம்—, அதனை-அந்தக்ரமத்தை, பேசாதே-பிறருக்குச் சொல்லாமல், தன்னெஞ்சில்-தன்னுடைய மனசில், தோற்றினதே-தோன்றிய தொன்றையே, சொல்லி-பிறருக்குச்சொல்லி, இது-இப்படி நான் சொன்னது, சுத்த உபதேசபரவார்த்தை - சுத்தமான உபதேசபரமாக வந்த வார்த்தை, என்பார்-என்று சொல்லுவார்கள்.

வ்யாக்யாநம்.

எழுபத்தொன்றாம்பாட்டு.—“நாத்திகரும்” என்கிறபாட்டிலே “முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டு நடுச் சொன்னவரை நாளுந்தொடர்” என்று அவர்களைவிட்டு, பற்றும்படியை அருளிச்செய்து, “நல்ல மணம்,—தீயகந்தம்” என்கிற இரண்டு பாட்டாலும் அவர்கள் சேர்த்தியால் சேருமத்தை அருளிச்செய்து, இனிமேல், “முன்னோர்—பூருவாசாரியர்கள்” என்கிற இரண்டு பாட்டாலும் அநுகூல ப்ரதிகூலரான அவர்கள் உபதேசபேதங்களும் அவர்களில் ஸ்வரூப நாசகரான மூர்க்கருடைய ஸ்வரூப கதநத்தையும் ஸ்வரூபவர்த்தகரா யிருப்பாராலே உண்டான ஸ்வரூப லாபத்தையும் சொல்லித் தலைக்கட்டுகிறது. அதில் இப்பாட்டில், “முன்னவரும் பின்னவரும் மூர்க்கரெனவிட்டு” என்று சொன்ன மூர்க்கராவார் இன்னார் என்று சொல்லுகிறாராதல், அன்றிக்கே ஆந்தரவிரோதிகளாயிருக்கிற இவர்கள் படியையும் தனித்து அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றி அத்தையும் அருளிச்செய்கிறா ராதலாகவுமாம். (முன்னோர் மொழிந்த) இத்யாதி. “முன்னங்குரவோர் மொழிந்தவசநங்கள்” என்கிறபடியே நமக்கெல்லாம் ப்ரதமஜராயிருக்கிற பெரிய முதலியார் தொடக்கமான ஆசார்யர்கள் ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக அருளிச்செய்த திவ்ய ஸூக்திகளை. (மொழிந்த) என்றது மொழிந்தவை—என்றபடி. (முறைதப்பாமற்கேட்டு) அப்படி ஹிதரூபமான வசநங்களை சிஷ்யாசார்ய க்ரமங்களிலும் ஸம்ப்ரதாய க்ரமங்களிலும் ஒன்றும் தப்பாதபடி ஸதாசார்யர்கள் ஸந்நிதியிலே கேட்டு என்னுதல்; அன்றிக்கே, (முன்னோர் மொழிந்த முறைதப்பாமற் கேட்டு) என்று அவர்கள்தான் தந்தாம் ஆசார்ய விஷயங்களை “ఉత్తారయతిసంసారాత్తదుపాయప్లవేనతు—உத்தாரயதிஸம்ஸாராத்ததுபாயப்லவேநது” என்று உத்தாரகராகவும், “గురుమూర్తిస్థితస్సాక్షాద్భగవాన్పురుషోత్తమః—குருமூர்த்திஸ்திதாஸாக்ஷாத் பகவாந்புருஷோத்தம:”

என்று அவதார விசேஷமாகவும் ப்ரதிபத்திபண்ணி, தங்கள் சிஷ்யர்களுக்கும் அப்படியே அருளிச்செய்துகொண்டு போரும் க்ரமங்களில் ஒன்றும் தப்பாதபடி கேட்டு என்னுதல். (பின்னோர்ந்து) ச்ரவணாநந்தர ஸாபேக்ஷமான மநநத்தைப்பண்ணி, (தாமதனைப்பேசாதே) உபதேச கர்த்தாக்களாக வேண்டியிருக்கும் தாங்கள் அப்படியே ச்ரவணாதிகளாலே வைசத்யம் பிறந்திருப்பதான அர்த்தங்களை ச்ரோதாக்களானவர்களுக்குச் சொல்லாதே. இவர்கள் உபதேசிக்கும்படி சொல்லுகிறது. (தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி) ப்ரமாணாநுஸாரியன்றிக்கே ஏதத் விபரீதமாகத் தங்களுடைய வக்ர ஹ்ருதய உசிதமாயிருக்கும் அர்த்தத்தையே வாக்காலே சொல்லியென்னுதல். அன்றிக்கே, ஆசார்ய விஷயத்தில் ஊற்றமற்று, கேவலம் உபகாரமாத்ரத்தையே அங்கீகரித்திருக்கிற தங்களுடைய சுஷ்க ஹ்ருதயத்துக்கு ப்ரதிபாஸித்ததையே அர்த்தமென்றுசொல்லி யென்னுதலாகவுமாம். இப்படி துஷ்ட ஹ்ருதய தூஷிதமாயிருக்கும் அத்தையே உக்த்யாபாஸத்தாலே உபதேசித்தமாத்ரமன்றிக்கே, (இது சுத்தவுபதேச பரவார்த்தையென்பார்) ஆப்திக்குடலாக இந்த அர்த்தமானது சுத்தமான உபதேசமார்க்கத்தையுடையது என்பார்கள். தாங்கள் சொல்லுகிற அர்த்தம் அஸம்ப்ரதாயமா யிருக்கச்செய்தேயும் அத்தை விச்வஸிக்கைக்குடாக "இன்னருளால் வந்த உபதேசமார்க்கத்தை" என்னுமாபோலேயாய்த்து இவர்கள் தாங்கள் உபதேசித்துப் போருவது. இவர்கள் ஸர்வார்த்தங்களுக்கும் இப்படியேயிறே விபரீதங்களைக் கல்பிப்பது. இவர்கள் ஆபாஸோக்திகள் தான் பயிருக்குக் களைபோலவும் ஆதித்யனுக்கு மந்தேஹர்போலவும் ப்ரதிபாஸித்து ப்ரணஷ்டமாய்ப் போமதாயிருக்கும். ஆகையாலே தோற்றிமாயுமதொழிய நிலைநிற்பதொன்றன்றென்று தோற்றுகிறது. இதுதான் தோற்றினதே சொல்லிப்போந்தன்றே. இப்படி துருபதேஷ்டாக்கள் தான் ஆர் என்ன ஸ்வோபதேசாதிகளாலே முடித்துவிடும் (மூர்க்கர்) என்கிறார். முன்பின் பாராதவர்களிறே மூர்க்கராவார். இவர்கள தங்கள் ஸ்வரூபாநுரூபமான நாமம் இதுவாய்த்து. இப்படி துருபதேசம் பண்ணுவார், மூர்க்கராவார் என்னுதல், மூர்க்கராவார் இப்படி துருபதேசம் பண்ணிப்போருமவர்கள் என்னுதல். "முன்னோர் மொழிந்த" இத்யாதிக்கு "நம்மாசார்யர்கள் திரு

வுள்ளக்கருத்தை நன்றாக அறிந்து அதுக்குத் தகுதியாயிருந்துள்ள உக்த்யநுஷ்டாநங்களை ஆசரியாமல், தங்கள் மநஸ்ஸுக்குத்தோற்றினதே சொல்லும் துஸ்ஸ்வதந்த்ர ப்ரக்ருதிகளாய் ஸ்வாசார்ய விஷயத்தில் ஊற்றமற்றிருக்கும் கர்ப்பநிர்ப்பாக்யரான சுஷ்கஹ்ருதயர்க்கு நம் தர்சநத்தில் தாத்பர்யார்த்தமும் தத நுரூபமான அநுஷ்டாநமும் தெரியாதாகையாலே மேலெழுந்தவாரியான சிவப்புப்போலே இவ்வர்த்தம் நெஞ்சில் நிலைநில்லாது" என்றிறே அந்திமோபாய நிஷ்டையிலே அஸ்மத் பரமாசார்யரும் அருளிச்செய்தருளிற்று.

எஉ-ம் பாட்டு.

பூருவாசாரியர்கள் போதமநுட்டாநங்கள்
கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர்—தேறி
இருள்தருமா ஞாலத்தே யின்புற்றுவாழும்
தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து.

பதவுரை.

தெருள் தரும்-நல்ல ஞானத்தை யுபதேசிக்கும், மா-பெருமை பொருந்திய, தேசிகனை-ஆசார்யனை, நீர் சேர்ந்து-நீங்கள் ஆச்ரயித்து, பூருவாசாரியர்கள்-பூர்வாசார்யர்களுடைய, போதம்-ஞாநத்தையும், அநுட்டாநங்கள் - அநுஷ்டாநங்களையும், கூறுவார் - உள்ளபடியே சொல்லுமவர்களுடைய, வார்த்தைகளை—, கொண்டு-ஒப்புக்கொண்டு, தேறி-அதை உள்ளபடி யறிந்து, இருள் தரு மா ஞாலத்தே-அஜ்ஞாநாந்தகாரத்தைக் கொடுக்கும் பெரிய பூமியிலே, இன்பு உற்று-இன்பத்தையடைந்து, வாழும்-வாழ்வீர்களாக.

வ்யாக்யாநம்.

எழுபத்திரண்டாம்பாட்டு.—இப்படி "தன் குருவின் றாளிணைகள்" என்று தொடங்கி, சரமசேஷி சரணங்களில் ஸங்கம் இன்றியிலே இருக்குமவர்களுக்கு ப்ரதம சேஷியான ஈச்வரன் ப்ராப்ய ஸித்தியைப் பண்ணுகைகயாலே அத்தை அவர்கள் ப்ராபியார்கள் என்றும், இனி ஜ்ஞாநாநுஷ்டாந பரிபூர்ணனான ஸதாசார்யனுடைய ஸமாச்ரயணத்தாலே ஸ்ரீயப்பதியானவன் தானே ஸ்ரீவைகுண்டத்தைத் தந்தருளும் என்றும், இப்படியான பின்பு உஜ்ஜீவநாபேக்ஷை உடையவர்கள் எல்லாரும் தம் ஆசார்யர்கள் பாதத்திலே பக்தியைப் பண்ணுங்கோள், கரதலாமலகம்போலே உங்க

ளுக்குப் பரமபத ப்ராப்தியுண்டாமென்றும் இப்படி ஆசார்யன் செய்த உபகாரத்தை அநுஸந்தித்தால் அவனை விச்லேஷிக்க விரகில்லையென்றும் அவ்வளவுமன்றிக்கே அவனுடைய அசேஷசேஷ வ்ருத்தியிலும் அந்விதனான இவனுக்கு அவனைப்பிரிய ப்ரஸங்கமில்லையென்றும் இப்படி சிஷ்யாசார்யர்களான இருவரும் ஆத்மதேஹங்களை ரக்ஷித்துக்கொண்டுபோரும் படியையும் அதிலும் சிஷ்யனானவன், ப்ராப்ய தேசத்தில் விருப்பமற்று, அவன் திருவடிகளில் கைங்கர்யமே நிரதிசய புருஷார்த்தம் என்று ஆதரித்துப் போரும்படியையும் அதுக்கு நிதாசநபூதரான அநுஷ்டாதாக்களையும் இப்படி ஆசார்யர்கள் ஆதரித்துப்போரும் அநுஷ்டாநத்தில அஜ்ஞராயிருக்குமவர்களுடைய உக்தி, ப்ரமஹேதுவாயிருக்குமாகையால் தந்நிவர்த்தகமான பூர்வர்களுடைய அநுஷ்டாநமே ஆதரணீயமென்னுமத்தையும் இப்படி அநுகூல ப்ரதிகூலராக உக்தரான இவர்கள், க்ருபணமூகேந பரிக்ராஹ்யர் பரித்யாஜ்யர் என்னுமத்தையும் இவர்கள் ஸஹவாஸத்தால் பலிக்கும் ஸத்குண அஸத்குணங்களையும் ஏவம்பூதரான ப்ரதிகூலர், துருபதேஷ்டாக்களான மூர்க்கர் என்னுமத்தையும் அருளிச்செய்து, இதில் அநுகூலரான ஆசார்ய ப்ரதந்த்ரருடைய உபதேசத்தாலே ஆசார்யாபிமாநமாகிற மஹாபலம் ஸித்தித்து வாழும்படியையும் அருளிச்செய்யாநின்றுகொண்டு, வசநபூஷண தாத்பர்யார்த்தங்களை ஸங்க்ரஹித்து அருளிச்செய்கிற இவர், அடியிலே "பின்னவருங் கற்க உபதேசமாய்ப் பேசுகின்றேன்" என்று உபக்ரமித்து, அந்தப் பரோபதேசத்தை இவ்வளவாக நடத்தி அத்தை உபஸம்ஹரித்தருளுவராய், உஜ்ஜீவநாபேக்ஷையுடையவர்களைக் குறித்து, பூர்வாசார்யர்களுடைய ஜ்ஞாநாநுஷ்டாந ப்ரதிபாதகங்களான ஆப்தவசநத்தால விச்வஸித்தவராய், ஜ்ஞாநப்ரதாநாதி மூகேந ரக்ஷித்துப்போரும் பெருமதிப்பனான ஆசார்யனை ஆச்ரயித்து, அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்திலே ஆநந்தத்தை யுடையராய் நீங்கள் வாழுங்கோள் என்று தலைக்கட்டியருளுகிறார். வாழுகைக்கு அடி சொல்லுகிறது. (பூருவாசாரியர்கள் போதமநுட்டாநங்கள் கூறுவார் வார்த்தைகளைக்கொண்டு) என்று. அதாவது: தத்வயாதாத்ம்ய வித்தமரான ஸ்ரீமந்நாதமுனிகள் தொடக்கமாக இவ்வருகுள்ள பூர்வாசார்யர்களுடைய நிர்மலமாயிருப்பதான

யாதாத்ம்ய ஜ்ஞாநமென்ன, தத்நுரூபமான மறுவற்ற அவர்கள் அநுஷ்டாநங்களென்ன, இவற்றை ஆசார்ய ப்ராப்திக்கு ஹேது வாக ஹிதம் சொல்லுமவர்களுடைய வார்த்தைகளைக் கொண்டு, (நீர்தேறி) சாஸ்த்ர ஜ்ஞாநம்போலே புத்தேச்சலந காரணமாயி ராதே, சித்தநைர்மல்யத்தைப் பண்ணுமதாய் ஸுகரமாயிருப்ப தான வார்த்தைகளைக்கொண்டு, அதாவது: கொடியைக் கொள் கொம்பிலே துவக்கும்போது சுள்ளிக்கால் வேண்டுமாபோலே ஆசார்ய அந்வயத்துக்கும் இதுவேணுமென்று அறிந்து, இத்தை ஹிதரூபமாகக் கொண்டுஎன்கை. (போதமநுட்டாநம்) என்றது: ஜ்ஞாநமநுஷ்டாநம் என்றபடி. (ஃ) போதத்தைப் போதமென்கி றது. (கூறுவார்வார்த்தைகளைக்கொண்டு நீர்தேறி) சாஸ்த்ரங்களை யெல்லாம் வரியடைவே கற்றாலும் அதில் ஆஸ்திகராய்த் தெளிவு பிறந்து, உஜ்ஜீவிக்கை அரிதாயிருக்கும். அந்த சாஸ்த்ரார்த்தங்களை அநுஷ்டிப்பாரைப் பின் சென்றிருக்குமவர்களுடைய வார்த்தை ருசிவிச்வாஸங்களை யுடையராய்த் தெளிவுபிறந்து, உஜ்ஜீவிக்கை க்கு உடலாயிருக்கும். ஆகையால் உஜ்ஜீவிக்க வேணுமென்கிற நீங் கள் அவர்கள் வார்த்தைகளைக்கேட்டு, "[illegible] — அதாரம ப்ரஸந்நாத்மா ச்ருத்வா வாயுஸுதஸ் யஹா:" என்கிறபடியே ஆச்ரயணத்துக்கு முன்பே ஸத்தையுடைய ராய் அந்த ஸத்தாஸம்ருத்திகளுக்கு உறுப்பாக ஸதாசார்ய ஸமாச் ரயணத்தைப்பண்ணி, ததாச்ரயண பலத்தையும் இங்கே அநுபவி யுங்கோள். (நீர்தேறி) கலங்கின நீர் தெளியுமாபோலே அசித் ஸம்ஸர்க்கத்தாலே கலுஷமநாக்களாய் இருக்கிற நீங்கள். மந்த் ராக்ர்யமான அவர்கள் வார்த்தையாகிற தேற்றாம்விரையாலே தேற்றப்பட்ட தெளிவையுடையராய், அந்தத் தெளிவுக்கு அநு குணமாக ஆசார்ய ஸமாச்ரயணத்தைப் பண்ணி, அத்தால் வரக் கடவ பலத்தையும் ப்ரத்யக்ஷமாக புஜியுங்கோள். நீங்கள் அவர் கள் போதத்தாலே தேறி, அநுஷ்டாநத்தாலே தேசிகனைச் சேருங் கோள். "[illegible] — தமேவகுருமாப்நுயாத்" என்னு மாபோலே. ஆகையால் அவர்கள் அத்யந்த பாரதந்த்ரய ஜ்ஞாநத் தையும் அடியாக ஆசார்ய அநுவர்த்தநாதிகளையும் பண்ணிப் போந்தவர்கள் அநுஷ்டாநங்களையும் கேட்டால், மந:ப்ரஸாத முண்டாய் அடியாக ஆசார்ய ஸமாச்ரயணத்தையும் பண்ணி,

தத் ப்ராப்தி பலத்தை லபிக்கலாமாயிருக்குமே இவர்களுக்கு. இனி இப்படி ஆப்தவசனாபிஜ்ஞராய்க்கொண்டு ஆசார்ய ஸமாச்ரயணம் பண்ணுமவர்கள், பெரும்பேற்றைச் சொல்லுகிறது. (தெருள்தருமாதேசிகனைச் சேர்ந்து, இருள்தருமாஞாலத்தே நீர் இன்புற்றுவாழும்) என்று. அதாவது : ஜ்ஞாநாதி பரிபூர்ணனுகை யாலே ஜ்ஞாநப்ரதாநாதிகளைப்பண்ணி ரக்ஷிக்கும் மஹோபகாரகனை ஆசார்யனை ஆச்ரயித்து, அந்த ராஜகுலமாஹாத்ம்யத்தாலே அஜ்ஞாநாவஹமுமாய் "இல்லை கண்டீரின்பம்" என்னும்படி ஸுக லேசரஹிதமான ஸம்ஸாரத்திலே "தெளிவிசும்பு திருநாடு" ஆன "நலமந்த மில்லதோர் நாட்டில்" உண்டான "அந்தமில் பேரின்பம்" ஆகிற நிரதிசய ஸுக ரூபமான ஆநந்தத்தையுடையராய் நீங்கள் வாழுங்கோளென்கை. (நீர்வாழும்) "பெரியார்க்காட் பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறே" என்கிறபடியே ஆசார்ய கைங்கர்யமாகிற பெறுதற்கரிய பேற்றை "அவனிங்காடு தன்னி லிருக்குநாள்" செய்து, அந்தக்கைங்கர்யரூப ஸம்பத்தைப்பெற்று, அதில் ரஸிகராய் வாழுங்கோள். ஸம்பத்தடியாகவிறே வாழுவது. (இருள்தருமா ஞாலத்தே யின்புற்றுவாழும்) தேசாந்தரே தேஹாந்தரேவாயன்றிக்கே, "இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர்" என்கிறபடியே இந்தத் தேசத்திலே இந்தத் தேஹத்தோடே யிருந்து, ஆசார்யாபிமாநமாகிற நிலைநின்ற ஸம்பத்தைப்பெற்று வாழுங்கோள். "ஸௌதர்ஶநம்—மோதத்வம்" என்னக்கடவதிறே. "பின் னவருங்கற்க வுபதேசமாய்ப் பேசுகின்றேன்" என்கிற இவருடைய வார்த்தை "நீர்வாழும்" என்கிற வாழ்வோடே தலைக்கட் டிற்று. ஆகையால் ஆசார்ய ஸமாச்ரயணம் என்றும் வாழ்வு என்றும் இரண்டில்லையிறே. இத்தால் "ఆచార్యస్యప్రసాదేన మమసర్వ మభీప్సితమ్ ప్రాప్నుయామీతి విశ్వాసో యస్యాస్తి ససుఖీభవేత్—ஆசார்யஸ்ய ப்ரஸாதேந மமஸர்வமபீப்ஸிதம் ப்ராப்நுயாமீதி விச்வாஸோ யஸ்யாஸ்தி ஸஸுகீபவேத்" என்கிற ப்ரமாணார்த்தம் சொல்லப்பட்டதாய்த்து.

௭௩-ம் பாட்டு.

இந்த வுபதேசரத்தின மாலைதன்னைச்
சிந்தைதன்னில் நாளும் சிந்திப்பார்—எந்தை
எதிராச ரின்னருளுக் கென்று மிலக்காகிச்
சதிராக வாழ்ந்திடுவர் தாம்.

பதவுரை.

இந்த உபதேசரத்தினமாலை தன்னை-இந்த உபதேசரத்நமாலையை, சிந்தைதன்னில் - தங்கள் மனத்தில், நாளும்-எப்பொழுதும், சிந்திப்பார் தாம்-மநநம் பண்ணுமவர்கள், எந்தை-எமக்கு ஸ்வாமியான, எதிராசர்-ஸ்ரீபாஷ்யகாரருடைய, இன்-இனிமையான, அருளுக்கு-க்ருபைக்கு, என்றும்-எக்காலத்திலும், இலக்கு ஆகி-பாத்ரபூதராய், சதிராக - சிறப்பாக, வாழ்ந்திடுவர்-வாழ்ந்திருப்பார்கள்.

வ்யாக்யாநம்.

எழுபத்துமூன்றாம்பாட்டு. — நிகமத்தில் ஸத்ஸம்ப்ரதாய பரம்பரா ப்ராப்தமான ஸகலார்த்தங்களையும் ஸர்வர்க்கும் உபதேசிக்கக்கடவோமென்று உபக்ரமித்து அப்படியே அதடையவும் நடந்துபோந்த இப்ப்ரபந்தத்தை நிகமித்தருளி இப்ப்ரபந்தாந்வயமுடையவர்களுடைய பலத்தையும் அருளிச்செய்து, தலைக்கட்டியருளுகிறார். (இந்த வுபதேசரத்தினமாலை தன்னை) என்று தொடங்கி. அதாவது: ஸகல ப்ரபந்த வ்யாவ்ருத்தமான இந்த உபதேசரத்தினமாலையாகிற ப்ரபந்தந்தன்னை மநஸ்ஸிலே ஸர்வகாலமும் மநநம் பண்ணுமவர்கள், நமக்குச் சேஷியான எம்பெருமானாருடைய நிர்ஹேதுக க்ருபைக்கு ஸர்வகாலத்திலும் விஷயமாய் வ்யாவ்ருத்தமாக பகவதநுபவ கைங்கர்யாதிகளைப்பெற்று, ஸுகிக்கப்பெறுவர் என்கிறார். (இந்த வுபதேசரத்தின மாலை தன்னை) கீழ் அடங்கலும் ஸிம்ஹாவலோகந ந்யாயமாகக் கடாக்ஷித்து, இந்த என்கிறார். முகமறிந்தவன் கோத்த முத்துமாலை போலே இதுவும் ஒரு ரத்நமாலை இருந்தபடியே என்று தமக்கு ஆதாணியமாக இருக்கிறபடி. இதுதான் உபதேசார்த்தங்களான ரத்நங்களாலே செய்யப்பட்டதா யிருக்கை. “மாணிக்கமாலை நவரத்நமாலை” என்னுமாபோல இதுக்கு “உபதேசரத்நமாலை” யென்று நிரூபகமாயிருக்கிறது. (உபதேசரத்தினமாலை) என்கையாலே உபதேசபரம்பரா ப்ராப்தங்களாய் வந்த அர்த்தவிசேஷங்களாகையாலே தொடையுண்டிருப்பதாயிருக்கை. மாலைதான் தொடையுண்கிறவற்றில் ஒன்று குறைந்தாலும் பேரிழவாயிருக்கும். அப்படியே இதுவும், “குருமாமணி” யான புருஷரத்நங்களினாலே கோப்புண்டதாயிருக்கும். அதாவது: “நம்பெருமாள், நம்மாழ்வார்” என்றுதொடங்கி, திருவாய்மொழிப்பிள்ளை யளவாக ஸத்ஸம்ப்ரதாயத்தில் ஒன்றும் நழுவுதலின்றிக்கே நன்றாகநடந்து போந்த

தாயிருக்கை. "திருவருள்மால்" என்றுதொடங்கி, "திருமலையாழ்வார்பதங்கள்முன் பென்னுட்சேர்ந்தனவே" என்றும், "లక్ష్మీనాథసమారంభాం—லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்றுதொடங்கி "అస్మదాచార్యపర్యన్తాంవన్దేగురుపరంపరాం—அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்" என்றும் சொல்லக்கடவதிறே. இதுதான் மாலாலக்ஷணங்களை யுடைத்தாயிருக்குமென்னுமது இவர் சேர்த்தருளின சேர்வையிலே காணலாயிருக்குமிறே. அதுதான் ஆழ்வார்கள் பதின்மரையும் ஒருகையாகவும் ஆண்டாள் மதுரகவியாழ்வார், யதிராசராமிவர்களை நடுநாயகமாகவும் "நாதமுனி முதலான நந்தேசிகர்" என்று தமக்கு முன்புண்டான ஆசார்யர்கள் எல்லாரையும் ஒரு கையாகவும் இப்படி எல்லாரையும் சேர்த்துப்பிடித்து, ஒரு மாலையாம்படியிறே செய்தருளிற்று. ஏவம்வித வைலக்ஷண்யத்தையுடைய இந்த மாலையை (சிந்தைதன்னில் நாளும் சிந்திப்பார்) மாலையானது மார்புக்கு அலங்காரமாய் தரிக்கப்படுமதாயிருக்கும். "மார்வத்துமாலை" என்னக்கடவதிறே. "உபதேசரத்தினமாலை தன்னை தந்நெஞ்சு தன்னில் தரிப்பவர்" என்றும், "ఉపదేశరత్నమాలాం ఇమాం దధతియే హృదయే సన్నిత్యం—உபதேசரத்நமாலாமிமாம் ததியோஹ்ருதயேநித்யம்" என்றும் சொல்லுகிறபடியே இதுவும் மநஸ்ஸுக்கு அலங்காரமாய் தரிக்கப்படுமதாயிருக்கும். மார்பும் மநஸ்ஸும் சேர்ந்திறே யிருப்பது. (மாலைதன்னைச் சிந்தை தன்னில் நாளும் சிந்திப்பார்) இதுதான் பெருவிலையனைக மதிக்கப்படுமதான ரத்நமாலையாகையாலே இத்தை வாடாப் பூமாலைபோலே நாடோறும் பூண்டிருக்கலாயிருக்கும். இப்படி விலக்ஷண ஜநஹ்ருத்யமான இவ்வர்த்தம் மநோஹரமாயிருக்கையாலே இத்தை ஸர்வகாலத்திலும் மநநம்பண்ணும்படியாயிறே யிருப்பது. "ஜப்தவ்யம் குருபரம்பரையும் த்வயமும்" என்னக்கடவதிறே. இப்படி மநநம்பண்ணுவார்க்கு ஒரு பலம் வேணுமே. அந்தப்பலத்தை இன்னது என்று உபபாதிக்கிறதுமேல். (எந்தை எதிராச ரின்னருளுக் கென்று மிலக்காகிச் சதிராக வாழ்ந்திடுவார் தாம்) என்று அதாவது: "అస్మద్గురోర్భగవతో స్య దయైకసిన్ధోః – அஸ்மத் குரோர்பகவதோஸ்ய தயைகஸிந்தோ:" என்கிறபடியே ஸர்வாத்மாக்களுக்கும் ப்ராப்தி சொல்லும்படியான ஆப்தியையுடையரான எம்பெருமானாருடைய அஹேதுகமான

அபார காருண்யத்துக்குப் பாத்ரபூதராய் வாழப்பெறுவர்கள். அதாவது: "வளர்த்த இதத்தாய்" என்னும்படி "இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்" தருளினவராகையாலே தர்சன தாத்பர்யார்த்தங்களை யெல்லாம் ப்ரதிபாதிக்குமதான இப்ப்ரபந்தாந்வயமுடையவர்களுக்கும் பலப்ரதர் இவர் என்கை. இது தான் ஆழ்வார்கள் அடியாயிருக்கையாலே இதின் வாசியறிந்து பரிபாலிப்பார் இவரிறே. இத்தை இவர்கள் நாளும் சிந்திக்கையாலே அருளும் இவர்பக்கல் என்றும் உண்டாயிருக்கிறபடி. (எதிராசரின்னருளுக் சென்றுமிலக்காகி) "அருளாழியம்மான்" ஆன ஈச்வரன் அருள்மறுத்த காலத்திலும் "உன்னருளின்கணின்றிப்புகலொன்றுமில்லை" என்றும் "యతిరాజ దయామ్బురాశే తస్మాదనన్యశరణం-யதிராஜ தயாம்புராசே தஸ்மாதநந்ய சரணம்" என்றும் ஓதுங்கும்படி புகலாயிருக்கிற அருளுக்கு. (என்றுமிலக்காகி) எந்தையான முறையாலே மாறுநிருக்கிற அவருடைய கருணைகடாக்ஷத்துக்கு நித்யலக்ஷ்யபூதராய். (சதிராகவாழ்ந்திடுவர்) "மாசதிர்" ஆன பகவந் நிர்ஹேதுக க்ருபையைப்பெற்று வாழுமதிலும் சதிராகவாழ்ந்திடுவர். "ஆளுரியனாய் அடியேன் சதிர்த்தேனின்றே" என்றிறே அபிமாநநிஷ்டர் வார்த்தையிருப்பது. (சதிராகவாழுகை) யாவது: ஸ்வதந்த்ரனான ஈச்வரனுடைய க்ருபைக்கு விஷயமானவர்களைப்போலே "கலிவாணின்னை மெண்ணுகின்றாய், ஆற்றங்கரைவாழ் மரம்போலஞ்சுகின்றேன், இடையனெறிந்த மரமேயொத்திராமே, யடைய வருளாய்" என்று பயாபயங்களோடே வர்த்திக்கை யன்றிக்கே இவருடைய அபிமாநத்துக்கு விஷயமானவர்கள் த்ருஷ்டாத்ருஷ்டங்கள் இரண்டிலும் ஒரு கரைச்சலற்று, மார்விலே கைவைத்துக்கொண்டு, "నిర్భరోనిర్భయోస్మి-நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" என்கிறபடியே நிர்ப்பரராய், "வையம்மன்னி வீற்றிருந்து" என்கிறபடியே, வ்யாவ்ருத்தராய் ஞாலம் புகழும்படி இருள்தருமா ஞாலத்திலே இன்பமுற்றுவாழும் பேறு பெறுவர்கள். அதாவது: "கந்தலேமிசையே பொங்கிய கீர்த்தி யிராமாநுசனடிப் பூமன்னவே" என்கிறபடியே ஜீயராலே ரத்நமாலை பூட்டப்பட்டவர்கள், எம்பெருமானாராலே பூமுடிசூட்டப்பெற்று, வாழப்பெறுவர்கள். வாழ்வுக்கு அடியாவது முடியும் மாலையுமிறே "அடிசூடுமரசு" என்னுமா

போலே. "உன்பதயுகமாம் ஏர்கொண்ட வீடு" என்றிறே தந்நிஷ்டருடைய ப்ராப்ய வேஷமிருப்பது. "శ్రీమత్పాదారవింద యుగళం శిరసికృతం ధ్యాత్వామృత సాగరాన్తర్నిమగ్న స్సర్వావయవ స్సుఖమాసీత— ஸ்ரீமத்பாதாரவிந்தயுகளம் சிரஸிக்ருதம் த்யாத்வாம்ருத ஸாகராந்தர் நிமக்நஸ்ஸர்வாவயவஸ்ஸுகமாஸீத" என்றிறே அவருடைய ப்ராப்யமிருப்பது. அதின் எல்லை நிலமிறே இது. "ராமாநுசன் சரணாரவிந்தம் நாம் மன்னிவாழ, உன்னிணைமலர்த்தாள் என்றனக்கும் அது" என்னக்கடவதிறே. இத்தால் எம்பெருமானாருடைய க்ருபைக்கு இலக்கு ஆனவர்கள், "உன்றொண்டர்கட்கே அன்புற்றிருக்கும்படி" என்கிறபடியே இவர்க்குப் பாதச்சாயாதிகள்போலே பாரதந்த்ர்ராகையாலே அவருடைய திருவடிகளான "தன்னாரியனுக்கு இங்கு அவன் தன்னிலிருக்கும்நாள்" ஆன அடிமைகள் செய்து வாழப்பெறுவர்கள் என்றபடி. "தன்னையுற்றாட் செய்யும் தன்மையினோர் மன்னு தாமரைத்தாள் தன்னையுற்றாட் செய்ய விராமாநுசன் தன்றகவால், என்னையுற்றான்" என்னக்கடவதிறே. "அல்லாதபோது ப்ராப்ய ப்ராபகங்களுக்கு ஐக்யமில்லை" என்றிறே யருளிச்செய்தது. "త్వద్దాసదాసగణనా చరమావధౌ యస్తద్దాసతైకరసతావిరతా మమాస్తు—த்வத்தாஸ தாஸகணநா சரமாவதௌயஸ்தத்தாஸதைகரஸதா விரதாமமாஸ்து" என்றிறே, ஜீயர் தாமும் ப்ரார்த்தித்தருளிற்று. இவர்தாம் "திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால் வாழும் மணவாளமாமுனிவ" ரிறே. அன்றிக்கே, "பரந்தாமமென்னுந்திவந்தரும்" என்றும், "தன்னையெய்தினார்க்குத் தானங்கொடுப்பது தன்றகவென்னுஞ் சரண்கொடுத்தே" என்றும் சொல்லுகிறபடியே அவருடைய ப்ரஸாதமடியாக ப்ராப்ய பூமியான பரமபதத்திலே பகவதநுபவ கைங்கர்யங்களைப் பெற்று, ஸ்வரூபாநுரூபமாக வாழப்பெறுவர்கள் என்றுமாம். "பாவளருந் தமிழ்மாலை பண்ணிய நூலிவையைந்து மைந்தும் வல்லார், பூவளருந்திருமகளா லருள்பெற்றுப் பொன்னுலகிற் பொலிவர் தாமே" என்னுமாபோலே "ஞான மனுட்டானம்" என்று தொடங்கி, "தானே வைகுந்தந்தரும்" என்றும் "உய்ய நினைவுண்டாகில்" என்று தொடங்கி, "பரமபதமுங்களுக்காம்" என்றிறே ஆசார்யாபிமாந நிஷ்டருடைய ப்ராப்ய வேஷத்தை நிஷ்கர்ஷித்து அருளிச் செய்ததும். "மாமலராள்கோன் மடியில்வைத்துகக்கும் வாழ்வு

நமக்கு எதிராசனருளும் வாழ்வே" என்றும் தாமும் மநோரதித்தருளினாரிறே. (வாழ்ந்திடுவர் தாம்) பகவதபிமாந நிஷ்டராயிருக்குமவர்களில், வ்யாவ்ருத்தராயிருக்கும் தாங்கள் (எந்தையெதிராச ரின்னருளுக் கிலக்காகி யென்றும் வாழ்ந்திடுவர்) இங்கு ஒருகால் எம்பெருமானாருடைய அருளுக்கு இலக்கானவர்கள் அங்கே நித்ய கைங்கர்ய நிரதராய், வாழப்பெறுவர்கள். "அருளாலேயடியேனை யபிமாநித்தருளி, யனவரதமடிமைகொள்ள" என்னக்கடவதிறே. (என்றும் சதிராகவாழ்ந்திடுவர்) "అత్రపరత్ర చాపి-அத்ரபரத்ரசாபி" ப்படியே அங்கே போனாலும் அவர் உகந்தவிஷயம் என்று அவனை அநுபவிக்குமதொழியத் தங்கள் உகப்புக் கீடாக அநுபவிக்கிற இளப்பமின்றிக்கே யிருப்பார்கள். (வாழ்ந்திடுவர்) வாழ்க்கையில் ஸம்சயமில்லை. "నిస్సంశయస్తు తద్భక్త పరిచర్యారతాత్మనామ్-நிஸ்ஸம்சயஸ்து தத்பக்த பரிசர்யாரதாத்மநாம்" என்னக்கடவதிறே. (என்றும் சதிராகவாழ்ந்திடுவர்) இவர் க்ருபாபலமாகப் "பல்லாண்டென்று பராமத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்கிறபடியே காலதத்வமுள்ளதனையும் ஸ்வரூபாநுரூபமான மங்களாசாஸந ரூப கைங்கர்யத்திலே அந்வயித்து வாழப்பெறுவர்கள். "ஆளுமாளார்" என்று இருக்கிறவனுடைய தனிமையைத் தீர்க்கைக்காக வாய்த்து, பாஷ்யகாரரும் இவரும் உபதேசிப்பது" என்றிறே அருளிச்செய்தது. ஆகையால் "திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்குகை" இவர்க்குப் பணியிறே. இதிறே ஸாக்ஷாத் பலமாயிருப்பது. ஆக இப்ப்ரபந்த ஆரம்பத்திலே "எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால்", என்று உபக்ரமித்ததற்குச்சேர (எந்தை எதிராச ரின்னருளுக் கென்றுமிலக்காகி) என்று பலவேளையிலும் அப்படியே அருளிச்செய்து தலைக்கட்டியருளினாராய்த்து.

### எறும்பியப்பா அருளிச்செய்தது.

மன்னுயிர்கா ளிங்கே மணவாளமாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டி னமானவனு நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.

பதவுரை.

மன்-நிலைபெற்ற, உயிர்காள்-சேதநர்களே, இங்கே-இவ்வுலகத்திலே, மணவாளமாமுனியன்-ஸ்ரீமணவாளமாமுனிகளுடைய, பொன்-அழகிய, அடியாம்-திருவடிகளாகிய, செங்கமலப்போதுகளை-செந்தாமரை மலர்களை, உன்னி-சிந்தித்து, சிரத்தாலே-நமது தலையாலே, தீண்டின்-தீண்டப்பெற்றால், அமானவனும்-அமாநவ புருஷரும், நம்மை—,கரத்தாலே-தமது ஸ்ரீஹஸ்தத்தாலே, தீண்டல்-தீண்டுதல், கடன்-அவர்கடமையேயாகும்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

శఠరిపుపాదపద్మ భృఙ్గో వరవరయోగి కథామృతాన్తరఙ్గః
అకథయ దుపదేశ రత్నమాలా వివృతి సుధాం జగదార్య యోగివర్యః.

சடரிபுபாதபத்மப்ருங்கோ வரவரயோகிகதாம்ருதாந்தரங்க:
அகதயதுபதேசரத்நமாலாவிவ்ருதிஸுதாம்ஜகதார்யயோகிவர்ய:

பிள்ளைலோகார்ய ஜீயர் திருவடிகளே சரணம்.

## உபதேசரத்தினமாலை

முற்றிற்று.